ஆகஸ்டு
செப்டம்பர் 2008
விலை ரூ. 20

# கவிதாசரண்

இதழாய் ஓர் எழுத்தியக்கம்



எனக்கு உன்னைப் பார்க்க வேண்டும்
உனக்கு என்னைத் தவிர்க்க வேண்டும்
இது போதாதா நாம் இருவரும்
இடம்மாறித் தவிக்கிறோம் என்பதற்கு
எழுபத்துநான்கு வயதில்
உடலை எருவாக்கி
உயிரின் அலைக்கழிப்பு
முள்முனையாய் கண்மறைவில்
முடிவற்று அருவுகிறது
இதற்கு ஒரு தீர்வு உண்டா
இடைவழி ஏதேனும்
இருக்குமா தென்படுமா
என்னை உன்னிடமிருந்தும்
உன்னை என்னிடமிருந்தும்
எப்படி மீட்டுக்கொள்வது
மீட்டு என்ன செய்யப்போகிறோம்
முடியும் போது எல்லாம்
தனித்தனிதான் எனில்
இருக்கும் போதுக்கு மாத்திரமா
இந்தக் குருதிக் கசிவு
இப்போது என் அம்மா இல்லை
நீ மட்டும்தான்
ஒன்று கேட்க மறந்தேன்
நான் இருக்கிறேன்
இந்த வலியை நேசித்து
நீயும் இருப்பாய் அல்லவா
நான் இல்லாதிருக்கும் வரை

## சிறப்பிதழ்

வீ.அரசு ● ஜெ.அரங்கராஜ் ● எக்ஸ்ரே மாணிக்கம் ● காஜா மடா ஹமீது
குமரன்தாஸ் ● அரச முருகுபாண்டியன் ● மகிழரசன் ● விந்தன் ● தெ.வெற்றிச்செல்வன்

# ஓவியர் ஆதிமூலம்: பயணங்கள்

(1938 – 2008)

**வீ.அரசு**



தமிழ்ச் சமூகத்தின் இயங்குதிசையும் இச்சமூகத்தில் உருப்பெற்று வரும் நிகழ்வுகளும் ஏதோவொரு புள்ளியில் சந்திப்பதை நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் காலனியம் பல்வேறு புதிய நிறுவனங்களை உருவாக்கியது. இவ்வகையில் சென்னையில் உருவாக்கப்பட்ட கலைப்பள்ளிக்கு முக்கியமான இடமுண்டு. இப்பள்ளியின் ஊடாக உருவான ஆளுமைகள், குறிப்பாகத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள், சிற்பம் மற்றும் ஓவியத் துறையில் உலகம் மதிக்கத்தக்க ஆளுமைகளாக உருப்பெற்றனர். சிற்பி தனபால் தொடங்கி இம்மரபு தமிழில் செழுமையாக உருப்பெற்று வருவதை நாம் அறிவோம். சிற்பி தனபால் அவர்களின் தொடர்ச்சியாக ஆதிமூலத்தை நாம் புரிந்துகொள்ள முடியும். ஆதிமூலம் என்ற ஆளுமை உருவாக்கம் என்பது தமிழ்ச் சமூகத்திற்குக் கிடைத்த அரிய கொடை. மிகச் சாதாரண குடும்பப் பின்புலத்திலிருந்து இவ்வளவு செழுமையான ஆளுமை உருவாக்கம் நடைபெற்றமை மற்றும் அவரது பயணங்கள் ஆகியவை குறித்து அவரது மறைவையொட்டி நாம் மீள்நினைவாக மீண்டும் மீண்டும் நினைக்க வேண்டிய தேவையுண்டு.

தமிழ்ச் சமூக ஆளுமை உருவாக்கத்தில் இருபதாம் நூற்றாண்டில் தமிழ்க் கவிதைக்கு பாரதி ஒரு குறியீடு. தமிழ்ப் புனைகதைக்குப் புதுமைப்பித்தன் ஒரு குறியீடு. இவ்வகையில், ஓவியக் கலைக்கு ஆதிமூலம் ஒரு குறியீடு. பாரதி, புதுமைப்பித்தன், ஆதிமூலம் என்ற வரிசை இளங்கோ, வள்ளுவன், கம்பன் என்ற வரிசையை ஒத்தது. இவ்வொப்பீட்டின் ஊடாக ஆதிமூலம் எனும் ஆளுமையை நாம் புரிந்துகொள்ள முடியும். இவர் நமக்களித்துச் சென்றுள்ள ஓவியங்களினூடாகப் பயணித்த உலகத்திற்கும் தமிழ்ச் சமூக இயக்கத்திற்குமான உறவை நாம் புரிந்துகொள்ள முடிகிறது. அந்தரத்தில் இயங்காது, மண்ணோடு மண்ணாக இழைந்திருந்த இவரது கலைவாழ்வே தமிழ்ச் சமூகத்தின் கலை வரலாறாகவும் அமையக் கூடும்.



இளமை முதல் இருந்த ஈடுபாடுகள், தனபால், சந்தானராஜ் ஆகிய பிற கலைஞர்களால் கூர்மைப்படுத்தப்படும் வாய்ப்பு சென்னைக் கலைப்பள்ளியில் ஆதிமூலத்திற்கு வாய்த்தது. மாணவனாக இருந்தபோது, கலைஞர்களுக்கு இயல்பாக உருப்பெறும் தாக்கங்களிலிருந்து ஆதிமூலம் விடுபட்டவர் என்று கூற முடியாது. இதனால்தான் அவரைத் தமிழகத்தின் ரெம்பாராண்ட், தமிழகத்தின் பிக்காசோ என்றெல்லாம் அழைக்கிறார்கள். பிக்காசோ கோடுகளை நமது கோடுகளாக மாற்றியவர் ஆதிமூலம். பிக்காசோவின் ஆளுமையின் வளங்களை யெல்லாம் தனக்கான, நம் மண்ணுக்கான வளங்களாக மாற்றிக்கொண்டார். பிக்காசோவும் கீழைத்தேயக் கலைமரபுகளின் தாக்கத்திற்கு உட்பட்டவரே. இவ்வகையான ஆளுமைச் செயல்பாடுகள் மிகமிக அரிய நிகழ்வே. அதனால்தான் நமது பிக்காசோவாக ஆதிமூலம் இருக்கிறார். உலகம் தழுவிய ஆளுமையான பிக்காசோவின் இன்னொரு பரிமாணமாக ஆதிமூலத்தைப் பார்க்கலாம் என்று தோன்றுகிறது.

தமிழ்ச் சமூகத்தின் கோலங்கள் மற்றும் சிற்பங்கள் – குறிப்பாக மண்சிற்பங்கள் சுமார் இரண்டாயிரம் ஆண்டுத் தொடர்ச்சியைத் தம்முள் கொண்டிருப்பதை நாம் அறிவோம். இச்சிற்பங்களே நடுகற்களாக, பல்வேறு உலோகங்களில் வடிக்கப்பட்ட பிரதிமைகளாக, கோயில் உருவாக்கங்களாக நமது சமூகத்தில் உருப்பெற்றன. இவற்றின் ஊடாக நவீனக் கலைஞன் எப்படிச் செயல்படுவது என்ற கேள்வி முக்கியமானது. ஆதிமூலத்தின் செயல்பாடுகளே அக்கேள்விக்குப் பதிலாக அமைகிறது. பிக்காசோவை உள்வாங்குதல் என்பதன் மறுதலை நிகழ்வு என்பது நமது மரபின் கோடுகளை நிலைநிறுத்துவதாக ஆதிமூலத்திற்கு வாய்த்திருக்கிறது.

தொடர்ச்சி பின் உள் அட்டை...

# கவிதாசரண்

இதழாய் ஓர் எழுத்தியக்கம்

ஆகஸ்டு - செப்டம்பர் 2008

ஆசிரியர்:

**கவிதாசரண்**

இதழ் விலை: ரூ.20

அட்டையும் வடிவமைப்பும்: ஜீவமணி

சந்தா விவரம்

10 இதழ்கள் --------- ரூ. 200

25 இதழ்கள் --------- ரூ. 500

50 இதழ்கள் -------- ரூ. 1000

வெளிநாடு தனி இதழ் ------ $ 2



தொடர்பு முகவரி:

**கவிதாசரண்**
*31, டி.கே.எஸ். நகர்,*
*சென்னை - 600 019*
*தொலைபேசி: 044-2574 01 99/*
*98849 50541*

**Kavithaasaran**
31,T.K.S. Nagar,
Chennai - 600 019.
Tamilnadu, India.
**Phone: 044 -2574 01 99 / 98849 50541**

**E-mail:**
kavithaasaran@yahoo.com

**Website:**
http://www.geocities.com/kavithaasaran
http://www.kirru.com


**நூல் மதிப்புரைக்கு இரண்டு படிகள் அனுப்புக. ஓர் ஆண்டுக்குள் வெளிவந்த புதிய நூல்களை அனுப்புக.**


Printed by Mrs.Kavithasaran at
Allwell Press, 31, T.K.S. Nagar, Chennai-600 019.
Edited & Published by Kavithaasaran.




**சென்னைப் பல்கலைக்கழகம் தமிழ் இலக்கியத்துறை நடத்திய**

## திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண நூல்
# வெளியீட்டுக் கருத்தரங்கு விழா

இராபர்ட் கால்டுவெல் 1875இல் இரண்டாம் பதிப்பாகத் திருத்தி வெளியிட்ட 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (A comparative Grammar of the Dravidian or South Indian Languaes) என்னும் நூல் 1913இல் பல்வேறு விடுபடல்களுடன் மூன்றாம் பதிப்பாக வெளியிடப்பட்டது. மூல நூல் மொழியியல், வரலாற்றியல், சமூகவியல் என முப்பரிமாணம் கொண்டது. அவற்றில் மொழியியலை மாத்திரம் தக்க வைத்துக்கொண்டதே மூன்றாம் பதிப்பு – ஆகவே, குறை பதிப்பு. இப்போது கால்டுவெல்லின் 1875ஆம் ஆண்டின் முழுமையான ஆங்கிலப் பதிப்பு கவிதாசரண் பதிப்பகம் மூலம் மீண்டும் கொண்டுவரப்பட்டுள்ளது.

அந்நூலை முன்வைத்து 24.04.2008ஆம் நாள் காலை 10:30 மணி முதல் மாலை 5:30 வரை, சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ் இலக்கியத் துறை தன் பவளவிழாக் கலையரங்கில் கருத்தரங்கும் வெளியீடும் நடத்தியது. காலை நடந்த கருத்தரங்கிற்குத் தமிழ் இலக்கியத் துறைத் தலைவர் பேராசிரியர் வீ.அரசு அவர்கள் தலைமை ஏற்று நூலையும் அதன் மூலத்தை மீட்டெடுத்த பதிப்பையும் பற்றி விரிவான ஆய்வுரை நிகழ்த்தினார். அவரைத் தொடர்ந்து பேராசிரியர் மு.வேதசகாயகுமார், 'கால்டுவெல் ஆய்வுகள்' பற்றி உரை நிகழ்த்தினார். இவர் கால்டுவெல் நூலைத் தொடர்ந்து ஆய்வு செய்து வருபவர். அவருடைய உரையும் அவ்வாறே. 'கால்டுவெல் எழுதிய நூல்கள் ஏற்படுத்திய சர்ச்சைகள்' என்பதையே ஒரு தனி நூலாகக் கொண்டுவரலாம் எனும் கருத்துக்கு வலு சேர்க்கும் விதமாக அவரது ஆய்வுரை அமைந்தது.

அடுத்து, அ.மங்கை, 'காலனியமும் மொழி ஆய்வுகளும்' எனும் தலைப்பில் ஒப்பிலக்கணம் எழுதப்பட்ட சூழல், தேவை பற்றி அரிய தகவல்களுடன் விரிவாகப் பேசினார். அவருக்குப் பின்னர் 'திராவிட மொழியியலும் கால்டுவெல்லும்' என்னும் பொருள் பற்றி இலக்கண மாதிரிகள் பலவற்றை மேற்கோள் காட்டி பேராசிரியை ந.கலைவாணி ஒரு வகுப்பறைப் பேராசிரியராகத் தகவல்கள் தந்தார்.

பிற்பகல் வ.கீதா, 'காலனியமும் இனவியல் ஆய்வுகளும்' என்பது பற்றி ஆய்வுரை நிகழ்த்தினார். தமிழ், வடமொழி இரண்டும் பெண்மொழி, ஆண்மொழி என்று அழைக்கப்பட்டது பற்றிய தகவல்களோடு அ.மங்கையின் உரையைப் பலமுறை மேற்கோள் காட்டி இனவியல் முறைமைகளை விளக்கினார். அவரைத் தொடர்ந்து கவிதாசரண், 'கால்டுவெல் நூல்பதிப்பு அரசியல்' பற்றி எடுத்துரைத்தார். கால்டுவெல் பறையர்களைப்பற்றி எழுதிய கட்டுரை மறைக்கப்பட்டதை வேதசகாயகுமார் முதன்முதலில் கவிதாசரண் இதழில் அம்பலப் படுத்தியதையும் அக்கட்டுரையே இந்நூல் கொண்டுவரக் காரணமென்றும், பழைய படியைத் தேடிக் கண்டுபிடிப்பதில் பொ.வேல்சாமி செய்த உதவியையும் நினைவு கூர்ந்தார். மூன்றாம் பதிப்பில் விடுபட்ட பகுதிகள் பற்றிக் குறிப்பிட்டு அவற்றுக்குப் பின்னுள்ள அரசியலை விரிவாகச் சொன்னார்.







கருத்தரங்க முடிவில் நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது. நூலை வெளியிட்டு முதுபெருந் தோழர் இரா.நல்லகண்ணு அவர்கள் அரிய உரை நிகழ்த்தினார். பறையர்கள் பட்ட அவலங்களை உதாரணத்துடன் விளக்கினார். ஒரு வெளிநாட்டுக்காரர் இவ்வளவு பெருமுயற்சியும் நல்லெண்ணமும் கொண்டு மண்ணை, மக்களை, மொழியை ஆய்ந்திருப்பது வியப்புக்குரியது என்றார்.

தொடர்ந்து பேராசிரியர் கா.சிவத்தம்பி அவர்கள் பேசினார். நூலில் கால்டுவெல் வாழ்க்கைக் குறிப்பை இணைத்திருந்தால் நன்றாயிருக்கும் என்றார். திராவிட இயல் இன்று பெரும் பரப்பையும் வீச்சையும் கொண்டு திகழ்வதைக் குறிப்பிட்டு, கால்டுவெல் எழுதிய திருநெல்வேலி வரலாறு போன்ற எல்லா நூல்களையும் ஆழ்ந்து ஆய்தல் வேண்டும் எனச் சொன்னார்.

மேடையில் கவிதாசரண்கள் நூலாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டனர். கவிதாசரண் தன் ஏற்புரையில் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறைக்கும் அதன் தலைவர் பேராசிரியர் வீ.அரசுவுக்கும் தன் மனமார்ந்த நன்றியை நெகிழ்ச்சியுடன் பதிவு செய்தார். பேராசிரியர் மணிகண்டன் தன் நன்றி நவிலலில் கால்டுவெல் நூல் முழுமையாக மீட்டெடுக்கப் பட்டதில் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் விருப்பம் நிறைவேறியிருப்பதாகக் குறிப்பிட்டார். விழா மேடையில் முதுபெரும் தமிழ்மகனார் மா.சு.சம்பந்தனார் அவர்கள் நூல் பெற்றுச் சிறப்பு செய்தார்.

## நூல் பற்றிச் சில கருத்துகள்.

1. 'பார்ப்பானுக்கு அடிமையாய் இருந்தாலும் இருப்பேனே தவிர பறையனுக்குச் சகோதரனாய் இருக்க மாட்டேன்' என்னும் தமிழ்ச் சாதியின் வெறியுணர்வே தமிழின் தனித்துவத்தையும் மீறி அவர்களைப் பார்ப்பனத் தகைமைகளுக்கு முன்னுரிமையும் முதலிடமும் கொடுக்க வைத்துள்ளது. அதன் காரணமாகவே 'பறையர் முதலான தாழ்த்தப்பட்டவர்கள் திராவிடர்கள்தாம்' என்னும் கால்டுவெல்லின் கட்டுரையை அவர் நூலிலிருந்தே உருவிப்போட்டுவிடத் துணிச்சலைக் கொடுத்திருக்கிறது.

2. பறையர் முதலானவர்கள் பார்ப்பனர் முதலான உயர்சாதியினரின் முறையற்ற பாலுறவால் 'நடத்தை கெட்டவர்கள் பெற்றுப்போட்ட குழந்தைகள்' என்பதாக ஐரோப்பியர்கள், பார்ப்பனர்கள், உயர்சாதித் தமிழர்கள் போன்றோரால் இழிவாக வைத்து எண்ணப்பட்டிருந்த காலம் அது. இது ஆய்வு ரீதியாகவோ நடைமுறை அறிவிலோ மெய்ப்பிக்கப்பட முடியாத கட்டற்ற மனத்தின் ஆகப்பெரும் பொய்ப்புனைவு என்பதைக் கால்டுவெல் ஐயத்திற்கிடமின்றி நிறுவுகிறார். இந்தப் பொய்யிலும்கூட ஒரு விஷயம் பாருங்கள்: வல்லுறவு கொண்ட பொறுக்கிகள் மேல்குலத்தவர்களாம். வல்லுறவுக்காட்பட்ட பெண்கள் பெற்றுப்போட்ட குழந்தைகள் சாதி கெட்டவர்களாம். இந்தச் சடங்குத்தனமான வகைப்பாட்டை நம்புகிறவர்கள்தாம் மேன்மக்கள் எனில் மேன்மையின் கீழ்மை எவ்வளவு கோரமானது! அதைத்தான் கால்டுவெல் வலுவாக நிறுவுகிறார். அதைச் சகித்துக்கொள்ள மறுத்தவர்கள்தாம் அவர் நூலைச் சிதைத்தவர்கள்.

3. மாதவியின்பால் கோவலன் 'விடுதல்அறியா விருப்பினன்' ஆயினன் என்பார் இளங்கோவடிகள். தமிழின் மேல் கால்டுவெல்லின் நேசமும் அப்படிப்பட்டதுதான். 53 ஆண்டுக்காலம் தமிழோடு வாழ்ந்து தமிழ் மண்ணில் அடக்கமானவர். கோவலன் மாதவியை நேசித்தாலும் அவனது ஆவியில் கலந்தவள் கண்ணகி மட்டும்தான். கால்டுவெல்லுக்கும் அப்படித்தான். Our country, our language என்று சொல்லித் தன் நாட்டோடும் மொழியோடும் ஆவியில் கலந்தவர். ஆயினும் அவரது விளைச்சல் தமிழ் மண்ணோடுதான்– கோவலன் மாதவியிடம் பெற்றாற்போல.

4. மலையாளத்தைத் தமிழின் சகோதரி என்பதைவிடப் புதல்வி என்றே சொல்லலாம் என்பது கால்டுவெல்லின் எண்ணம். மொழி ரீதியாக அதற்கொரு சான்று சொல்கிறார். தமிழில் கிழக்கு, மேற்கு என்று திசைகளைச் சொல்கிறோம். கிழக்கு என்றால் கீழே, தாழ்வாக (கிழங்கு என்றால் நிலத்தின் 'கீழ்' விளைவது) என்னும் பொருள் தருவது. அதுபோல மேற்கு என்பது மேல்நோக்கி, மேடாக என்றாகிறது. தமிழ்நாட்டுக்கு மேற்கு நோக்கிச் செல்லும்போது ஏறுமுகமாக, மலைநோக்கியும், கிழக்கு நோக்கிச் செல்லும்போது இறங்குமுகமாக, கடலை நோக்கியும் அமைகிறது. ஆகவே இவை காரணப் பெயர்கள். மலையாளத்திலும் திசைகளுக்கு இதே பெயர்கள்தாம். ஆனால் கேரளத்தில் கிழக்குத் திசை ஏறுமுக மாகவும், மேற்குத்திசை கடலை நோக்கி இறங்குமுகமாகவும் நிலப்பரப்பைக் கொண்டது. எனவே, அங்கே இத்திசைகள் இடுகுறிப் பெயர்களாக, தமிழ்ப் பெயர்களை உள்வாங்கிக் கொண்டனவாக உள்ளன. அதாவது அவர்கள் தமிழர்கள், தமிழ்நாட்டிலிருந்து நகர்ந்து சென்றவர்கள் என்பதாக முடிவுக்கு வரலாம். நம்பூதிரிகள் "நாங்கள் 'படுஞ்ஞாயிறு' என்றுதான் மேற்கை அழைக்கிறோம்"

என்று சொன்னபோது 'அடடே, அது இன்னும் நல்ல தமிழாயிற்றே' என்கிறார் கால்டுவெல். இதுபோன்று பல சாத்தியப்பாடுகளையும் அவர் மொழிகளூடாக ஆராய்கிறார்.



5. கால்டுவெல் தொல்காப்பியத்தை அறிந்திருந்தார் என்பது இன்றுவரை இருட்டடிப்புச் செய்யப்பட்டே வருகிறது. 07–05–2007இல் இரவு 11.30 மணியளவில் பொதிகைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பான தமிழ்மொழி பற்றிய நிகழ்ச்சியில் கால்டுவெல் தொல்காப்பியத்தை அறிந்திருக்கவில்லை என்றே 'தமிழறிந்த' மூன்று பேர் பேசிக்கொண்டிருந்தார்கள். அனால் உண்மை என்னவெனில் அவர் தொல்காப்பியத்தை அறிந்திருந்தார்என்பதுதான். தொல்காப்பியத்தில் 'என்மனார் புலவர்' எனப்படுவது தொன்மையை நிலைநாட்டும் பொருட்டு என்பதாகிறது. ஆனால் 'என்மனார்' என்பதற்கு மாற்றாக 'என்பர்' என்று சொன்னாலே அது தொன்மையைச் சுட்டக்கூடியதுதான் என்கிறார் கால்டுவெல்.

6. கால்டுவெல்லுக்கு முன்பே 'திராவிடம்', 'திராவிட மொழிகள்' என்னும் சொற்கள் புழக்கத்திலிருந்தன. கால்டுவெல் செய்த தெல்லாம் அக்கருத்துகளைத் தொகுத்து, ஆழமும் விரிவும் கொண்டதாக்கி, தமிழின் செம்மொழித் தகுதியை ஐயத்திற்கிடமின்றி நிறுவியதுதான். உண்மையில் கால்டுவெல்லின் ஒப்பிலக்கண நூலை அடியாதாரமாகக் கொண்டுதான் செம்மொழித் தமிழின் கருத்தியல் களம் பரந்து விரிகிறது. இன்னும் சொல்லப்போனால் கால்டுவெல் பொருளாழப்படுத்திய 'திராவிடம்'தான் தமிழகத்தை ஒரு நூறாண்டுக் காலம் குலுக்கிக்கொண்டிருக்கிறது, ஒரு நாற்பதாண்டுக் காலம் ஆட்சி செய்துகொண்டிருக்கிறது. இது கால்டுவெல்லின் நாமறிந்த முகம். அவருக்கு இன்னொரு முகமும் உண்டு. வெகு தீவிரமான தெளிவான சமூக முகம். அந்த முகம் 1913க்குப் பிறகு முற்றாக மறைக்கப்பட்டுவிட்டது.



7. கால்டுவெல் மட்டும் இந்த நூலை எழுதாமல் இருந்திருந்தால் இன்றைய இந்தியப் பெருவெளியில் தமிழ்ச் சமூகம் என்னவாக இருந்திருக்கும் என்று நினைக்கவே அச்சமாக உள்ளது. சிந்துவெளி நாகரிகம் தமிழ்ச் சமூகத்தினுடையது என்று சொல்வதுகூட எளிதாய் இருந்திருக்க முடியாது. இந்திய ஒற்றைத் தேசியத்தில் தமிழ்ச் சமூகம் ஆகக் கீழான தலித் சமூகமாக மிதிபட்டு நசுங்கிப் போயிருக்கும் என்று சொன்னால் அது மிகையாகாது. இன்றைய அரசியல் களத்தில் இன ரீதியாகவும் மொழி ரீதியாகவும் தமிழ்ச் சமூகத்தைத் தலைநிமிர்ந்து செம்மாந்து நிற்க வைத்த பெருமை கால்டுவெல்லையே சாரும். 'வெள்ளையின மக்களே மேன்மை யானவர்கள், கறுப்பினத்தார் கீழானவர்கள்' என்னும் சமஸ்கிருதக் கோட்பாட்டை அடித்து நொறுக்கியவர் கால்டுவெல். சமஸ்கிருதம் இந்தியாவுக்குள் நுழையுமுன்பே தமிழுக்குக் கடன் பட்டது என்பதைத் தர்க்கபூர்வமாக நிறுவிக்காட்டியவர் அவர்.



8. தமிழ்ச் சமூகம் ஒருவகையில் ஆரிய சமூகத்தைவிடவும் குரூர மானது என்பதைக் கால்டுவெல்லைக் கொண்டே நம்மால் மெய்ப்பிக்க முடியும். தமிழ்ச் சமூகம் தன் தலை நிமிர்வுக்கான கால்டுவெல்லின் ஒரு முகத்தை மட்டுமே ஏற்றுக்கொண்டது. அவருடைய இன்னொரு முகம் பறையர்கள் முதலான தாழ்த்தப்பட்டவர்கள் அனைவரும் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களே – வெள்ளாளர்களின் சகோதரர்களே என்று உறுதிபட மெய்ப்பித்துக் காட்டிய முகம். அந்த முகத்தைத்தான் அவர் மறைவுக்குப் பின் ஆதிக்கத் தமிழ்ச் சாதிகள் முற்றாக மறைத்துவிட்டன– ஒளித்து வைத்துவிட்டன. இன்றைய தமிழ் மக்களுக்கு, ஏன் அறிஞர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களுக்குங்கூட கால்டுவெல்லின் அந்த முகம் முற்றாகத் தெரியாது. தெரிந்துகொள்ள முயலவே இல்லை. அதை வெளிக் கொண்டுவரும் முயற்சியாகத்தான் கால்டுவெல் ஒப்பிலக்கணம் முழுமையாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.



9. தமிழ்ச் சூத்திரர்கள் தங்களை மட்டுமே தமிழர்களாக நிறுவிக் கொண்டார்கள். பார்ப்பனர்களையோ தாழ்த்தப் பட்டவர்களையோ தமிழர்களாக அவர்கள் ஏற்கவில்லை என்னும் முறைகேட்டை கால்டுவெல் துல்லியமாக எடுத்து வைத்துத் தாழ்த்தப்பட்டவர்களும் தமிழர்களே என்று நிறுவுகிறார். அந்தப் பகுதியையும் அதன் நிறம் கசிந்த பல பகுதிகளையும் வெட்டியெறிந்துவிட்டே 'தமிழர்கள்'









அவர் நூலுக்கு மூன்றாவது பதிப்பைக் கொண்டு வருகிறார்கள். அவர் எடுத்துக் காட்டிய உண்மை மறைக்கப்பட்டுவிட்டதால், எப்போதும் போலவே வையாபுரிப் பிள்ளை தொகுத்த தமிழ் அகராதியில் 'பார்ப்பானொழிந்த பறையனொழிந்த தமிழ் பேசுவோரே தமிழர்கள்' என்று குறிப்பிடும் பழைய முறையைப் பேணிக் கொண்டார்கள். இதை எதிர்த்து அண்மைக் காலங்களில் கிளர்ச்சி நடந்தது. உண்மையில் இந்தக் கிளர்ச்சி கால்டுவெல் காலந்தொட்டே நடந்திருக்க வேண்டும். அதை மறைத்த பெருமை இந்தச் சுரணையற்ற தமிழர்களையே சாரும்.

10. இதன் இன்னொரு தொடர் நிகழ்வாகக் கால்டுவெல் கூடுதல் தகவல் தருகிறார். தலித்துகளும் தங்களுக்குக் கீழாகத் தலித்துகளைப் பேணி வந்தார்கள் என்பதே அந்தத் தகவல். அதாவது பறையர்கள் தங்களை விடத் தாழ்ந்தவர்களாக செருப்பு தைப்பவர்கள், துணி வெளுப்பவர்கள் போன்றோரை ஒதுக்கி வைத்தனர் என்கிறார். ஆக, இந்தியாவில் ஒவ்வொருவனும் தனக்கொரு தலித்தை உருவாக்கிக் கொள்வதையே குறியாகக் கொண்டிருக்கிறான் என்றாகிறது. இது வர்க்கப் பிரச்சினையின் உள் மடிப்புகளில் படிந்திருக்கும் செல்லரிப்புச் சிதிலம். இந்த உள்வட்டச் சிதிலங் களைக் களையாமல் தலித்தியம் வெல்வதெப்போது?

11. தமிழ்ச் சமூகம் இடங்கை, வலங்கை என்று இரண்டாகப் பிரிந்து மோதிக்கொண்டது என்பதைக் கால்டுவெல்லும் குறிப்பிடுகிறார். 'இடங்கை' என்றால் மாற்றத்தைக் கோருவது. 'வலங்கை' என்பது இருப்பதைத் தக்கவைத்துக்கொள்வது. இதன் உலகளாவிய நவீனப் பெயர்கள்தாம் இடதுசாரி, வலதுசாரி என்பதை அறிய நமக்கு வியப்பு ஏற்படுகிறது. பறையர்கள் எப்போதும் வலங்கையர்களாகவும், பள்ளர்கள் இடங்கையர்களாகவும், 'நீயா, நானா? யார் பெரியவர்?' என்னும் மோதலைத் தொடர்ந்தனர் என்கிறார். இன்றைக்கும் அந்த மோதல் தொடர்கிறதெனில் தலித்துகளுக்கு எப்போது விடுதலை வரும்? பறையர்கள் வலங்கையர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டதிலிருந்து அவர்களின் தூர்ந்துபோன பின் வரலாற்றை ஒருவாறு யூகிக்க முடிகிறது.

12. தென்னிந்தியா முழுதுமுள்ள பெருநகரக் கண்டோன்மென்டுகளிலும் சந்தைகளிலும் பெருவாரியாகத் தமிழைக் கேட்கலாம் என்கிறார் கால்டுவெல். இப்படித் தமிழை ஒலிக்கச் செய்தவர்கள் படைப் பிரிவுகளிலும் வெள்ளையர் மனைகளிலும் பணியமர்த்தப்பட்ட, சிப்பாய்களாயிருந்த பறையர்கள்தாம். அண்மையில் பி.ஏ.கிருஷ்ணன் எழுதியுள்ள கட்டுரையிலிருந்து இது பற்றிய கூடுதல் விவரங்களும் கிடைக்கின்றன. சாதிக் கொடுமைகளுக்கு அஞ்சி படைப் பிரிவில் இருந்த பறையர்கள் தங்கள் குடும்பத்தையும் தங்களோடே அமர்த்திக்

கொள்வார்கள் என்றும், இன்னும்கூடத் தமிழ் அவ்வாறு புழங்கிக் கொண்டிருக்கிறது என்றும் அவர் சொல்கிறார். இப்படிப்பட்டதொரு கொடும் தள்ளிவைப்பைத் தக்கவைத்துக்கொள்வதற்கென்றே கால்டுவெல் எழுதிய 'பறையர்கள் திராவிடர்களே, தோடர்களும் திராவிடர்களே' என்னும் பகுதிகளையும், திராவிடர்கள் 'மலையிறங்கி வந்து அருள்வாக்கு சொல்லி மீண்டும் மலையேறும் தெய்வ வழிபாட்டினர்' – வேறு வகையில் சொன்னால்– பேய் வழிபாட்டினர் என்னும் உண்மை களையும் முற்றாகக் களைந்துவிட்டுத் தங்களுக்குப் பிடித்த மாதிரி நூலைச் சிதைத்து வெளியிட்டுக் கொண்டனர்.

13. திராவிட மொழிகளில் தமிழ் தவிர மற்றவை சமஸ்கிருதத்தோடு ரசாயணக் கலவைக்கு உட்பட்டு விட்டதையும் தமிழ் மட்டும் விதிவிலக்காய் இருப்பதையும் கால்டுவெல் சுட்டுகிறார். ஒரு மொழியின் எழுத்துப் பயன்பாட்டை அல்லது இலக்கியத்தை யார் வசப்படுத்துகிறார்களோ அவர்கள் அந்த மொழியைத் தங்கள் ஆளுமைக்குள் கொண்டுவந்துவிடுவார்கள் என்கிறார். தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் பார்ப்பனர்களே முதல் இலக்கியத்தைப் படைத்தார்கள். ஆகவே அவை சமஸ்கிருத மயமாயின. ஆனால் தமிழில் மூல இலக்கியங்கள் பார்ப்பனர்களுக்கு முன்பே தமிழர்களாலேயே படைக்கப்பட்டுவிட்டன. தொடர்ந்து வந்த பார்ப்பனர்களின் பங்களிப்பு மூல இலக்கியங்களை மீறியதாக இயங்க முடியவில்லை என்கிறார். வள்ளுவர் திருக்குறளை இயற்றினார். அதற்குப் பரிமேலழகர் உரை எழுதினார். இதை 'பறையராகக் கருதப்படும் வள்ளுவர் எழுதிய குறளுக்குப் பார்ப்பனராகிய பரிமேலழகர் உரையெழுதும்படியாகத்தான் பார்ப்பனியத் தாக்கம் தமிழை வந்தடைந்தது' என்கிறார். அதாவது முயன்றால் தனித் தமிழ் சாத்தியமே என்பது அவர் கண்டுணர்த்தும் உண்மை. உரை எழுதுவது ஒன்றும் பொருள் விளங்க வைப்பதற்கல்ல. குறைந்த பட்சம் சந்துபொந்துகளிலாவது தங்கள் வர்ணாசிரமக் கருத்துகளைப் புகுத்துவதற்குத்தான்.



ஒன்றை நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். மொழி என்ற அளவில் சமஸ்கிருதம் வளமானது என்பதில் ஐயமில்லை. தமிழின் இறையாண்மையை மதிக்கும் எனில், அதைத் தமிழின் அரிய நட்பு மொழியாக ஏற்பது தமிழுக்கு உகந்ததுதான். ஆனால் பாம்புக்கு ஒழுக்கம் கடிவாயில் நஞ்சை உமிழ்வதுதானே? சமஸ்கிருதம் தொடுவாயிலும் நஞ்சுமிழும் நற்கருணைப் பாம்பு.

●

## சில துளிகள்

இன்று வெகுசிலர் விமர்சனத்தை ஒரு புதிய வெளிச்சத்திற்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். சமூகநீதி பேசும் மறுவாசிப்புத்தளத்தில் அதை ஒரு அதிர்ச்சி மதிப்பீடாக நிகழ்த்திக்கொண்டிருக்கிறார்கள். இப்படி நிகழ்த்துகிறவர்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய சிலர்தான். அவர்களும்கூடத் தங்களுக்கான தற்பயிற்சியில் இன்னும் முழுமை யடையாதவர்கள். இவ்வகையில் கல்விப்புலம் சார்ந்த துறைபோகிய பயிற்சியளிக்க அதிகாரவர்க்கம் ஒருபோதும் முன்வராது. இந்தச் சுயதேடலில் தங்களுக்கான சொல்லடைவுகளை அவர்களே புத்தாக்கம் செய்துகொள்ள வேண்டும். விமர்சனத்தின் நம்பகத் தன்மையை விமர்சிக்கிறவனின் அரசியல் நிலைபாடு மட்டுமே தீர்மானிப்பதில்லை. சொற்படிமங்களைச் சேகரிக்கும் புரிதலற்ற வளரிளம் பருவத்தில் அவனுள் பச்சையமாக வளர்த்தெடுக்கப்பட்ட பண்பியல் தாக்கங்களாலும் மீள்கட்டமைப்புச் செய்யப்படுகிறது. அந்த வகையில் நாம் மறுவாசிப்புப் புலமையாளர்களாக முழுமை பெறுவதற்கு நமது குழந்தைகள் நமக்கு ஆசான்களாகும் வரை காத்திருக்க வேண்டியிருக்கும்.

□ □ □

தூய்மையாவது முப்பரிமாணத்தன்மையுள்ளது – அகத்தூய்மை, புறத்தூய்மை, உளவியல் ரீதியாகக் கட்டமைக்கப்பட்ட தூய்மை என. இதில் புறத்தூய்மை பார்த்தறியக்கூடியது. அகத்தூய்மை நம்பிக்கை அடிப்படையிலானது; பழகியே அறியக்கூடியது; அறிய முனைகிறவரின் தூய்மையோடு சார்புத்தன்மை கொண்டது. உளவியல் ரீதியாகக் கட்டமைக்கப்படும் தூய்மையானது பண்பாட்டுத்தளத்திலானது. வழிவழியாக கற்பிக்கப்படுவது, நம்பப்படுவது, நம்பிக்கையையே காரணியாகக் கொண்டது. காலப்போக்கில் காரணி பற்றிய புலனறிவற்று நிலைகொண்டுவிடுவது. உதாரணமாக, பார்ப்பனர்கள் தூய்மையான வர்கள் என்னும் நம்பிக்கை. இது முழுக்கமுழுக்க உளவியல் ரீதியாகக் கட்டமைக்கப்பட்ட கற்பிதத் தூய்மை. ஒருமுறை கட்டமைக்கப்பட்டு விட்டால் பின்னர் அது அகத்தூய்மை, புறத்தூய்மை பற்றிய கேள்வி களற்றதாக, தூய்மையின் குறியீடாக, அதன் அடையாளமாக, நீ வேறு –நான் வேறு என்னும் உயர்வு தாழ்வின் சின்னமாக பீடமேறிக்கொள்ளும்.

□ □ □

எனக்கு சைவம் தத்துவமாய்த் தெரிந்ததைவிட அதன் பயன்பாடாய்த் தெரிந்ததே அதிகம். அதில் ஒரு துணுக்கு: என் சகோதரி பொதுக் குழாயில் நீர்பிடிக்கச் செல்லும்போது, வீட்டிலிருந்து கொண்டு செல்லும் சொம்பு நீரில் குழாயைக் கழுவிவிட்ட பிறகே தன் குடத்தை நிரப்புவார். சுற்றிலும் ஊர்ப்பெண்களின் விதவிதமான முகங்கள் மௌனமாய் பொரிந்து கொண்டிருக்கும். அதுபற்றி என் சகோதரியிடம் ஒரு பாதிப்பும் இருக்காது. அதை இப்போது நினைத்துப்பார்த்தால் உலகிலேயே சைவம் போலொரு வன்கொடுமை வேறேதும் இல்லை என்றே தோன்றுகிறது. ஆயினும் நான் இன்னமும் சைவனாகத்தான் அடையாளம் காக்கிறேன். உலகை எத்தனை கோடி கருத்துக் கிளர்ச்சிகளும் கட்டவிழ்ப்புகளும் கலைத்துப் போட்டாலும், அதிகாரமே தன்னைத் திரும்பத்திரும்பப் புதுப்பித்துக் கொள்ளும் அறிவுடையாளமாகிறது.

□ □ □

இந்தியக் கலாச்சாரத்தின் தலையாய அம்சங்களில் ஒன்று பிச்சையிடுதல். ப்பூ... இவ்வளவுதானா என்று நீங்கள் எளிமைப்படுத்தி ஒதுக்கிவிடும் அளவுக்கு இதுவொன்றும் அற்பசொற்பமான பொருளல்ல. இந்தியச் சமூகக் கட்டமைப்பின் முதுகெலும்பு, விலாஎலும்புகள் எல்லாம் இதுதான். பிச்சையிடுதல் என்றால் அதை வாங்கிக்கொள்ள ஒரு வறியவன் வேண்டும். அவனை வறியவனாக மலினப்படுத்திப்பார்க்கும் ஒரு பணக்காரத்தனம் வேண்டும். பிச்சையிடுவது என்றானபின் அதைப் பாத்திரமறிந்து இடவேண்டும். அதாவது தன்னைப் பிச்சைக்காரன் என்பதற்குமேல் தகுதிப்படுத்திக்கொள்ளாத, கூழைகும்பிடு போட்டுத் தன் நன்றியைக் காட்டும் நாயாக ஒருவன் வேண்டும். இது ஒன்றும் ஏழை– பணக்காரன் முரண் மட்டுமல்ல, இழிந்தவன்– உயர்ந்தவன் என்னும் சமூகக் கட்டுறுதியின் வெளிப்பாடுமாகும்.

நீங்கள்
எதை மூடி
மறைத்துக்
கழுத்தறுக்கிறீர்களோ,
அதை நான்
வெட்ட வெளிச்சமாக்கி
உங்கள்
முகத்திரையைக்
கிழிக்கிறேன்
- சரண்.

# பாலையாய்த் திரிந்த மருதமும்... சிகரமாய் உயர்ந்த மனிதரும்...





## 1

இந்த இதழின் கடைசிக் குறிப்பு இது. தற்செயலாக முதலில் எழுத நேர்ந்துவிட்டது. நினைவோட்டத்தில் அடுக்கடுக்காக முகிழ்த்தெழும் தீராத கவனங்களில் அழுதால் தீரும் துயரம் போல எழுதித் தீர்ப்பவை கொஞ்சம்தான். வயதும் காலமும் வாழ்வை எதிர்கொள்வதில் கவனப் பிசகாய் நழுவும் பேசாப் பொருள்களுக்குக் கணக்கு வழக்கில்லை.

அந்தப் புலர்காலைப் போதில் செல்பேசியில் தொடர்பு கொண்ட மலேசியத் தோழரிடம் ஒரு நினைவுக் குறுக்கீடாய், "நாளை ஜூன் 3 அல்லவா?" என்றேன்.

தோழர் தன் வாழ்வின் பக்கங்களை மார்க்சியத்தால் நிரப்பி, தனித்தமிழ்ப் பற்றால் உயிர்ப்பித்தவர். சுதந்திர வெளியின் போராளிக் கனவுகளால் வழி நடத்தப்பட்டு தத்துவ மிதவைகளால் இழுத்துச் செல்லப்படுபவர். தேடலே இருப்பாய், தோழமையே இலக்காய், தேவைக்குத் தொழில் என்பதாய் இயங்குபவர்.

என் சுட்டலை ஒரு தீவிரக் கருத்துப் பரிமாற்றத்தின் தொடுபுள்ளியாய் அவதானித்தவராய், "சொல்லுங்கள், ஐயா. நீங்கள் குறிப்பிட்டுச் சொல்வதால் அதற்கொரு சிறப்பு இருக்கும்தானே?" என்றார்.

அவர் என் அலைவரிசையில் இல்லை என்றாலும் நான் பிரிதொன்றுக்குத் தாவிச் செல்ல விரும்பாமல், "நாளை கலைஞர் கருணாநிதி தன் நீண்ட நெடிய 85ஆம் பிறந்த நாளை ஆட்சியதிகாரக் கவசத்தோடு கொண்டாடும் நாள் அல்லவா," என்றேன்.

"சே, விடுங்கய்யா," என்றார். அந்தக் கணத்துக்காகக் காத்திருந்தாற்போல் அவரது பேசி செயலற்றுப்போனது. இது வழக்கமாய் நடப்பதுதான் என்றாலும் இப்போது அது இறக்கி வைத்த கனம் குரல்வளையை நெறிப்பதாய் இருந்தது. மதிப்பீடுகளின் கருணையற்ற தருணங்களில் என்னை நான் இழித்துக்கொள்வதில்லை என்பதால் நான் அதை அவமதிப்பாக எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. மேலும் சிறிது நேரம் தொலைபேசி அருகிலேயே அமர்ந்திருந்தேன். மனம் தொடரோட்டம் போல நிகழ்வைத் தொட்டும் தொடாமலும் தன்போக்கில் சொல்லாடிக்கொண்டிருந்தது.

இந்த உலகம் பெரியது. அதில் நாம் ஒரு சுழியத்திற்குச் சமமான சின்னஞ்சிறு துகள். நம் மனமோ நமக்குள் அடங்கிவிடும் துகளின் துகள். இந்த உலகத்தையே துகளாகச் சுருக்கிவிடக்கூடிய அண்டவெளியோ மிகப் பெரியது; மிக விரிந்தது; கங்குகரை இல்லாதது. அப்படிப்பட்ட 'வெளி'யையே விழுங்கிவிடக்கூடிய விரிபேரண்டம் ஒன்று உண்டெனில் அது நம் மனத்தைவிடப் பரப்பில் சிறியதுதான். அதுதான் மனத்தின் மகத்துவம். அந்த மனம்தான் நாம். அதாவது, ஒன்றுமில்லாததும் எல்லையில்லாததுமான எதிர்மைகளைத் துல்லியப்படுத்த நாம் என்றும் மனம் என்றும், நம்மைப் பகுத்துச் சொல்லிக்கொள்கிறோம். ஆனால் பயிற்றுவிக்கப்படாத வெள்ளை மனத்துக்கு இவை யாவும் புலப்பாடற்ற மயக்குறு சொற்படிமங்களே. ஆகவே நம்மில் பெரும்பாலோர், பென்னம்பேருலகில் நாம் ஒரு சின்னஞ்சிறு துகள் என்னும் பிள்ளை மதிப்பிடலைக்கூட அறிதலின் தொடக்க அலகாகப் பார்க்கப் பழகாமல் வாழ்ந்து முடித்துவிடுகிறோம். 'இந்த உலகமும் நாமும்' என்னும் விரிவஞ்சி 'நாமும் நம் உலகமும்' என்பதாகச் சுருங்கிக் கொள்கிறோம். நாம் எதில் கவனம் குவிக்கிறோமோ அதற்கு இசைவாகவே நம் உலகத்தைப் பாவித்துக்கொண்டு முரண்உலகத்தை அப்பால் நிறுத்துகிறோம். சமூக விஞ்ஞானம் அரசியல் விசைப் பலகையில் பந்தாடப்படுகிறது.

தோழர் மீண்டும் தொடர்பு கொண்டார்.

"நாம் வேறு பேசலாம், ஐயா," என்றார்.

"பேசலாம்தான். ஆனால் நான் சொன்னதைப் பேசப் பிடிக்காத விஷயமாக்கி நம்மை நாமே புனிதப்படுத்திக் கொள்வதாகக் கற்பித்துக்கொள்ள வேண்டாமே. சமூக அறிவியலாளர்கள் என்னும் முறையில் நமக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் நம் கண்முன்னே நிகழ்ந்தேறும் வரலாற்றை நீங்களோ நானோ

பொறுப்பில்லாமல் புறக்கணித்து விடலாகாது.”

“அப்படி என்ன வரலாறு?”

“ஒற்றை வாக்கியத்தில் சொல்வதென்றால் மனித மாண்புகளைப் பேணத் தெரியாத இந்த அழிசாதிக் கழிசடை சமூகத்தில் சொல்லிக்கொள்ளும்படியான அடையாளமோ, முகவரியோ, பின்புலமோ, குலப் பெருமையோ, புலமைத்தளமோ இல்லாத ஒரு சாமானியன் – அதிலும் ஆகப் பிற்படுத்தப்பட்ட ஒரு அதிசூத்திரன்– தான் வாழும் சகாப்தத்தின் புறக்கணித்துவிட முடியாத வரலாறாகத் தன்னை எடுத்து நிறுத்திக் கொள்ள முடியும் எனில், அந்த நம்ப முடியாத வரலாற்று விந்தையைக் கருணாநிதி நிகழ்த்திக் காட்டியிருக்கிறார்தானே? இதில் நீதிக் கட்சியின் அரசியல் கோட்பாட்டுக்கு முதல் பங்கு உண்டென்றால் கருணாநிதியின் பிறவிக் கொடையாகத் தொடரும் இடையறாத உழைப்புக்கு ஆகப் பெரும் பங்கு உண்டு என்பதை நாம் மறுதலித்துவிட முடியுமா?

“சரி, அந்த உழைப்பு யாருக்காக? எதற்காக? அதற்காக இந்த மண்ணும் மக்களும் கொடுத்த விலை என்ன?”

“இவை விமர்சனங்கள். கருணாநிதியின் வரலாற்றில் படிந்திருக்கும் கறைகளும் நிறைகளும் பற்றிய கணக்கெடுப்புக்கான விமர்சனங்கள். நான் சுட்டுவது வரலாற்றில் கருணாநிதி வென்றெடுத்த இடத்தை. அதை ஏற்பதன் அம்சமாகத்தான் விமர்சனங்களே எழுகின்றன. இன்றைய மறுவாசிப்பு யுகம் ராஜராஜ சோழனைப் பொற்காலச் சோழனாகக் கொண்டாடுவதைக் கேள்விக்குள்ளாக்குகிறது. ஆனால் அவன் பேரரசனாகக் கோலோச்சிய பார்ப்பனச் சேவகன் என்பதைக் கேள்விக்குட்படுத்தவில்லை. அது வரலாறு. கருணாநிதிக்கும் அதுதான் வரலாறு. உரிய காலத்தில் நாம் எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யத் தவறி விடுகிறோம். நம்மை நாமே அங்கீகரித்துக்கொள்வதற்கு– நம்மை ஒருபோதும் தன்னெழுச்சியாய் அங்கீகரிக்காத இனப்பகையாளிகளின் தர மதிப்பீட்டை எதிர்பார்த்துக் காத்திருக்கிறோம். இங்கு வெளிப்படையாக ஒன்றைச் சொல்லத் தோன்றுகிறது. முறைகேடான அதிகாரப் பொறுக்கித்தனங்களில் கருணாநிதிக்கு இணையான அல்லது அதனினும் கூடுதலான குற்றச்சாட்டுக்கு உரியவர்தான் ஜெயலலிதா. கருணாநிதி 50 ஆண்டுகளில் வளர்த்தெடுத்த அரசியல் தடித்தனங்களை ஜெயலலிதா அதில் ஐந்தில் ஒரு பங்கு காலத்தில் வென்றெடுத்தார். வர்ணாசிரமம் அவருக்கு வழங்கிய வசதி அப்படி. ஜெயலலிதா தன் இருப்பிடத்திலிருந்து இழுவை ரயிலில் மலை உச்சிக்குச் செல்லக்கூடியவர். கருணாநிதி அதே தூரத்தை நடந்தே கடந்து உச்சியை வசப்படுத்தியவர். ஆனாலும் ஜெயலலிதாவின் அடாவடித்தனங்களை ஒரு பராக்குப் பார்வையில் கண்டுகொள்ளாமல் நழுவவிடுவதற்கும், அவரது அரசியல் செயல்பாடுகளை வெகு நெளிவுசுளிவுகளோடும் நீக்குப்போக்கோடும் உள்ளார்ந்த கொண்டாட்ட உணர்வோடும், எங்கே இந்தப் பார்ப்பன நெல்லுக்குப் பாய்ச்சும் நீர் ‘திராவிடக் கட்சி’ என்னும் புல்லுக்கும் போய்ச் சேர்ந்துவிடப் போகிறதோ என்னும் தள்ளிவைப்பு எச்சரிக்கை உணர்வோடும் பாராட்டுவதற்கும் ஆசீர்வதிப்பதற்கும் ஜாக்கிரதைப் படுத்துவதற்கும் எத்தனை எத்தனை ஊடகக் கைகள் கைநிறைய அட்சதையோடு கண்மறைவில் காத்திருக்கின்றன! நமது சூத்திர உடன்பிறப்புகள் இல்லையென்றால் ஜெயலலிதா அரசியல் தளத்தில் நிற்க ஒரு குண்டூசித் தலையளவு நிலம்கூட இல்லை என்பது யாருக்குத் தெரியவில்லை? தன் தலைமையைப் பற்றுறுதியோடு தக்கவைத்துக்கொள்ள, கருணாநிதியால் ‘எடுத்தேன் கவிழ்த்தேன்’ என்று மேற்கொள்ளப்பட்ட அரசியல் களையெடுப்பில் முகிழ்த்த இரண்டாம் கட்ட விளைச்சல் அல்லவா ஜெயலலிதா. ஊடகங்கள் பதுங்கித் தாங்கும் அவரது இருப்பையும் ஜொலிப்பையும் நம்மால் பார்த்துக்கொண்டிருக்கத்தான் முடிகிறது என்பதோடு, இடைவிடாத அந்தப் பாவனைக்கு நாளாவட்டத்தில் பலியாகவும் நேர்கிறது. ஆனால் கருணாநிதி விஷயத்தில் அப்படியொரு தோழமை உண்டா? இவரது ஒவ்வொரு செயலையும் ஒளி குன்றச் செய்து உள்ளரங்குப் பகடிக்குட்படுத்துவதிலும் மலினமாகப் பொருட்படுத்து வதிலும் என்னமாய் மேட்டிமைத்தனம் விளையாட்டு காட்டுகின்றன! நமக்கும் பல உடன் பாடின்மைகள் இருப்பதால் எப்போதும்போல அவர்களையே வழிமொழிகிறோம். தர்க்கரீதியாக அது சரியாக இருக்கலாம். ஆனால், நோக்க ரீதியாக நாம் அவர்களிலிருந்து வேறுபட வேண்டிய புள்ளிகளைத் தவற விட்டுவிடுகிறோம். அதன் காரணமாக நமக்கும் நம் நலன்களுக்கும் எதிராகவே நாம் சென்றுகொண்டிருக்கிறோம். அந்த ஊடகங்களைப் பொறுத்தவரை கருணாநிதி ஒழித்துக்கட்டப்பட வேண்டியவர். ஆனால் நம்மைப் பொறுத்தவரை? அதிக பட்சம் போனால் ‘ஒழியட்டும் போ’ என்று விட்டொழிக்கப்பட வேண்டியவர். பிறகெதற்கு இனநல அரசியலை இழுத்திழுத்து மோப்பம் பிடிப்பது? ஜெயலலிதாவை விட்டால் இன்னொரு பார்ப்பனப் பிறவி தமிழ்நாட்டில் ஆட்சிக்கு வரமுடியாது என்பதால்– காஞ்சி மடத்தைத் தன் அகம்பாவத்தால் கழுதை புரளும் புழுதிக்களமாக்கிவிட்டவர் என்றாலும் – பார்ப்பனர்கள் அவரை ஆதரிப்பதையும் கொண்டாடுவதையும் தங்கள் வாழ்வாதாரக் கடமையாக்கிக் கொண்டுள்ளனர். பொறுக்கித் தின்னும் கட்சி அரசியலில் நாம் வெகுவாக முன்னேறிவிட்டதாலும், அதைக் கருணா நிதிதான் கூர்மைப்படுத்தியவர் என்பதாலும் நம்மால் ஓரணியில் நின்று அவரைக் கொண்டாட முடியாது. நமது தன்மானம் – அப்படியொன்று இன்னும் ஒட்டிக் கொண்டிருக்கும் பட்சத்தில் – இடம் கொடுக்காது. ஆனால் அவர் வென்றடைந்த



வரலாற்றிடத்தை அதே வரலாற்றுணர்வுடன் கொஞ்சம் அண்ணாந்து பார்க்க அந்தத் தன்மானம் அனுமதிக்காது எனில் அதனால் நமக்கென்ன பெருமை? வெளிச்சப் பூனைகளுக்கு கருணாநிதியின் ஒவ்வொரு அசைவும் அல்லது அசைவின்மையும் விமர்சனத்துக்குரியதுதான். ஆனால் அந்த விமர்ச னத்துக்கூடாகவே, அவனவனும் கோவணத்தில் சீலைப்பேன்களை உற்பத்தி செய்துகொண்டிருந்த போது இந்தக் கலைஞன் கோவணத்தை அவிழ்த் தெறிவதையும் தனக்கான ஊக்க மருந்தாக்கிக் கொண்டு, தன் வெற்றித் தலைப்பாகைக்கு வண்ண இறகுகளை உழைத்துச் சேகரித்துச் செறுகிக் கொண்டவன். எப்படி சேகரித்தான் என்பது யாராலும் நிகழ்த்திவிடக் கூடிய விமர்சனம். அந்த விமர்சனம் இறகுகளின் நிறத்தைக் குறைத்துக் காட்டலாம். ஆனால் அவற்றின் இருத்தலை மறுத்துவிடாது அல்லவா?”

“ஐயா, நீங்கள் மூச்சுத் திணறுகிற அளவுக்கு மூழ்கிப் பார்த்து விடுவது என்று தீர்மானித்துவிட்டீர்கள். நான் காய்ச்சல்காரன். கரையில் ஒதுங்கிக்கொள் கிறேன்.”

“கருணாநிதியை முன்வைத்தா?”

“அறியப்பட்ட வரலாற்றுக் காலம் தொட்டு நனி நாகரிகம் பேணிப் பங்கப்பட்டுப்போன தமிழ் மொழி, தமிழினம், தமிழ் நிலம் சார்ந்த, பொற்கனவின் மீட்டுருவாக்க அரசியல் களத்தில் உதய சூரியனைக் கண்டெடுத்தவர்கள், காய்ந்த மாடு கம்பங்கொல்லை யில் புகுந்தாற்போல வெறும் சில்லறை மோகங்களி லேயே கனவைத் தகர்த்துவிட்டார்கள். அதைக் கனகச்சிதமாகச் செய்து முடிப்பதற்கென்றே ஆயுள் நீட்டிப்புப் பெற்றவர்தான் கருணாநிதி. அவர் வென்றெடுத்த வரலாற்றைக் கண்டு களிப்பதற்கு நெஞ்சுரம் வேண்டும் ஐயா. அது இப்போது உங்களிடம்தான் இருக்கிறது. அனாதை பிணத்தை அடக்கம் செய்ய நடைபாதையில் பாவாடை விரித்துச் சில்லறை சேர்த்தே சீமான்களானவர்கள் எத்தனை பேர்? நகை செய்யக் கொடுத்தவனுக்குச் சேதாரங் களையே கணக்குக் காட்டித் தீர்த்துவிடும் திருட்டுக் கனவான்கள் எத்தனை பேர்?”

“கண்மண் தெரியாத கோபத்தில் தன்னைத்தானே செருப்பால் அடித்துக் கொள்வதில்லையா? அதற்கு மேல் இதில் தேற்றுவதற்கு ஒன்றுமில்லை. இதை நம் எதிரிகள் செய்யட்டும். நாமும் ஏன் அந்த முட்டுச் சந்திலேயே சென்று முடங்கிக்கொள்ள வேண்டும்? எல்லாக் காலங்களிலும் அரசியல்வாதிகள் மக்களின் பலத்தையும் பணத்தையும் சார்ந்தே வாழ்ந்திருக் கிறார்கள்; வளர்ந்திருக்கிறார்கள். அரசியல் கேணையர்கள் தங்கள் அன்றாடத் தேவைகளை மட்டுமே தொண்டர்களின் பணத்தில் நிறைவு செய்து

கொண்டு கட்சி வளர்த்திருக்கிறார்கள். காமராசர் ஏன் திருமணம் செய்துகொள்ளவில்லை தெரியுமா? "நமக்கென்று ஒரு தொழில் இல்லை. வருமானம் இல்லை. நாம் எப்படி இன்னொருத்திக்கும் செலவு செய்து குடும்பத்தைக் காப்பாற்றுவது?" என்று யோசித்தே மணவாழ்வை மறுத்தார். பெற்ற தாய்க்கும் கூடப்பிறந்த சகோதரிக்கும் பணம் கொடுப்பதில் அவர் காட்டிய கருமித்தனமும் இதன் காரணமாகத்தான். எவ்வளவு பெரிய தலைவர்! எவ்வளவு பெரிய கவலை! மக்கள் அவரைத் தலைவராகப் போற்றி ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் 'நாடு, மக்கள், சுதந்திரம், சத்தியம்' என்று கிறுக்குத்தனமாகப் பிதற்றிக்கொண்டு ஊரைச் சுற்றிக்கொண்டிருந்த கேணையர்தானே அவர்? பணக்காரர்களுக்கு அவர் சலுகை காட்டாதபோது அவர்கள் அப்படித்தான்அவரைத் தூற்றினார்கள். அவரின் பெருமை அறிந்து, தங்களுக்கு வசதியும் வருமானமும் இருந்தும் தாங்களும் திருமணம் செய்துகொள்ளாமல் அவரின் நண்பர்களாகப் பயணித்தவர்கள்தாம் முருக தனுஷ்கோடியும் மகாதேவனும். முருக தனுஷ்கோடி தனது தாயாருக்கு உதவுவதைக்கூடக் கட்டுப்படுத்தியவர் காமராசர். அரசியலில் இப்படி ஒரு கிறுக்கு மகானும் இருந்திருக்கிறார். ஆனால் இன்றைய அரசியல் கில்லாடிகளோ தங்கள் வருங்கால தலைமுறை களுக்கும் வசதி செய்துகொண்டு பொதுவாழ்வைத் தங்களின் வணிக முதலீடுகளாக்கி இயங்கு கிறார்கள். பொதுவாழ்வில் அவர்களது பங்களிப்பு என்ன, வரலாற்றில் அவற்றின் இருப்பிடம் யாது என்பது பற்றியே நான் இந்தக் கவனத்தை முன்வைக்கிறேன். உணர்ச்சிகரமான உங்கள் குற்றச்சாட்டுகளைக் கனவு காண்பவர்களின் கையறு புலம்பல் என்பதாகவே யதார்த்தவாதிகள் வரையறை செய்யக்கூடும். ஆயினும் ஒரு சுகமான கனவு மிகக் குரூரமாகப் பொய்த்துப் போனதின் சோகத்தை இதை விடக் காத்திரமாகச் சொல்லிவிட முடியாது. நானே அந்தக் குரூரத்தின் சமகாலப் பார்வையாளனும் பட்டறிவாளனும் என்பதால் அதன் வலியை என்னால் ஆழங்காண முடிகிறது. ஆனாலும் ஒன்று நிச்சயம்: அரசியல் தளத்தில் ஒரு கனவு – அதுவும் பொற்கனவு –ஒரு நாளும் முழுமையாக மெய்ப்பட்டதில்லை. யதார்த்தங்களின் இழுபறிகளை மீறி மக்கள் வெள்ளத்தைத் தன்னோடு இழுத்துச் செல்லும் நதியைப் போல் ஒரு தலைவன் கிடைத்தால் ஒருவேளை அந்தக் கனவின் தணலை மண்ணில் விதைப்பது சாத்தியமாகலாம். நமக்குக் கிடைத்த தலைவர்களோ மக்கள் திரண்டெழுந்தபோது தங்களை உள்ளீடற்றவர்களாய்க் காட்டிக்கொண்ட வர்கள். தங்கள் இயலாமைகளை வெற்று முழக்கங் களால் மூடி மறைத்தவர்கள். ஒரு விடியலின் பரவச எழுச்சிக்குத் துணை நிற்கும் தொலைநோக்கற்ற களிமகன்கள் அவர்கள். அரசதிகாரத்தை நெருங்கும் முன்னரே திராவிடக் கட்சியினர் நம்மை நிறை வின்மைகளின் ஊமைத் தொகுப்பாக்கி முட்டுச் சந்தில் நிற்கவைத்துவிட்டார்கள் என்பதே உண்மை. இன உணர்வை ஊட்டியவர்கள் அதற்குரிய மான உணர்வு கொண்ட மதிப்பிடத்தை இந்திய வரை படத்தில் வென்றெடுத்திருக்க வேண்டும். மாறாக, நம்மைப் படகுகளற்ற தீவுவாசிகளாக வரையறுத்து முடக்கிவிட்டார்கள். இந்திய ஒன்றியத்தால் 'இவர்கள் அபாயகரமானவர்கள்' என்று அடையாளப்படுத்தும் படியாய், அதே நேரத்தில் தமிழகத்தில் தன்மதிப்பற்ற சோற்றுப் பிண்டங்களாய் நம்மை வாழப் பணித்து விட்டார்கள். தமிழன் என்றால் கூலி என்று ஒரு பொருள் உண்டு. பொதுப்பார்வையில் அது உண்மை என்பதாகவே அரசியல் தளம் கட்டமைக்கப்பட்டுவிட்டது. தலைவர்கள் என்பவர்கள் தங்களையே விற்றுக்கொள்ளும் தரகுக் கூலிகளாகவே தகவமைத்துக் கொண்டுவிட்டார்கள். இப்படிப்பட்டதொரு அசம்பாவிதச் சூழலில்தான் கருணாநிதியின் வரலாற்றிடம் தமிழ் மண்ணில் சாதிக்க முடிந்த இன்னொருவகை அடையாளச் சின்னமாய் முதன்மை பெறுகிறது."

"ஐயா, என் பேசியின் மின் சேமிப்பு வற்றிவிட்டது."

"ஆனால், எனக்குச் சொல்ல இன்னும் நிறைய இருக்கிறது."

முதல் தடவையாக எனக்கும் அவருக்குமான இடைவெளி உறைத்தது. இதில் என் போதாமையின் பங்கென்ன? எப்படி இது நேர்ந்தது?

மனம் மீண்டும் சில கணங்களுக்குத் தன்னிச்சையாய் உரையாடிச் சென்றது:

கண் முன்னே வடிவெடுத்துக்கொண்டிருக்கும் சமகால வரலாற்றை பொற்கனவுப் புனைவாளர்கள் பொருட்படுத்துவதில்லையோ. இதில் உறைந்திருப்பது மிகையறிவுக் கற்பிதங்களோ. நீரலைகளின் ஆடுகளமாய் விரிந்து தளும்பும் ஏரியின் வடிகால் (கலிங்கி) எல்லாக் காலங்களிலும் நீராடிச் சோர்வதில்லைதானே.

## 2

சில நாட்களுக்குப் பிறகு அவர் மீண்டும் தொடர்பு கொண்டபோது, "இந்த இதழில் கருணாநிதியின் பிறந்த நாள் பற்றி உங்களோடு பகிர்ந்துகொண்டதுதான் முதல் கவனமாக இடம் பெறுகிறது," என்றேன். முன்போலவே அதில் அவருக்கொரு பராக்குப் பார்வை இருந்ததோடு, "அண்மையில் பழைய சஞ்சிகைகளைப் புரட்டிக்கொண்டிருந்தபோது, தானும் மஞ்சள் துண்டு போட்டுக்க யோசிக்கறதா ஞாநி சொல்லியிருந்ததை வாசிக்க நேர்ந்தது. வேற என்ன, ஐயா?" என்றார்.

எனக்குத் திகைப்பாய் இருந்தது.

"ஊசியில் ஒட்டகம் நுழைஞ்சதை பார்த்திருக்கீங்களே. பரவாயில்லை. பிறகு பேசலாம்," என்றதோடு அந்த உரையாடல் முடிந்தது.

ஞாநியின் நக்கல் அவருக்குப் பிடித்திருந்தது என்றே தோன்றியது. அவரது 'ஓ' பக்கங்களை தீம்தரிகிட, ஆனந்த விகடன், குமுதம் வரை தோழர் வாசித்துக்கொண்டிருக்கலாம். எழுத்துச் சுதந்திரத்தைக் காக்கவே பிறவியெடுத்த ஞாநி, பதிப்புரிமை விஷயத்தில் வெகு ஆடம்பரமாகக் குமுதத்தை அசிங்கப்படுத்திக்கொண்டு வந்தவர், இப்போது அதே பத்திரிக்கையில் தன் கடந்த கால விமர்சனத்தை மறந்துவிட்டு எழுதிக்கொண்டிருப்பது என்ன நேர்மை என்று தோழர் கேட்கவில்லை. அது அவருக்குப் பிடிபடவில்லை. பட்டிருந்தால் 'இவர் பத்தி எழுதி வயிறு வளர்க்கிற ஆசாமிதானே ஐயா?' என்று கேட்கக்கூடியவர்தான். ஞாநியோடு உடன்படுவதில் உள்ள கோளாற்றை – குறைந்தது மஞ்சள் துண்டு விஷயத்திலாவது– சரி செய்துகொள்வாரா என்று தெரியவில்லை.

இதுதான் கொடுமை. என்னுடைய மக்கள் இன்னமும் இரவல் புலன்களைத்தாம் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். ஓரளவு விழிப்புநிலை எய்திய அறிவு ஜீவிகள் கூட இரண்டொரு தருணங்களில் தங்கள் சொந்தப் புலன்களைப் பயன்படுத்தினாலும், அனிச்சையாக இரவல் புலன்களையே, அதாவது பார்ப்பனப் புலன்களையே பயன்படுத்து கிறவர்களாக – சொந்தப் புலன்களின் மதிப்பீடுகளில் நம்பிக்கையற்றவர்களாகத் தள்ளாடுகிறார்கள். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் தனக்கான ஐந்து புலன்களையும் அவமதித்துவிட்டு – எவன் நம்மை இன்னமும் இழிவுபடுத்துகிறானோ, அவனுடைய புலன்களைக்கொண்டே நம்மை மதிப்பிட்டுகொள்வது எவ்வளவு பெரிய அவலம் அல்லது அறிவீனம்!

கருணாநிதி மஞ்சள் துண்டு போட்டுக்கொள்கிறார் என்பதை பார்ப்பன மனம் ஒரு குற்றமாகவே கருதுகிறது. அதற்கு மதச்சாயம் பூசி, மடாதிபதிகளுக்குரியதாக்கி, புனிதச் சின்னத்தை ஒரு சூத்திரன் பயன்படுத்தித் தன்னைப் புனிதனாகக் காட்டிக் கொள்ள முயல்கிறானோ என்று வன்மம் கொண்டு நக்கல் செய்கிறது. கடவுள் நம்பிக்கையற்ற கருணாநிதியின் மூடநம்பிக்கை என்று தன் உமட்டலை, ஒரு புனைவின் மேல் ஏற்றி, பெரியாரியவாதிகளையே, 'அட, ஆமாம்' என்று நம்பச் செய்து குதர்க்கம் செய்கிறது. அப்பாவிச் சூத்திரன்களும் அதை அப்படியே குமட்டியெடுத்துத் தங்கள் மேதைமையைப் பறை சாற்றிக்கொள்கின்றனர். ஒரு பேச்சுக்குத்தான் கேட்கிறேன், கடவுள் நம்பிக்கையற்றவர்கள் முட்டாள்களாகவோ மூடநம்பிக்கையாளர்களாகவோ இருக்கக் கூடாதா? அதாவது முட்டாள்தனமும் மூட நம்பிக்கையும் பக்திமான்களுக்கு மட்டுமே உரிய பவிசுகளா? ஒரு நம்பிக்கை வழிவழியாக வந்த கலாச்சார நம்பிக்கையா, மூட நம்பிக்கையா என்பது எதைக்கொண்டு அளக்கப்படுகிறது?

எனக்குக் கடந்த 18 ஆண்டுகளில் கடவுள் நம்பிக்கையே அற்றுப் போய்விட்டது. அதற்கு முன்பிருந்தே மூன்று நம்பிக்கைகள் எனக்குண்டு. ஒன்று, ஒற்றைப் பார்ப்பான் எதிரில் வந்தால் நல்ல அறிகுறி. இரண்டு, செவ்வாய்க்கிழமை தொடங்கும் செயல்

வெற்றிகரமாக முடியும். மூன்று, நான் மழையில் நனைந்து சென்றால் செல்லும் நோக்கம் நிறைவேறும்.

சிறுவயதில் என் ஊரிலிருந்து கிழக்கே எட்டு கி.மீ. தொலைவில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் படித்துவந்தேன். பள்ளியிலிருந்து தெற்கே எட்டு கி.மீ. தொலைவில் என் தாய் மாமன் வீடு. பள்ளிக்கு ஏதேனும் கட்டணம் (ஒற்றை இலக்க ரூபாய்கள்தாம்) கட்ட வேண்டுமானால், அம்மாவால் அதைச் சமாளிக்க முடியாமல் போகும்போது அதைப் பெற மாமா வீட்டுக்கு மாலையில் செல்வேன். பல சமயம் மழையில் நனைந்து கொண்டே செல்வேன். மழை வந்து நனைவது எனக்குப் பணம் கிடைத்துவிடும் என்பதற்கான நம்பிக்கையின் அறிகுறி. மறுநாள் பணத்தோடு பள்ளிக்கு வந்து விடுவேன். ஒருநாள் மழையில் நனைந்து சென்றும் மாமா பணம் இல்லை என்று சொல்லிவிட்டார். எனக்கு அவமானமாக இருந்தது. அன்றே என் நம்பிக்கை குலைந்திருக்க வேண்டும். ஆனால் மாமா வயலுக்குச் சென்றதும் வீட்டில் இருந்த துவரையைக் கொட்டி எடுத்துக்கொண்டு சென்று யாரிடமோ விற்றுப் பணம் பெற்று வந்து எனக்குக் கொடுத்துவிட்டார் எனது அன்பான மாமன் மனைவி. இப்போது அந்தக் கரிசனத்தை நினைத்தாலும் கண்கள் சுரக்கின்றன. பணம் தேவைப்படாத நாட்களிலும் மழையில் நனைந்து சென்றதும், நனையாத நாட்களிலும் பணம் பெற்று வந்ததுமான சம்பவங்கள் அந்த நம்பிக்கையைக் கேள்விக்குட்படுத்தவில்லை. மற்ற இரு நம்பிக்கைகள் பற்றிப் பார்ப்பனக் கருத்தியல்வாதிகளுக்குக் குற்றம் சொல்ல ஏதும் இருக்காது என்று நினைக்கிறேன். இதுபோன்ற சிறுசிறு விஷயங்கள் கவனத்தில் உறைக்கும்படி தொடர்ந்து நடந்துவிட்டால் அவை சந்தோஷம் தரும் நம்பிக்கை அம்சங்களாக மனிதர்களை ஆசுவாசப்படுத்துவதுண்டு. சிறு வயதில் நான் படித்த ருஷ்ய நாவல்களில் கதைத்தலைவிகள் குருட்டாம் போக்கில் புத்தகத்தைத் திறந்து விரலால் தொட்டு, தொட்ட சொல்லின் பொருளுக்கேற்ப சகுனம் பார்ப்பார்கள். அப்போது நாமே நற்சொல்லாகி அவர்களுக்கு ஆறுதல் தரக்கூடாதா என்று மனம் கிடந்து மறுகும். அது போலொரு மனத்துக்குப் பிடித்த செயலாகத்தான் கருணாநிதியின் மஞ்சள் துண்டு விவகாரமும் வந்து ஒட்டிக்கொண்டிருக்க வேண்டும். இந்த நம்பிக்கைகள் எப்போது மூடத்தனமாக மாறும்? நான் உடனடியாகப் புறப்படவேண்டிய தருணத்தில் ஒற்றைப் பார்ப்பான் வருகைக்காகக் காத்திருந்து என் வாய்ப்பை நழுவவிட்டாலோ, 'நான் மஞ்சள் துண்டு போட்டுக் கொள்ளாமல் ஒன்றுக்குப் போக மாட்டேன்' என்று அடம்பிடித்து நடுக்கூடத்தில் தன் துணியை நனைத்துக்கொண்டாலோ அது மூடநம்பிக்கை ஆகும். அது உதவாக்கரை மூடநம்பிக்கை என்பதை அதனால் ஏற்படும் நட்டமே மெய்ப்பித்துவிடுகிறது. இதிலுள்ள ஒரேஒரு நெருடலான அம்சம் என்னவெனில், 'வெயிலுக்குக் கருப்புக் கண்ணாடி பிடிக்கிறாற்போல் மஞ்சள் துண்டு மனசுக்குப் பிடிச்சிருக்குப்பா' என்று தன் எளிய மனச் சாய்வை வெளிப் படையாகச் சொல்லிவிட்டுப் போகாமல் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு அதற்கு விளக்கம் சொல்லிச் சமாளிக்க முயன்ற கருணாநிதியின் அசட்டுத்தனந்தான். கருணாநிதி போன்ற பெரிய மனிதர்களுக்கு இந்த வகை அசட்டுத்தனங்களே அரசியல் விலாசங்களோ என்னவோ.

இங்கே நான் இன்னொன்றையும் தோழருக்கு நினைவுபடுத்தக் கடமைப்பட்டுள்ளேன். அண்மையில் நேபாளத்தில் வெற்றி பெற்ற மாவோயிஸ்டுகள் அவர்களின் தலைவர் பிரச்சன்டா உட்பட நம்மூர் ப.ஜ.க.காரர்களைப்போல் நெற்றி முழுக்க குங்குமத்தைத் தீற்றிக்கொண்டு காட்சியளித்தார்கள். நேபாளத்தோடு தோழருக்குப் பரிச்சயம் உண்டு என்பதால், 'என்ன இவர்கள் இந்துமாவோயிஸ்டுகளா?' என்று கேட்டேன். 'அதை அவர்கள் தங்கள் கலாச்சாரமாகப் பேணுகிறார்கள், ஐயா,' என்றார். 'இந்துக் கலாச்சாரத்தின் கடைசிப் புள்ளி சாதி ஏற்றத்தாழ்வுதானே?' என்றேன். 'இதை ஆராய வேண்டும்,' என்றார். இது மஞ்சள் துண்டைவிட மோசமான கலாச்சாரமாக எனக்குப் பட்டது.

குறைந்தபட்ச புத்திசாலித்தனத்தோடு வெகு இயல்பாகப் புரிந்து கொள்ளக்கூடிய சிறுசிறு நிகழ்வுகள்கூட கருணாநிதி சம்பந்தப்பட்டுவிட்டால் வெகு கோளாறாகவே பார்க்கப்படுவது அவரது வளர்ச்சியோடு கூடவே ஒட்டிக்கொண்டுவரும் வழக்கமாகிவிட்டது.

## 3

அண்மையில் புட்டபர்த்தி சாய்பாபா அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தார். (இராம கோபாலன் கூடச் சென்றார்தான். அப்போது எழாத பிரச்சினை இது.) கருணாநிதியின் வீட்டுப் பெண்கள் சாய்பாபாவை வணங்கி வாழ்த்து பெற்றனர். உடனே விமர்சனம் வெடித்தது. 'தன் வீட்டுப் பெண்களைக் கூடத் திருத்த முடியாத இவர் என்ன நாத்திகர்' என்னும் சுயமரியாதைக் குறைவான விமர்சனம் அது.

'உலகத்தில் ஒரே ஒரு கிறிஸ்தவர்தான் உண்டு. அவர்தான் ஏசுகிறிஸ்து' என்று சொல்லப்படுவதுண்டு. பெரியாரைப் பற்றியும் அப்படியொரு சொல்லாடலை உருவாக்கலாம்.

பெரியார் தனது முதல் பத்திரிகையைத் தொடங்கும் வரை கடவுளைக் கேள்விக்குட் படுத்தாதவராகவே வாழ்ந்துள்ளார். அடிநிலையில் எல்லாரும்போல அவரும் ஒரு உடைமைச் சமூகத்தின் ஆணாதிக்கவாதியாகவே அடையாளப்பட்டிருந்தார். சமூகச் சிக்கல்களில் கவனம் குவியக்குவியத்தான் தீவிர பகுத்தறிவுக் கருத்தாக்கங்களால் ஈர்க்கப்பட்டு ஒரு தனித்துவமாக முற்றிக் கனிகிறார். (எனக்கு அவரிடத்தில் ஒரு வருத்தம் உண்டு. பின்னாளில் தமிழில் எழுத்துச் சீர்திருத்தம் பற்றி யெல்லாம் யோசித்துச் செயல்பட்டவர் தமது புதிய கருத்தாக்கங்களுக்கு ஏற்ப புதிய சொல்லாக்கங்களை உருவாக்க முயலாமல் தவிர்த்துவிட்டார். மாறாக, பழைய கறைபடிந்த சொற்களையே தமது புதிய கருத்தியல் தளத்திலும் பயன்படுத்துகிறார். சான்றாக, விலைமாதர்களைக் குறிக்க விபச்சாரிகள், வேசிகள் போன்ற இழி சொற்களே பயன்படுத்தப்பட்டன. இன்றைக்கு அவர்கள் 'பாலியல் தொழிலாளர்கள்' என்று ஓர் அடையாள நேர்மையோடு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். ஆனால் பெரியார் தன் எழுத்திலும் பேச்சிலும் விபச்சாரிகள் என்னும் சொல்லையே அதிகம் பயன்படுத்துகிறார் – இழிவு செய்வதற்காக அல்ல, விழித்தெழச் செய்வதற்காக.)

பெரியார் ஒரு பகுத்தறிவுவாதி, சுயமரியாதைக்காரர், சாதி – மத – கடவுள் மறுப்பாளர். இவற்றின் மொத்த அடையாளமான பார்ப்பனர்களையும் பார்ப்பன தர்மங்க ளையும் கடுமையாகத் தோலுரித்துக் காட்டியவர். இச்செயல்பாடுகளோடு அவரது சமூக நீதிச் செயல் பாடுகளையும் ஒன்றுசேர்த்து தராசின் ஒரு தட்டில் வைத்து அதற்குச் சமமாக இன்னொரு தட்டில் வைப்பதற்குக் கனமான விஷயம் உண்டென்றால் அதுதான் பெரியாரின் பெண்விடுதலை கருத்தாக் கங்கள். உலகத்திலேயே அவருக்கு இணையாக, எல்லா மிகை எல்லைகளையும் தொட்டு பெண் விடுதலை பேசியவர் இந்தக் கணம்வரை அவரைத் தவிர ஒருவரும் இல்லை. அப்படிப்பட்ட மகத்தான களப்பணிதான் இன்று வெறும் வாய் உபச்சாரச் சுட்டலாகவே, செயல்தளத்தில் முதன்மை பெறாத பதுங்கு பொருளாகவே கைவிடப்பட்டிருக்கிறது. கைவிட்டவர்கள் வேறு யாரும் அல்லர். பெரியாரிய வாதிகள் என்று சொல்லி மார்தட்டிக் கொள்கிற வர்கள்தாம். அவர்கள்தாம் கருணாநிதி வீட்டு பெண்களின் செயல்களுக்காக அவரை எகத்தாள மாக விமர்சிப்பவர்கள். பெரியாரால் கந்தல் கந்தலாகக் கசக்கி உலர்த்தப்பட்ட ஒரு விஷயம்தான் பெண்களின் மீது வல்லடியாகத் திணிக்கப்பட்டுப் புனிதப்படுத்தப்படும் கற்பு என்பதாகும். அந்தக் கற்பை மெழுகுப் பதமாய் உருக்கி வார்த்து, பெண்ணடிமைத் தனத்திற்குத் தங்க முலாம் பூசி 'இதுதான் எங்கள் தமிழ்ப் பண்பாடு' என்று உயர்த்திப் பிடித்துக் கொண்டிருப்பவர்கள்தாம் இன்றைய பெரியாரிய வாதிகள் அல்லது பெரியாரை மிதித்துக்கொண்டு மேலேறிச் சென்ற தமிழியவாதிகள். கண்ணகியை நீதிக்குப் போராடியவள் என்பதற்கும் மேலாக கற்புக் கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம் என்பதாகவே கொண்டாடுகிறவர்கள் இவர்கள். இதற்குக் கருணாநிதியும் விலக்கல்ல. ஆனால் அவரையும் மீறி அவரது புழங்குதளத்தில் பெண்கள் தங்கள் பொதுவாழ்வின் அடையாளங்களை மீட்டெழுதிக் கொண்டு விடுகிறார்கள் என்பதுதான் சிறப்பு. அது அவருக்கு உழைக்காமல் கிடைத்த ஊதியம் போல.

பெரியாரியவாதிகள் அல்லது திராவிடக் கட்சிக் காரர்கள் அல்லது தமிழ் பண்பாட்டாளர்கள் பெரியாரிடமிருந்து முற்றாக முரணிய இடம் இதுதான். பெரியார் பெண் விடுதலையை ஏதோ தன் இயக்கக் கடமையாக மட்டும் முன்னெடுக்க வில்லை. மாறாக பெண்களின் இருப்பை, அவர்களது சுயத்தை வெகு இயல்பாகவும் காத்திரமாகவும் அங்கீகரித்தவர் . அவருக்கு இணையாகவே அவரது

துணைவியாரும் சகோதரியும் பொது வாழ்வில் பங்கு பற்றியவர்கள். இன்றைக்குள்ள பெருந்தலைகளில் எத்தனை பேர் தங்கள் வீட்டுப் பெண்களைப் பொதுமக்களுக்கு அறியப்படுத்தியுள்ளார்கள்? தாங்கள் கலந்துகொள்ளும் கூட்டங் களில் நாற்காலி பொம்மைகளாகக்கூட அவர்களை அழைத்துவந்து அமர வைப்பது இல்லை. கற்புக்கடம் பூண்ட பொற்புடைப் பெண்டிற்கு இது அழகல்ல என்பது அவர்களது அடிமனப் பிடிவாதம்.

பெரியார் காலத்தில் அவரது இளம் தொண்டர்கள் சாதி மறுப்புத் திருமணம் செய்துகொண்டார்கள். மூத்த தொண்டர்களும் தங்கள் பிள்ளைகளுக்கு அவ்வாறே செய்துவைத்தார்கள். அத்திருமணங்களை அந்தக் காலத்தில் 'கலப்புத் திருமணம்' என்றே அழைத்தார்கள் – ஏதோ குதிரையும் கழுதையும் கட்டிக்கொண்டு கோவேறு கழுதைகளைப் பெறப் போவது போன்ற ஓர் அர்த்தத்தில். தங்கள் பெண்கள்– பிள்ளைகளுக்குச் சாதி மறுப்புத் திருமணம் செய்துவைத்தவர்கள் தங்கள் இச்சைப்படி, தங்கள் புகழுக்காகத்தான் செய்தார்களே தவிர அந்தக் குழந்தைகளின் சம்மதத்தைக் கோர வேண்டும் என்றுகூட நினைக்கவில்லை. இதிலும் அவர்களின் ஆணாதிக்க மனோபாவம்தான் பின்னப்படாமல் தன்னைக் காப்பாற்றிக்கொண்டது. சாதி மறுப்புத் திருமணங்கள் பலவற்றிலும் அடிநிலை சாதியினர் பெரும்பாலும் அவமானம் சுமந்து அந்நியப்படுத்தப்படுகிறவர்களாகவும், பாரம் சுமந்து சிதைக்கப்படுகிறவர்களாகவுமே நோகடிக்கப் பட்டிருக்கிறார்கள்.



கருணாநிதியும் ஒரு ஆணாதிக்கவாதிதான் என்பதில் சிறிதளவும் சந்தேகப்பட வேண்டியதில்லை. எனினும் புட்டபர்த்தி வருகை விஷயத்தில் தான் ஒரு கடவுள் மறுப்பாளர் என்றாலும் தன் வீட்டுப் பெண்களின் ஆசிபெறும் ஆசையை அங்கீகரித்தவராகவே கண்ணியம் காத்தார் என்றே இதைப் பார்க்கத் தோன்றுகிறது. இரண்டு பெண்கள் ஒருத்தரையே விரும்பிய போது தனக்கு விருப்பம் இல்லை என்றாலும் அவர்கள் விருப்பத்தை மறுக்கக்கூடாது என்பதற்காகவே திருமணத்தை நடத்திவைத்தவர் பெரியார். பெரியாரிடமிருந்த ஏதேனும் ஓர் அம்சம் தென்பட்டாலும் அந்த மனிதனைப் பெரியாரிய வாதியாக ஏற்கலாம் என்றால், மற்றவர்களை விடத் தன்னை எப்படி தவிர்க்க முடியாத தலைவராக நிறுவிக் கொண்டாரோ அதுபோலவே கூடுதல் தகுதியுள்ள பெரியாரியவாதியாக நடந்துகாட்டத் தெரிந்தவர்தான் கலைஞர் கருணாநிதி. இத்தனைக்கும் அவருக்குப் பெரியார் என்னும் ஆளுமையின் மேல் மரியாதை உண்டே தவிர, பெரியார் என்னும் நபர்மீது பற்றோ பாசமோ கொண்டவர் என்று சொல்லிவிட முடியாது. கருணாநிதியும் அவரது மனசாட்சி என்று அறியப்பட்ட முரசொலி மாறனும் தங்கள் முரசொலிப் பத்திரிகையில் பெரியாரைச் சிறுமைப்படுத்தி எழுதியவர்கள்தாம். அவர்கள் இருவரும் உறவினர்கள் என்பதோடு நிறுத்திக் கொண்டிருக்கலாம். அவர்களது அரசியல் கூட்டானது தர்க்கத்துக்குத் தகுதியில்லாதது. கருணாநிதி தமிழினத் தலைவராக அறியப்பட்ட அதே நேரத்தில் "தமிழ் படித்தால் டேபிள்தான் துடைக்கலாம்," என்று பகடி பண்ணிப் பழித்தவர்தான் முரசொலி மாறன். அதெல்லாம் பழங்கதை என்று ஒதுக்கிவிட்டு மேலே செல்ல வேண்டியதுதான்.

# 4

கருணாநிதி மீது துடைத்தெறிய முடியாத பழியாக மேலும் ஒரு குற்றச்சாட்டு வைக்கப்படுகிறது. 1971இல் மதுக்கடைகளைத் திறந்துவிட்டார் என்பதுதான் அந்த குற்றச்சாட்டு. அதுவரை மதுவிலக்கு நடை முறையிலிருந்த மாநிலம் தமிழ்நாடு. மதுக்கடை திறப்பு ஒரு சமூகப் பொறுப்பற்ற, ஒழுக்கமற்ற, தடித்தனமான குற்றச்செயலாக எப்படி மாறுகிற தெனில், மூதறிஞர் ராஜாஜி தன் தள்ளாத வயதிலும் கொட்டும் மழையைக் கூடப் பொருட்படுத்தாமல் கருணாநிதி வீடு தேடிச் சென்று மதுக்கடைகளைத் திறக்க வேண்டாம் என்று கை கூப்பிக் கெஞ்சிய பிறகும் அதை அவர் ஊதாசீனப்படுத்திவிட்டார் என்பதனால்தான். குல்லுகப் பட்டர் என்று அழைக்கப்பட்ட ராஜாஜிக்கு மூதறிஞர் பட்டம் கொடுத்துப் பதவி உயர்த்தியதே கருணாநிதிக் கும்பல்தான். மற்றபடி அவர் எப்போதும்போல இராஜநாகம் போலொரு இராஜகோபாலாச்சாரியாகத்தான் இருந்தார்.

மது அருந்துவது ஒன்றும் பாவச் செயலல்ல. ஆம் எனில் அது உலகளாவிய பாவச் செயல். தமிழனுக்கு அது தொல்புகழ்க் கலாச்சாரத் தொடர்ச்சி. அவன் கும்பிடுகிற தெய்வங்களும் போதை ஏற்றிக்கொண்டுதான் தன் மக்களுக்கு அருள்வாக்கு சொல்லும். ராஜாஜி அதைச் சமூகத் தீமையாகக்கூட அல்லாமல் ஒரு பாவச் செயலாகவே பட்டியலிடுகிறார். இன்று மது அருந்தாத பார்ப்பானை நீங்கள் கண்டுபிடித்துவிட முடியுமா என்பது மில்லியன் டாலர் கேள்வி. வேத காலத்திலும் அது சோமபானம் சூரியபானம் என்னும் பெயரில் பாபவிமோசன பானமாகவே பார்ப்பனக் கூட்டம் அருந்தி மகிழ்ந்தது. இடைப்பட்ட காலத்தில்தான் புதிய பார்ப்பனக் கலாச்சாரக் கூறாகத் தங்கள் பாவப் பட்டியலில் (தென்னாட்டு அசகாயச் சூத்திரனிலிருந்து தன்னைப் பேதப்படுத்திக் கொள்வதற்காக) மதுவையும் மாமிசத்தையும் சேர்த்துக்கொண்டார்கள். தமிழ்மானம் பேசும் கருணாநிதிக்கு அது ஔவை காலத்து கலாச்சாரம். ஔவை காலத்தில் சீமைச் சாராயம் ஏது? போதை ஊறிய புளித்த கள்ளைத்தான் குடித்திருப்பாள். தன் தோழன் அதியமானுடன் சேர்ந்து பகிர்ந்து கொண்ட போதை அது. ஆகவே, தமிழ்ச் சமூகத்திற்குக் குடிக்க வாய்ப்பளிப்பதில் கருணாநிதிக்கு எவ்வித உறுத்தலோ வருத்தமோ இருந்ததில்லை; இருக்கத் தேவையில்லை.

வேண்டுமானால் குடிப்பழக்கம் சமூகப் பிரச்சினையாக முற்றாமல் தடுக்க சமூக ஆர்வலர்கள் அரசுக்குச் சில பரிந்துரைகளை முன்வைத்திருக்கலாம். அரசுகள் மக்கள் நலன் காப்பவை என்றொரு மூட நம்பிக்கை நிலவி வருவதால் இந்தப் பரிந்துரைகள் இன்றியமையாதவைகளாகின்றன. மதுவின் பயன்பாட்டை அரண் செய்யும் நடவடிக்கை களையும் அரசே முன்னெடுக்க வேண்டும் என்பது சரியான கோரிக்கையாகவே இருக்கும். இன்று அரசே மது தயாரிப்பிலும் விற்பனையிலும் ஈடுபட்டிருப்பதால் அரண் செய்யும் காரியங்களையும் அரசே செய்வது எளிதாயிருக்கும். கோரிக்கைகளை இவ்வாறு வரிசைப்படுத்தலாம்: 1. சாராயக் கடைகளைத் திறந்த கையோடு கள்ளுக் கடைகளையும் திறக்க வேண்டும். 2. மதுக் கடைகளை மாலை 6 மணி முதல் 10 மணி வரை மட்டுமே திறந்திருக்க அனுமதிக்க வேண்டும். 3. ஒவ்வொருவரும் அவரவர் வருமானத்திற்கேற்ப அதிகபட்சமாக எவ்வளவு குடிக்கலாம் என்பதற்கு அடையாள அட்டை வழங்கிப் பதிவு செய்ய வேண்டும். அந்த அட்டையில் அவனது ஊதியம், வீட்டு உறுப்பினர்கள் எண்ணிக்கை, குடும்ப வருமானம், குடியால் நேரும் பற்றாக்குறையை ஈடுகட்டுவதற்கு குடும்பத்திற்குள்ள வாய்ப்பு, அரசு மருத்துவர்களின் காலமுறை நோய்க்கூறு ஆய்வு முதலிய தகவல்களை இணைக்க வேண்டும். 4. கள்ளச்சாராயச் சாவைத் தடுக்க காவல்துறையையே இழப்பீடு வழங்கச் செய்ய வேண்டும். 5. சினிமா அரங்குகளையும், மதுக் கடைகளையும், இன்னும் குறிப்பாக தொலைக்காட்சி ஒளிபரப்பையும் மாலை 6 மணிக்கு மேல்தான் செயல்பட அனுமதிக்க வேண்டும். இது வேலையற்றோரின் சோம்பேறிக் கனவுகளைக் கணிசமாகக் குறைக்கும் வழியாகும். 6. எவ்வழியிலும் வேலை கிடைக்காதவர்களுக்கு அரசே வேலை அளிக்கவேண்டும். சுற்றுச்சூழல் மாசு களைதல், ஏரி–குளங்களைத் தூர் வாருதல், பராமரித்தல், முதியோர்களுக்குக் கல்வியளித்தல், துப்புரவுப்பணி செய்தல் ஆகிய சமூக மேலாண்மைச் செயல்பாடுகளில் அவர்களை ஈடுபடுத்த வேண்டும். 7. கடும் உடல் உழைப்பாளிகளுக்குத் தேவைப்பட்டால் அரசே மலிவு விலையில் மது வழங்க வேண்டும். இக்கோரிக்கைகள் நடைமுறைப்படுத்தப் படாவிட்டால் அரசு மதுக்கடைகளை உடனடியாக மூடுவதோடு 4ஆம் கோரிக்கையைக் கடுமையாக நடைமுறைப்படுத்த வேண்டும்.

அரசை மண்டியிட வைக்க ஆயிரம் வழிகள் உண்டு. அவற்றுள் ஒன்று மக்கள் குடிப்பதைப் புறக்கணிப்பது.

கருணாநிதி மதுக்கடையைத் திறந்தது அரசு வருமானத்தைப் பெருக்குவதற்காகவே.

கூடவே கள்ளச்சாராயத்தை ஒழிப்பதற்கான புதிய உத்தியாகவும் அது விளம்பரப் படுத்தப்பட்டது. ஆயினும் ராஜாஜியிடம் பொங்கி வழிந்த சமூக அக்கறையையும் லோக சேமத்தின்பால் அவருக்கிருந்த தீராத பற்றையும் முன்வைத்து கருணாநிதி தூற்றப்பட்டார். இங்கு ராஜாஜியின் சமூக அக்கறையைப் பற்றி நாம் கொஞ்சம் தெரிந்துகொண்டாக வேண்டும். அவர் மதுவிலக்கை நடைமுறைப் படுத்தியபோது அதனால் ஏற்படும் வருமான இழப்பை ஈடுகட்ட என்ன செய்தார் என்பதை நாம் அறிந்திருக்க வேண்டும். அவர் செய்ததெல்லாம் 2400க்கு மேற்பட்ட அரசுப் பள்ளிகளை இழுத்து மூடியதுதான். இது எந்தவகை சமூக அக்கறை? எந்தச் சமூகத்துக்கான அக்கறை? அதே காலகட்டத்தில் இன்னொரு ஆணையும் கொண்டுவந்தார். அதாவது, பொற்கொல்லர்கள் தங்களை ஆச்சாரி என்று அழைத்துக் கொள்ளக்கூடாது, அவ்வாறு அழைத்து ஆச்சாரிப் பார்ப்பனர்களை (குறிப்பாக ராஜகோபாலாச்சாரியை) இழிபடுத்தக் கூடாது என்பதுதான் அந்த ஆணை. அவர்தான் ராஜாஜி. அதுதான் ராஜாஜியின் புகழ் மிக்க சமூக அக்கறை. இதற்கு எந்த வகையில் குறைந்துபோயிற்றாம் கருணாநிதியின் நிர்வாக அக்கறை?

## 5

உடைமைக் கலாச்சாரத்தில் ஊறிய இந்தியச்சமூகத்தின் பொதுப்புத்தியில் காலங்காலமாய்ப் படிந்துபோன அடிமைக் குறியீடாக ஒரு அளவீடு உண்டு. ஆட்சி செய்கிறவன் மாற்றுக்குறையாத சாதிமானாய் இருக்க வேண்டும்; பெண் எனில் குலமகளாய் இருக்க வேண்டும் என்பது அந்த அளவீடு. இங்கு குலமகள் என்பது சாதியோடு கற்பையும் சேர்த்துக் குறிக்கும் சொல். விடுதலையும் குடியரசும் (பெரியார் நடத்திய பத்திரிகைகளைக் குறிப்பதல்ல.) இந்த மனோபாவத்தில் எவ்வளவோ மாற்றங்களைக் கொண்டுவந்திருக்க வேண்டும். ஆனால் கொண்டு வரவில்லை. சாதி ஒழியவில்லை. குறைந்தபட்சம் அதன் கொலைவெறி மூர்க்கம் கூடக் கொஞ்சமும் தணியவில்லை. விடுதலைப் போராட்டமானது வெள்ளையனை வெளியேற்றத்தான் நடைபெற்றது. சாதியும் தீண்டாமையும் வெள்ளையன் கொண்டுவந்த சரக்கல்ல, அவனோடு வெளியேறுவதற்கு. இந்தப் புண்ணிய பூமியின் அரும்பெரும் செல்வங்கள் அவை! அவற்றைத் தக்கவைத்துக் கொள்ளவும் தழைத்திடச் செய்யவும்தானே விடுதலை வென்றெடுக்கப்பட்டது? இங்கே குடியாட்சியின் வெற்றி என்பது சாதிக்கு இளைத்தவர்கள் தங்கள் இழிமைகளை இழந்துவிடாமல் ஏதோ ஒருவகை இடைச் செருகலில் சமூகத்தால் உள்வாங்கப்பட்டுவிட்டனர் என்பதுதான். இந்த உள்வாங்கலானது சாதிக்கும் தீண்டாமைக்குமான எழுதப்படாத அங்கீகாரமாக இங்கே பேணப்பட்டு வருகிறது.

ஆகவே, சாதி இருக்கும் வரை இந்திய மனக்குகையில் ஆள்கிறவனைப் பற்றிய சாதி அளவீடு பாறையில் படர்ந்தோடும் உலோகக் கோடுபோல் வாழ்ந்து கொண்டுதான் இருக்கும். இந்தியச் சமூகத்தில் நடக்கும் அதியற்பமான விமர்சனங்கள் அல்லது வசவுகள் யாவும் சாதியைப் பற்றியதும் கற்பைப் பற்றியதும் தான். இந்தியக் கயமைக்கு இந்த இரண்டிலும் இழிந்தவர்களாக முத்திரைக் குத்தப்பட்டவர்களைக் கண்டால் பிடிக்காது.

திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றுவிக்கப்பட்ட நாளிலிருந்து தேர்தலைச் சந்திக்கும் நாள் வரை, பெரியாரின் கொள்கைகளுக்குப் புதுப் பாய்ச்சல் கொடுக்க வந்த இளைஞர் பட்டாளமாகவே செயல்பட்டது; கருதப்பட்டது. தேர்தல் அரசியலில் நுழைந்தபோது அணுகுமுறைகளில் சிறுசிறு மாற்றங்கள் ஏற்படினும் வெளி மனிதர்களின் மதிப்பீட்டில் பெரிய வேறுபாட்டைப் பெற்றுவிடவில்லை. மூன்றாவது தேர்தலிலேயே ஆளுங்கட்சியாகத் தூக்கி நிறுத்தப்பட்டபோது தி.மு.க.காரர்களுக்கே அது நம்ப முடியாத கனவாக, பொறுப்பற்றுப் பேசித்திரிந்தவர்களைப் பிடித்து வந்து அரசுக்கட்டிலில் அமரவைத்து உடனடியாகத் தண்டித்ததைப்போல ஒரு மலைப்பு ஏற்பட்டது. இதில் ஆட்சி என்றால் சூழ்ச்சி என்பதில் தொடக்கம் முதலே மிகத் தெளிவாகப் பொருட்படுத்திச் செயல்பட்டவர் கருணாநிதி மட்டுமே. அரசியல் களத்தில் கருணாநிதியின் முதல் கண்டுபிடிப்பே 'தமிழகம் எனது தகுதிக்கு மேலானதல்ல' என்பதாய் இருந்திருக்க வேண்டும். 'உனக்கு மிஞ்சி இந்த உலகத்தில் ஒன்றுமில்லை' என்னும் உபதேசமே ஒரு குழந்தையின் முதல் மூச்சாய் இருக்கக்கூடும் எனில் கருணாநிதிக்கு அதுவே வரமும் சாபமும் ஆகும். காலங்காலமாக ஆட்சியதிகாரத்தைச் சுவைத்துக்கொண்டிருந்த ஒரு பத்து சதவீத பெரியதனக்கார சாதியாள்களும் அவர்களது மனோபாவங்களை உள்வாங்கிக் கொண்டிருந்த ஒடும் பிள்ளைகளும் அண்ணாவையே முதல்வராக ஏற்றுக்கொள்ளும் மனத்தயாரிப்பில் அப்போது இல்லை. 'கூத்தாடிப் பசங்க ஆட்சிக்கு வந்துட்டாங்களே' என்பது அவர்களது ஆற்றாமையும் ஆச்சரியமுமான ஆதங்கமாய் இருந்தது. (இத்தனைக்கும் சினிமா– நாடகங்களின் நேரடிப் பங்களிப்பார்கள் அண்ணாவும் கலைஞரும் மட்டுமே. மற்ற பெரும்பாலான இளைஞர்கள் 'கௌரவமான' குடும்பத்திலிருந்து வந்து குழுமிய படித்த 'தான்தோன்றிகளே.' ஆனால் அடுத்தடுத்து முதலமைச்சரானவர்கள் அந்த இரண்டு கூத்தாடிகள்தாம் என்பதும் கவனம் கொள்ளத் தக்கது.) இந்த ஆற்றாமையின் அரசியல் வசனம்தான் பக்தவச்சலத்தின் 'தமிழ்நாட்டில் விஷக் கிருமிகள் பரவிவிட்டன' என்னும் புகழ்பெற்ற வாசகம். விஷக்கிருமி என்பதற்கு குலப் பெருமையற்ற பதடிகள் என்பது உள்ளுறை விளக்கமாயிருந்தது.

அண்ணாவுக்குப் பின் கருணாநிதி முதலமைச்சரான போது தமிழ்நாட்டில் யாரை வேண்டுமானாலும் தலைமைப் பொறுப்பில் ஏற்றுக்கொள்ளும் பக்குவம் வந்துவிட்டது. இது ஒருவகையில் சாதிச் சமூகத்தின் கையாலாகாத்தனம் சார்ந்த பக்குவமே. ஒரு சந்தர்ப் பத்தில் பிரணாப் முகர்ஜியின் கீழ் வேலை பார்த்தவர் மன்மோகன்சிங். இப்போது அவர் பிரதமர். அவரின் கீழ் பிரணாப் வேலை செய்யும்படியான நிலைமை. இதே தலைகீழ் மாற்றத்தைச் சட்டத்தால் அரண் செய்யப்படாத சாதி மதிப்பீட்டுக் குலைவில் போட்டுப்பாருங்கள். கருணாநிதி முதலமைச்சராக வரும் முன்பே, அதாவது தன் அயராத உழைப்பாலும் சூழ்ச்சித் திறத்தாலும் தனக்கான அசைக்க முடியாத இடத்தைக் கட்சிக்குள்ளும் பொது வாழ்விலும் நிறுவிக் கொண்ட காலம் முதலே குலத்தாழ்ச்சி பேசுவோரின் மன வெளியில் தான் மரியாதைக் குறைவாகக் கவனப்படுவதை அவர்அறிந்திருக்க வேண்டும். பொதுத் தளத்தில் வெளிப்படையற்றுப் பதுங்கும் உடைமைச் சாதிய மனவெளி அது. ஒவ்வாமையின் வெளிப்பாடாகச் சில உணர்வலை களையும் சுழிப்புகளையும் குதர்க்கமாகப் படரவிட்டுக் கொண்டிருக்கும் மன விகாரம். ஆனால் தலைமறை வாகத் தனியறையில், திமிர்சாதி ஒருங்கிணைப்பில், மிகவும் தணிவாகவும், அதே நேரத்தில் சகித்துக் கொள்வதைத் தவிர வேறு வழியற்றுப் போன கையறு நிலையிலும் வெளிப்பட்ட மனக்கோணலின் சொல்லு திர்ப்பைப் பல இடங்களிலும் சந்தர்ப்பங்களிலும் நான் செவி மடுத்ததுண்டு. கருணாநிதிக்கெதிரான இந்தச் சாதித் தூற்றலை தெருவோரத்தில் விழுந்து கிடந்த ஒரு குடிகாரனின் வாயிலிருந்துதான் நான் முதன்முதலில் கேட்க நேர்ந்தது. அவன் ஊரறியக் கூவியபோது, அவனது அறைகூவலை அவ்வழியே நடமாடிய தமிழ்ச் சமூகம் வெகு இயல்பாகவும் கொஞ்சம் விஷமச் சிரிப்போடும் கேட்டு நடந்தபோது, 'ஆகா! இது எவ்வளவு அப்பட்டமான கபடச் சமூகம்!' என்று திகைத்துப்போனேன். இது 1971இல் கருணாநிதி மதுக்கடைகளைத் திறந்தபோது புதுவெள்ளம்போல் பெருக்கெடுத்த குடிகாரர்களிடையே கருணாநிதியைத் தலைவராக ஏற்றுக்கொண்டவனே போட்ட கூச்சல். அதன் பிறகு அதுபோன்ற நகையாடல்களைக் கேட்க நேர்ந்தபோது, அரசியல் களத்தில் கருணாநிதி தன் போட்டியாளர்களை அல்லது எதிராளிகளைத் தலைதூக்க முடியாமல் அடித்து நொறுக்கி ஒன்றுமில்லாமல் ஆக்கித் தன்னைத் தற்காத்துக் கொள்வதையே வெற்றிப் படிகளாக்கிக் காட்டுகிறார் என்று எனக்குத் தோன்றுவதுண்டு.

ஒருமுறை புரசைவாக்கத்தில் இருந்த, ஒரு காலத்தில் 'கேரளத் தென்றல்' என்று சிலாகிக்கப்பட்ட கி.மனோகரன் வீட்டுக்குச் சில நண்பர்களுடன் சென்றிருந்தபோது, 'கலைஞர் தன்னை தலித் வீட்டு சம்பந்தி என்று சொல்லிப் பெருமிதப்பட்டுக் கொள்கிறாரே' என்று ஒருவர் வினவ, 'அவர் பிறவிக்கு அதைவிட வேறென்ன பெருமை கிடைத்துவிடப் போகிறது?' என்று மற்றவர்களின் ஏளனச் சிரிப்புக் கிடையே சொன்ன மனோகரன் தன் சந்தனத் தடியை உருட்டிக்கொண்டே அடுத்த 10 நிமிடங்களுக்கு கருணாநிதியை சாதி ரீதியாக இழிவு படுத்திப் பேசிக்கொண்டிருந்தார். நான் அப்போதோ அல்லது வெளியே வந்தோ என் சட்டைப் பையில் மடித்து வைத்திருந்த தாளில் எழுதிய வாசகம் இன்னும் என் நினைவில் இருக்கிறது: 'சாதிப்பெயர் சொல்லி ஏளனம் செய்கிறவன் தான் எந்தச்சாதி அப்பனுக்குப்

பிறந்தவன் என்று தன் அம்மாவிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது நல்லது'.

நான் ஒருமுறை பெரியாரியவாதி ஒருவரைப் பார்த்து, "திராவிட இயக்கமும் திராவிடக் கட்சியும் சாதிக்கு அப்பாற்பட்டவைதானே?" என்று கேட்டேன்.

"ஆனால், சாதி நமக்கு அப்பாற்பட்டதாய் இல்லை. அதனால்தான் இயக்கத்தை சாதிக்கப்பாற்பட்டதாக கற்பித்துக் கொண்டிருக்கிறோம்," என்றார். பெரியாரிய வாதிகள் இப்படியெல்லாம் தத்துவம் உதிர்ப்பார்கள் என்று நான் எதிர்பார்த்ததே இல்லை. இந்தச் சமூகத்தில் சாதி மட்டும்தான் உண்மை. பஞ்சுக்குள் மறைந்திருக்கும் அழுத்தமான பருத்திக் கொட்டை போன்றது அது. மற்றவை அனைத்தும் அதை ஒளித்து வைத்துக்கொண்டிருக்கும் மெல்லிய பஞ்சிழைகள் போன்றவைதான். அந்த இழைகளை இழுத்துப் பார்த்தால்தான் தெரியும் கொட்டையோடு அவை எவ்வளவு கெட்டியாய்ப் பிணைக்கப்பட்டிருக்கின்றன என்று.

ஜெயலலிதா முதல்வர் ஆனபோதும் இதேபோன்ற தொரு பேச்சலை மிதந்தது. 'சினிமாக்காரிதானே. அதுவும் சினிமாக்காரனின் ஆசை நாயகிதானே' என்றொரு இழிதகை பிம்பம் அவர்மேல் ஏற்றப்பட்டு நகையாடப்பட்டது. ஆனால் அந்த இழிவிலிருந்து மீள அவருக்குச் சாதி கை கொடுத்தது. அவரொரு பாப்பாத்தி என்னும் தீயில் அவர் மேல் படிந்த தூசுகள் யாவும் எரிந்துபோக, சமூக மனம் தனக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அவரை வணக்கத் திற்குரிய உயர்குலப் பெண்மணியாகவே தலையில் தூக்கிவைத்துக் கொண்டது. கருணாநிதிக்கு அப்படியொரு வாய்ப்போ தப்பித்தலுக்கான வழியோ சமூகம் வழங்கவில்லை. தனித்த பேச்சுகளில், அசந்த சந்தர்ப்பங்களில், மேல் மட்டத்திலிருந்து கீழ் மட்டம் வரை சாதிச்சீழ் ஒழுகும் எகத்தாளமான இந்தவகை துக்கிரிப் பேச்சு தொடர்ந்துகொண்டேதான் இருந்தது. இப்படி வெட்டவெளிச்சமான சாதியைப் பற்றி மீண்டும் மீண்டும் பேச முடியாமல் போனபோது அதையே அந்த மனிதனின் பின்புலத் திரைச்சீலையாக்கிக் கொண்டு அதன் வண்ணத்திலேயே அவனை இடைவிடாமல் இம்சிப்பது போன்றதே கருணாநிதி யைப் பற்றி இன்றுவரை தொடரும் கண்மூடித் தனமான எதிர்விமர்சனங்கள் என்றால் மிகை யில்லை. வேண்டாத வீட்டுக்காரன் கை பட்டால் எரிச்சல் கால் பட்டால் குடைச்சல் என்பது போலத்தான் இதுவும்.

சாதிகளிலேயே கீழ்ச் சாதியாகப் 'பறைச்சாதியை' எட்ட நிறுத்தி, இந்து சமூகம் இழிவைப் பொழிவ துண்டு. ஆனால் மற்றவர்களோடு சேர்ந்து பறையர் களாலும் இழிவாகப் பேசப்படும் ஒரு சாதி உண்டு. எல்லாச் சாதிகளுக்கும் பொதுவான வசைச்சொல் ஒன்றுண்டு. அதுதான் 'தேவ்டியா முண்டை'. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எழுதிய கால்டுவெல் பறையர்கள் பற்றிக் கூறும்போது, 'அப்படியெல்லாம் ஆதாரமில்லால் பறையர் சாதியை இழிவாகச் சுட்டிவிட முடியாது. எல்லாச் சாதிகளையும் போல பறைச்சாதியும் தனக்கென்று ஒரு வரையறையும் பெருமிதமும் தனித்துவமும் தொல்புகழும் கொண்டதே. அது ஒன்றும் விலக்கப்பட்டவர்களாலோ உதிரிகளாலோ சாதிவிலக்கம் பெற்றவர்களாலோ குற்றவாளிகளாலோ கலப்படம் செய்யப்பட்டு உருவான சாதியல்ல. தென்னிந்தியாவில் கலப்படச் சாதி என்று ஒன்றைச் சுட்டலாம் எனில் அது தேவதாசி சாதியை மட்டுமே. மனு சொல்வதைப் போன்ற சாதிக் கலப்படங்கள் தென்னிந்தியாவில் வேறு எந்த சாதியிலும் நிகழவில்லை' என்று அடித்துச் சொல்கின்றார். ஆகவே சமூகத்தில் சாதிப் பெருமிதங்களற்ற சாதியாக எல்லோராலும் சுட்டப்பட தேவதாசி சாதியே இருந்தது.

தேவதாசிகள் 'சாதி காப்பாற்றாமை' என்னும் ஒரு அம்சத்தை தவிர வேறு எந்த விதத்திலும் எந்த நிலையிலும் இரண்டாம் பட்சமானவர்கள் அல்ல. மனித வாழ்வின் உயர்ந்தபட்ச நாகரிகத்தைக் கலையம்சத்தோடு சேமித்து வாழ்ந்தவர்கள் அவர்கள். மாவீரன் என்று அறியப்பட்டவன்கூட அவர்கள் முன்னே ஒருகணமேனும் தன்னைக் காட்டுமிராண்டியாக அறியத்தக்கவனாவான். அவர்கள் தேவதாசிகள் – அதாவது தேவர்களின் தேவைகளை நிறைவு செய்கிறவர்கள். ஆகவே தேவர்கள் மட்டுமே அவர்களுக்கு நிகரானவர்கள். தேவர்கள் என்று எந்தச் சிறப்புப் பிறவிகளும் உலகத்தில் இல்லாமையால் அவர்களின் பூலோகப் பிரதிநிதிகளாகப் – பூசுரர்களாகத் தங்களை முன்னிருத்திக்கொண்ட பிராமணர்களே அவர்களுக்குத் தந்தையும் தலைவனுமாய் இருக்கத் தக்கவர்கள். தேவதாசிகளுடைய ஆண் பிள்ளைகளின் இருப்பையும் அவர்களது பார்ப்பனச் சகோதரத்துவத்தையும் பற்றி ஒரு பேச்சும் இல்லை. பொது வெளியில் தேவதாசிகள் சூத்திரர்களைத் தொடுவதைக்கூட அருவருப்பாக்கித் தங்களை மேன்மக்களாகக் காட்டிக் கொண்டவர்கள். அவர்களது வாழ்வே கற்பிதமும் கற்பனையும் மிக்கதொரு அழகிய புனைவு. இந்தக் கற்பிதமும் கற்பனையும் வழித்தெறியப்படும் போதுதான் ஒருவன் அவர்களை 'தேவ்டியா' என்று அசூயைப்படுவது நடக்கிறது.

இப்போது இந்த வாழ்வும் வழமையும் சமூக அங்கீகாரத்தில் முற்றாகத் தீர்ந்து தூர்ந்துவிட்டதென்றே சொல்லலாம். இன்றைய காலகட்டத்தில் அவர்களும் வரையறுக்கப்பட்ட பிற சாதிகளைப் போல் இசைவேளாளர் என்னும் பெயரைத் தாங்கித் தங்களை இல்லறப்படுத்திக்கொண்டு புதிய தலைமுறையை வளர்தெடுத்தாயிற்று. ஆயினும் தன் கோணல் பார்வையை மட்டும் இந்தச் சமூகம் முற்றாக விலக்கிக்கொள்ள மறுக்கிறது. நாடார் சாதி, வன்னிய சாதி போன்றே இசைவேளாளர் சாதியும் பட்டியல் சாதியாக வேத சாஸ்திரங்களின்படியோ பிராமண வழிகாட்டலின்படியோ ஒருபோதும் சேர்க்கப் பட்டதில்லை என்பதால், கால மாற்றத்தில் அவர்கள்மேல் படிந்த இழிவெச்ச விழுமியங்கள் யாவும் ஒருநாள் காணாமல் போய்விடக் கூடும். அவர்கள் போற்றி வளர்த்த இசையும் பரதமும் இன்று புதுப் பெயர்களில் பார்ப்பனச் சொத்தாகத் தத்தெடுக்கப்பட்டுவிட்டதைப் போல் அவர்களில் பலரும்கூட புதிய பார்ப்பனர்களாய் மாறிக்கொள்ளும் வாய்ப்பும் வசதியும் பற்றிக்கொள்ளப்படலாம்.

இந்தியாவில் சாதியை மாற்றிக்கொள்ள முடியாது என்பதுதான் பொதுவான விதி – நம்பிக்கை – சாஸ்திர உண்மை. ஆனால் பார்ப்பனர்களாய் மாற முடியும் என்பதற்கு இராமானுஜர் முன்னுதாரணங்களைக் காட்டிச் சென்றிருக்கிறார். இது சாதி மாற்றம் என்பதல்லாமல் இன மாற்றம் என்னும் வகையைச் சார்ந்தது. 'திருக்குலத்தார்' பலரை பூணூல் அணிவித்து இராமானுஜர் பிராமணர்களாக மாற்றியது ஒன்றும் கதையல்ல. அந்தப் புதிய பிராமணர்கள் வெறும் சடங்கால் மட்டுமன்றி மரபணுக்களாலும் அசல் பிராமணர்களாக வரையறுக்கப்பட்டுவிட்டார்கள் என்பதே உண்மை. அண்மையில் காலமான எழுத்தாளர் சுஜாதாகூட அப்படி அசலுக்கு மாறிய நவ பிராமணராகத்தான் இருக்க வேண்டும். எவன் தன் பிராமண மேன்மையை திரும்பத் திரும்ப முன்மொழிந்து பிறரை இழிவுபடுத்தத் துடிக்கிறானோ அவன் இப்படியாகப் பிறவியெடுத்துப் புதுப்பார்ப்பனக் கொடி வழியில் வந்தவனாகத்தான் இருக்க வேண்டும். புதிய மதம் மாறிகள் பழைய மதக்காரர்களைவிட அதிகத் தீவிரமும் மதச் சுத்தமும் பார்ப்பதில்லையா? அது போன்றதுதான் இதுவும்.

மரபணு ரீதியான மாற்றம் சாத்தியமா என்றால் அதில் ஒன்றும் சந்தேகம் வேண்டியதில்லை. உலகம் பூராவும் இனக் கலப்புகள் இப்படியாகத்தான் நேர்ந்து வருகின்றன. அதற்கொரு கால அளவையும் பிறவிக் கெடுவையும்கூட நிர்ணயிக்க முடியும். இந்திய அனுசரிப்பின்படி அது ஏழு தொடர் பிறப்புகளில் நிகழ்ந்தேறக் கூடியதாகக் கருதப்படுகிறது. இதைத்தான் ஏழு பிறவிகள் – ஏழு ஜென்மங்கள் என்று சுட்டுகிறார்கள். இது ஒருவனே ஏழுமுறை பிறப்பதாகப் பிழைபட அர்த்தம் கொள்ளப்படுகிறது. பார்ப்பன ஒட்டைஉடைசல் சாஸ்திரப்படியேகூட ஒரு மனிதன் ஏழு முறை மனிதனாகவே பிறப்பதென்பது அவன் மாற்றமோ வளர்ச்சியோ பெறாததைத்தான் குறிக்குமே தவிர இனமாற்றத்துக்கான வழிமுறை அதுவல்ல. இன்றைக்குத் தூய பார்ப்பான், தூய சூத்திரன் என்று ஒருவனும் இல்லை. எல்லாரும் கலப்படப் பிறவிகள்தாம். மனோபாவங்கள்தாம் பழைய கட்டுக் கோப்பிலேயே காப்பாற்றப்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதனால்தான் இன்று பார்ப்பானாய் அறியப்படுகிறவனைவிடப் பார்ப்பன எதிர்ப்பாளன் பார்ப்பன மனோபாவத்தை வரையறை செய்ய வேண்டியவனாகிறான்.

இந்தக் கலப்படத்தில் பார்ப்பன மரபணுக்கள் அதிகமுள்ளவனைப் பார்ப்பனனாகவும் சூத்திர மரபணுக்கள் அதிகமுள்ளவனைச் சூத்திரனாகவும் பெயரிட்டு நாமே கற்பித்துக் கொள்கிறோம். இந்த மரபணு மிகை என்பது 50 விழுக்காட்டுக்கு மேற்பட்ட அளவைக் குறிப்பது. ஒரு பழைய சான்றாக, இராமானுஜரால் பார்ப்பனராக்கப்பட்ட திருக்குலத்தார்– அதாவது பறையர் ஒரு பார்ப்பனப் பெண்ணை மணந்துகொண்டு ஒரு குழந்தையைப்

பெறுகிறார் எனில் அது ஒரு பிறவி – அல்லது ஜன்மம் என்று கொள்க. அந்தக் குழந்தை வளர்ந்து பார்ப்பன சம்பந்தம் கொண்டு ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தால் அது இரண்டாவது பிறவியாகிறது. இப்படியே ஏழு முறை தொடர்ந்து பார்ப்பன சம்பந்தம் மூலமாகவே ஏழாவது பிறவியாகப் பிறக்கும் குழந்தை மரபணு ரீதியாகவே அறிவியல் அங்கீகாரம் பெற்ற பார்ப்பனக் குழந்தையாகிவிடுகிறது. இந்த இன மாற்றம் முழுமையடைவதற்கு சென்ற நூற்றாண்டு வரையான கணக்கில் நூற்றைம்பது முதல் நூற்றெண்பது ஆண்டுகளே போதுமானது. இனத்தூய்மையை இன்னும் துல்லியப்படுத்திக் கொள்ள ஈரேழு ஜன்மங்கள் எடுப்பதெனில் காலத்தை அப்படியே இரட்டிப்பாக்கிக் கொள்ள வேண்டியதுதான். இது ஒரு வகையில் அசுரர்கள் தங்களைச் சுரர்களாக்கிக் கொள்ள நடத்தும் இல்லறத் தவம் என்று சொல்லலாம். புற நிலைத் தரவுகளால் எனக்குச் சரி என்று படும் இக்கருத்துக்காக இதன் மூலப்படியின்மேல் சொந்தம் கொண்டாடுபவர்களுக்கு எனது நன்றி. இவ்விவகாரத்தில் நவீன உதாரணம் ஒன்று சொல்வதெனில் சன் குழுமத்தைச் சேர்ந்த மாறன் சகோதரர்கள் பார்ப்பன இனமாற்றச் செயல்பாட்டில் ஏற்கனவே இரண்டு பிறவிகள் முடித்துவிட்டார்கள். (பின்புலத்தில் கருணாநிதிக்கும் அவர்களுக்குமான உறவென்பது கண்ணுக்குத் தெரியாமலே வெள்ளரிப்பழம் தன் காம்பிலிருந்து கழன்று கொள்வதைப் போன்றதுதான்.) முதல் பிறவியிலேயே பார்ப்பனராகவே உணர்ந்து, நடை பழகி, பார்ப்பன ஆதரவில் சுகம் வளர்த்து, பார்ப்பனச் சாய்மானத்திலேயே பலம் பெற்றுத் திகழ்வதென்பது ஒருவரது பேராசைக்கும் சரணாகதிக்கும் கிடைக்கும் வெற்றி. அதற்கு மேலும் அவரவர் கொடுப்பினையையும் விற்பனையையும் பொறுத்த விஷயம். நாம் சொல்வது அறிவியல் ஏற்புக்குரிய இனமாற்றச் செயல்பாட்டைத்தான். அதற்கு அவர்கள் இன்னும் ஐந்து பிறவிகள் காத்திருக்க வேண்டும்.

இங்குதான் கருணாநிதி தன் பெருமிதம் மிக்க சுயமரியாதையோடும் சுய ஆளுமையோடும் தனித்துயர்ந்து தலைநிமிர்த்துகிறார். முழுக்கமுழுக்கத் தன்னை ஒரு பிறவிப் பெரியாரியவாதியாக, பெரியாரியத்தின் நடைமுறைச் சின்னமாக, நிலமதிர உதைத்தெழுந்து தன்னை நிலை நிறுத்திக்கொள்கிறார். இந்தியச் சாதிச் சமூகத்தின் மேல்நிலையாக்கக் கருத்தாக்கத்தைப் பொருட்படுத்தத் தகாததொரு தெருப்புழுதியாகப் புறந்தள்ளித் தன் இல்லம் முழுதையும் சாதி மறுப்புத் திருமணங்களால் நிறைத்து, சாதியற்ற சமூகத்தின் முன்னுதாரணக் கட்டமைப்பாளராகத் தன்னை முன்னிருத்துகிறார்!

இந்த மகத்தான பங்களிப்பின் விளைவைப் 'பலபட்டறைக் குடும்பம்' என்று கள்ளக் குரலில் பகடி செய்யும் தமிழ்த்தேசியர்கள் இருக்கவே செய்கிறார்கள். நீங்கள் முகஞ்சுளித்து, "இதை உங்கள் பலபட்டறைப் பண்பாடாகக் கொள்ளலாமா?" என்றால், வெடுக்கென முகம் திருப்பிக்கொண்டு உங்களோடு பிறவிப்பகை பாராட்டுவார்கள். இன்னும் சிலர், "சும்மா தமாசுக்குச் சொன்னால் என்னையே பலபட்டறையாக்கிட்டீங்களே. தலைவன் எவ்வழி, தொண்டனும் அவ்வழி. தமிழ் வாழ்க!" என்று தங்கள் பொய்யொழுக்கத்தை மெய்போல் பறை சாற்றுவார்கள். ஒரு வெள்ளாளன், 'சாதி பார்ப்பதில்லை' என்று சொன்னால் புல்லரித்துப் போகிறவன், அதையே ஒரு பறையன் சொல்லும் போது காரித்துப்புகிறான் என்றால் அவனை நீங்கள் எப்படி அடையாளப்படுத்துவீர்கள்? கழிசடைத் தமிழ்ச் சாதியானாகவா, அல்லது கலாச்சார மீட்பனாகவா?

பார்ப்பன மதம், வேதம், கடவுள், சாதி, மொழி என அனைத்தையும் தோலுரித்துக் காட்டுவதில் பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைக்கு அரண் செய்தவர் கருணாநிதி என்பதுதான் பார்ப்பான் ஒருபோதும் அவரை மன்னிக்க மாட்டாமைக்குக் காரணம். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பது தன் கட்சியின் கொள்கையாயினும், தன் கொள்கை அப்படியொருத்தன் இல்லவே இல்லை என்பதை ஆரவாரத்தோடு சொல்லக்கூடிய ஒருவர் தமிழ்நாட்டு முதல்வராய் வர முடியும் எனில் அவர்தான் கருணாநிதி என்பதுதான் அவரடைந்த உச்சம்.

இந்தியாவின் ஆட்சியதிகார வரலாற்றில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆள்கிறவன் இந்தியனாயினும் அந்நியனாயினும், வெற்றிகரமான அரசாள்கை என்பது பார்ப்பனர்களை அரவணைத்தும் அனுசரித்தும் போவதுதான் என்பது எழுதப்படாத நடைமுறைச் சட்டம். தமிழ்நாட்டிலும் களப்பிரர் காலத்திற்கு முன்பிருந்தே அதுதான் நிலவரம். இதுநாள் வரையிலும் குருவி சேர்ப்பதைப் போலத் தான் சேமித்து நிறைத்த செல்வமும் செல்வாக்கும் சிறிதும் சேதாரமில்லாமல் காக்கப்பட வேண்டும் என்பதற்காக அவ்வப்போது மேலெழும் பார்ப்பன நிர்ப்பந்தங்களை சில நேரங்களில் கொஞ்சம் கூடுதலான விட்டுக்கொடுப்பு களோடுகூட கருணாநிதி எதிர்கொள்ளத்தான் வேண்டியுள்ளது. ஆட்சியதிகாரம் தன் கைவசமுள்ள காலங்களில்கூட அவர் நினைத்ததையெல்லாம் சாதித்துவிட முடிவதில்லை என்பது இதில் அடக்கம். உதாரணமாக, விவேகானந்தர் இல்லத்தைச் செம்மொழி அலுவலகமாக்க அவரால் முடியவில்லையே. அப்படியொரு ஆசையை ஒரு சின்னத் துணுக்காகக் கொளுத்திப் போட்டதுதான் தாமதம். பார்ப்பனக் கும்பலும் பார்ப்பன அடிமைக் கும்பலும் அவர் ஆசைக்கெதிராகப் பிலுபிலுவென்று பிறாண்டத் தொடங்கியதும் வெகுநல்ல பிள்ளையாய், 'அரசுக்கு அப்படியொரு யோசனையே இல்லை. இது தேவையற்ற பேச்சு' என்று சொல்லி ஏறக்கட்டிவிட்டு அதே சாலையில் வேறோர் இடத்தில் அதற்கான அலுவலகம் தொடங்கப்பட்டுவிட்டதே. 'இந்த அரசு ராஜீவ் கொலை வழக்குக் குற்றவாளி நளினியை விடுதலை செய்ய உத்தேசித்திருக்கிறது. அது நீதியை அவமதிக்கும் செயல். ஆகவே எதிர்த்து வழக்காட என்னையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்' என்று சுப்பிரமணியன் சாமி தாக்கல் செய்த மனுவை, 'அரசு, நளினியின் விடுதலையை எதிர்த்து மனு தாக்கல் செய்ய இருக்கிறது. இதில் சுப்பிரமணியன் சாமியின் குறுக்கீடு தேவையற்றது' என்று சொல்லித்தானே தள்ளுபடி செய்ய வைக்க முடிந்தது. தன்னால் தூற்றப்பட்ட தாளிலும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் தன் வயிற்றுப் பாட்டுக்குப் பத்தி எழுதிப் பிழைக்கும் ஞாநியின் சீண்டலைக்கூட இவரால் சமாளிக்க முடியவில்லையே. தன் இனமான எழுத்துலகப் பிரம்மாக்களையெல்லாம் ஒன்று திரட்டியல்லவா புலம்பி அழவேண்டி இருக்கிறது. அப்படி அழுவதிலும்கூட கருணாநிதியின் கலைத் திறன் ஒன்று உண்டு. தன்னை அசைக்க வரும் அசட்டுப் பார்ப்பானுக்குக்கூட அதீத மரியாதை கொடுப்பதைப் போலப் பாசாங்கு காட்டி அவனுக்குப் பின்னே உள்ள பட்டாளத்தை வலுவிலக்கச் செய்யும் வல்லமைதான் அது.

குமுதம் ரிப்போர்ட்டர் (17.7.2008) கருணாநிதியின் ஒரு கதைவசனத்தை வெளியிட்டுள்ளது. காங்கிரஸ் தலைவர் பதவி ஏற்றவுடன் ஆலோசனை வழங்கும்படி கேட்டுச் சென்ற தங்கபாலுவிடம் "ஏற்கனவே கொஞ்சம் கொஞ்சமாக தேசியமாகி வருகிறேன். முழுவதும் மாறிவிட வேண்டுமா?" என்று சிரித்துக் கொண்டே குறிப்பிட்டாராம் கலைஞர். ஆக, தேசிய மாவதைக் கருணாநிதி அறிந்தே, அளந்தே செய் கிறார். அஃதொன்றும் அவரது ஆனந்தலஹரியில் நேரும் அற்புத நிகழ்வல்ல. அதற்கான பலாபலனை அவர் கணிக்காமல் மெனக்கிடுகிறவரல்லர். தமிழனாய்த் தன்னை அறுதியிட்டுக்கொண்டும் தேசியமாகலாம். அதைத் தள்ளிவைத்துவிட்டும் ஆகலாம். இதில் எது தப்பிக்கும் வழியோ அது கருணாநிதியின் தேர்வாயிருக்கும். 'பதவி என் தோளில் கிடக்கும் துண்டுக்குச் சமம்' என்னும் வசனம் இன்றைக்கும் பொருளுடைய அறைகூவல் தான். தூக்கிக் கடாசி விடலாம்தான். ஆனால் கூடவே அவருடைய இயலாமைக்கெதிராக அவரது சக தமிழ்ச் சகோதரர்கள் அதிகபட்ச சுதந்திரத்தோடு எழுப்பும் கண்டனக் கூக்குரல்களுமல்லவா தங்கள் குரல்வளையை இழந்துவிடும்? நல்லவேளை, 'இம் மென்றால் சிறைவாசம் ஏனென்றால் வனவாசம்' எனும் அதிகபட்ச அராஜகம் இவர் ஆட்சியில் அரங்கேற வில்லை என்பதற்காக ஆறுதல் கொள்ளலாம். அவரது இயலாமையினூடாக நம்மை வேறெப்படித் தேற்றிக்கொள்வது? தமிழ் வாழ்வின் தகுநிலைக்கு அப்பாற்பட்ட அல்லது மேம்பட்ட அவரது தேசியத்தால் ஈழத் தமிழ் அகதிகள் குற்றவாளிப் பிச்சைக்காரர்கள் போல் சீரழிவதும், ஈழ விடுதலைப் போர் கண்மூடித்தனமான புறக்கணிப்பால் அந்நியப் படுவதும், விடுதலைப் புலிகளின் உளவாளிகள் என்றோ கடத்தல்காரர்கள் என்றோ குறிப்பிட்டுக் குற்றம் சாட்டப்பட முடியாத ஆத்திரத்தின் வெளிப் பாடாகவே தமிழக மீனவர்கள் கொத்துக் கொத்தாய் சுட்டுக் கொல்லப்படுவதும், அதை இந்தியக் கடலோரக் காவல்படையும் தமிழகக் காவல்துறையும் குரூரமாக ரசித்துக்கொண்டிருப்பதும் பல்முனைச் செயல்பாடாக நடந்தேறிக்கொண்டுதான் இருக்கின்றன.

பார்ப்பனர்களைச் சரிகட்டவும் சாந்தி பண்ணவும்

என்ன கெஜ குட்டிக்கரணம் போட்டாலும் கருணாநிதியை அவர்கள் ஒருபோதும் நம்பப்போவதில்லை, நட்பு சக்தியாக ஏற்கப்போவதில்லை. பார்ப்பனர்களுக்குக் கருணாநிதி எப்போதும் கடும் பகையாளிதான். மன்னிப்பே கிடையாத பகையாளி. அவர்கள் ஸ்டாலினோடுகூட ஒரு நாள் உறவாடிக்கொள்வார்கள். ஆனால் கருணாநிதியோடு மட்டும் ஒருபோதும் மாட்டார்கள். இந்த ஒரு அம்சம்தான் நமக்கும் கருணாநிதிக்கும் நடுவில் உள்ள வெட்டிப் பிரிக்க முடியாத உறவு. விதுரன் அரச நீதிகளை அடுக்கடுக்காய் அள்ளி வீசலாம். அது கொஞ்சம் கொஞ்சமாய் தேசியமாகிறவனின் திட்டமிட்ட வியூக வெளிப்பாடு. அதனாலெல்லாம் விதுரன் வேலைக்காரியின் மகன் என்பது மறக்கப்பட்டுவிடாது. விதுரனின் புத்திசாலித்தனத்தை விட்டுத்தள்ளுங்கள். எஞ்சி நிற்பது அவன் இன அடையாளம் மட்டுமே. பாண்டுவுக்கும் திருதிராஷ்டிரனுக்கும் எவன் தந்தையோ அவன்தான் விதுரனின் தந்தையும். இருக்கட்டுமே. பெற்றவள் பணிப்பெண்தானே. இதற்குப் பெயர்தான் சாதி நீதி. நமக்கும் கருணாநிதிக்கும் அதுவே உடன்பிறப்பு நீதி. ஆகவேதான் நம்மால் அவரை விட்டொழிக்க முடிவதில்லை. அது நீதியும் இல்லை.

இதில் ஒரு சின்னஞ்சிறு வேறுபாடு உண்டு. அன்று விதுரன் வேலைக்காரியின் மகனாக வெளியேற்றப்பட்டான். அரசவை அவனது அறிவைப் புறக்கணித்து மௌனமாய் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தது. இன்று விதுரனை அரியணை ஏந்திக் கொண்டிருக்கிறது. தமிழகச் சாதிச் சமூகம் 'அப்பனைப் புணரக் கனாக் கண்டவள் ஆரிடம் சொல்வாள்?' என்பதாக உள்ளுக்குள் புழுங்கிக் குமைந்து தனக்குத்தானே அந்நியப்பட்டு நிற்கிறது. தமிழ்க் குடிபடையின் அடிப்படை அலகு இன்னும் சாதியாகத்தானே எஞ்சி நிற்கிறது?

நமக்குக் கருணாநிதியின் மேல் முடிவில்லாத விமர்சனங்கள் உண்டு. ஆயினும் அவரை நம்மோடு அடையாளம் காணும் கடப்பாடும் உண்டு.

மொழிவழி மாநிலங்களாய்ப் பிளவுபடாத சென்னை மாநிலத்தின் முதன்மை அமைச்சராக 1947 முதல் 49 வரை இருந்தவர் ஓ.பி. இராமசாமி ரெட்டியார். நம்பமுடியாத அளவு நேர்மையாளர்; பக்திமானும் கூட. கம்யூனிஸ்டுகளை ஒழித்துக்கட்டுவதில் மூர்க்கமாகச் செயல்பட்டவர். திராவிட இயக்கத்தினரை சிறையடைப்பு, தடியடி, தண்டம் என்னும் பல்வகை தொல்லைகளைக் கொடுத்து அலைக்கழித்தவர். யாவும் நேர்மையின் பேராலும் தேசியத்தின் பெருமிதத்தாலும் நிகழ்த்தப்பட்ட கொடூரங்கள். ஆனால் கடைசியில் பார்ப்பனர்கள் கொடுத்த தொல்லையாலும், கூட இருந்தே குழிபறித்தவர்களாலும் மனம் வெறுத்து அவர் வெளியேறிய போது, அவரால் பெரும் கொடுமை களை அனுபவித்த திராவிட இயக்கத்தினர்தான் அவருக்கு கண்ணீர் மல்க ஆறுதல் கூறினர். காரணம் அவர் நம் இனத்தவர் என்பதை மறக்காமல் செயல்பட்டதால்தான். நீறு பூசிய பெரியார் இராமசாமியாய் நேரிய வழியில் நம் இன நலன்களை நிலைநிறுத்தியவர் என்பதால்தான். எனது நுண்ணோக்கு விமர்சன அரசியலுக்கு முன்னோடியாய்த் திகழ்வது அன்றைய காலகட்ட திராவிட இயக்கத்தினரின் இன நலப் பார்வைதான் என்றால் மிகையில்லை.



## 6

தமிழ்நாட்டு அரசியலில் கடந்த ஐந்தாண்டு காலத்தையும் தொடர்ச்சியையும் அவ்வளவு எளிதாகக் கடந்து சென்றுவிட முடியாது. இக்காலகட்டத்தில்தான் ஜெயலலிதா தன் வன்மத்தின் எல்லையைத் தொட்டுக் காட்டினார். கேட்க ஒரு நாதியும் இல்லை. காஞ்சி சங்சர மடத்தையும் ஊதித் தள்ளினார் என்பது வன்மத்தினூடான நியாயத்தின் இன்னொரு பக்கம். இந்தக் காலத்தில்தான் கருணாநிதி தன் தொகுக்கப்பட்ட வரலாற்றிலிருந்து குருதியொழுகும் பக்கங்களைப் பிரித்தெடுத்து தேசிய நாரால் துளை போட்டுக் கட்டிக் கடலில் தூக்கிக் கடாசினார். இந்தக் காலத்தில்தான் தமிழகம் தன் புனிதப்படுத்தப்பட்ட பண்பாட்டு மீட்டுருவாக்கத்தின் பெயரால் உடைமைச் சமூகத்தின் ஆதிக்கச் சாதி மனோபாவதைத்தை மெருகூட்டிப் பளபளப்பாக்கிக் கொண்டது. இந்த கால கட்டத்தில்தான்... சொல்லிக்கொண்டே போகலாம். என்ன பயன்? அதிர்ச்சியும் ஆச்சரியமும் அருவருப்பும் மிக்க காலகட்டம் இது. வைகோ என்னும் வஞ்சகம் பயிலாத இனிய தமிழீழ நண்பன் 517 நாட்கள் சிறைவாசம் அனுபவித்தான். தமிழகம் இரண்டும் கெட்டானாய் நடமாடிக்கொண்டு வாழ்ந்தது. அதிரவும் இல்லை. அசையவும் இல்லை. அக்கறையோடு நினைக்கவும் இல்லை. நெக்குருகவும் இல்லை. அதே நேரத்தில் முழுதாக மறக்கவும் இல்லை, மட்கடிக்கபபடவும் இல்லை என்பதும் உண்மை. தமிழகத்தை இப்படி மரமாக்கியவர்கள் யார் என்று யாரும் கேள்வி எழுப்ப முற்படவில்லை. பழ. நெடுமாறன் என்னும் மதுரை நகர மாவீரன் பைபாஸ் இதய அறுவை சிகிச்சை செய்துகொண்டு இன்னும் முற்றாகக் குணம் பெறாத நிலையில் சிறையில் அடைக்கப்பட்டது மட்டுமின்றி வழக்குகள் என்று சொல்லி தமிழகத்தின் குறு நகரங்களுக்கெல்லாம் காவல்துறை வாகனத்தில் பயணம் என்னும் பெயரில் பந்தாடப்பட்டார். தமிழகம் கண்டுகொள்ளவில்லை. ஏதோ தமிழ் உணர்வாளர்கள் என்னும் வட்டத்துள் வாழ்கின்ற முதிய இளைஞர்கள் அவ்வப்போது வருத்தம் மேற்கொண்டார்கள் என்னும் பெருமூச்சைத் தவிர வேறொன்றும் செவிகேட்கவில்லை.

இப்போது வைகோ எங்கே நிற்கிறார்? ஜெயலலிதாவுக்காகக் காத்து நிற்கிறார். ஜெயலலிதாவின் தேவைகளுக்காகச் சேவையாற்றுகிறார். இந்த மாற்றம் கொள்கைக் காகவா, அல்லது கோட்பாட்டு ரீதியாகவா? ஒரு புடலங்காயும் இல்லை. ஒருவகையில் தமிழகம் பிழைத்துக்கிடப்பதே அதன் மரத்தனத்தால்தானோ என்னவோ. மேலும் எப்போது கூட்டணி அரசுகள் தலையெடுத்தனவோ அப்போதே கொள்கை கோட்பாடு எனும் பேச்செல்லாம் குப்பைக்கூளமாக அடிபட்டுவிட்டன. கூட்டணி அரசுகள் உலகமயத்தின் அரசியல் உற்சவங்கள். பணப் புழக்கத்தை சாக்கடையாக்கும் கழிசடைக் கூவங்கள்.

பழ. நெடுமாறன் எங்கே நிற்கிறார்? ஒரு இயக்கவாதியாய் இருந்தும் கட்சி அரசியல்வாதியை விடவும் கருணாநிதியைக் கடுமையாக விமர்சனம் செய்வதில் வைரம் பாய்ந்திருக்கிறார். அவரது விமர்சனங்கள் உண்மைகளைப் பேசுவதோடுகூட வெறுப்பின் விளிம்பையும் தொட்டுக் கொட்டுகின்றன. நெடுமாறன் நேர்மையின் சட்டகத்துக்குள் இந்தக் காலத்திலும் அடங்குகிறவர்தான். அடங்கினால் மட்டும் போதாது. அடங்கி இருப்பதைக் காட்சிப்படுத்துவதும் அதை விட முக்கியமாகிறது. நேர்மையின் இன்னொரு முகம் நடுநிலைமை.

இன்றைய தினமணி அலுவலகத்தின் உயர்மட்டத்தில் பெரியாரிலிருந்து அண்ணா, கருணாநிதி, ராமதாஸ், வைகோ, பழ.நெடுமாறன் ஈராக எல்லாச் சூத்திரர்களும் 'அவன்கள், இவன்கள்' ஆகத்தான் நாற்ற வாய்களின் எச்சிலில் குளிக்கிறார்கள். மீசைக்கார வைத்தியநாதன் தினமணி ஆசிரியரான பிறகு, அது ப.ஜ.க. பத்திரிகை என்பதைச் சந்தேகத்திற்கிடமின்றி வெளிப்படுத்திக்கொண்ட பிறகு அரங்கேறி ஆடும் கூத்து இது.

அவர்கள்தாம் நெடுமறனுக்குச் சிவப்புக் கம்பளம் விரிக்கிறார்கள். உற்றுப் பார்த்தால் தெரிகிறது அதன்மேல் விலங்கு பிடிக்கும் வலையும் விரிக்கப்பட்டிருப்பது. அதன்மேல்தான் இரத்தம் துளிர்க்கும் தன் வேல்கம்போடு நெடுமாறன் நடை பழக்கப்படுகிறார். நேர்மையானது 'வெளி'யில் சிறகுகளை விரிக்கும் பறவையாய் அர்த்தப்படுவதில்லை. அது கால்களை ஊன்றிக் கடக்கும் மனிதனாக்கும்.

நெடுமாறனிடம் வைக்க நமக்கு இன்னொரு கேள்வியும் உண்டு. நம் தர்க்க சட்டகத்திற்குள் அவருக்கான அடையாளத்தை வழங்கிப் பேசுவதே சரியாய் இருக்கும். பழ. நெடுமாறன் விடுதலைப் புலிகளின் நல்லெண்ணத் தூதுவர் என்பதுதான் அந்த அடையாளம். தமிழகமெங்கும் பரந்துகிடக்கும் ஈழத் தமிழர்களின் நல்லெண்ணத் தூதுவர்களை இனம் காணவும் அணி சேர்க்கவும் அவர் பயன்படலாம். ஆனால் அம்சா

என்பவர் எப்படி இலங்கை அரசின் அங்கீகாரம் பெற்ற துணைத் தூதரோ, அதுபோல விடுதலைப் புலிகளின் அறிவிக்கப்படாத நல்லெண்ணத் தூதுவரே நம் நெடுமாறன். விடுதலைப் புலிகள் இராஜீவ் காந்தியின் மரணத்திற்குக்கூட ஏதோ ஒரு வகையில் வருத்தம் தெரிவித்தாயிற்று. 24 மணி நேரத்தில் 10,000 ஈழத்தமிழ் முஸ்லீம்களை இடம் பெயரச் செய்ததற்கும் மன்னிப்பு கேட்டாயிற்று. ஆனால் இந்த மண்ணில் – இந்திய மண்ணில் நின்றுகொண்டு, கருணாநிதியின் அரசியல் எதிரியான எம்ஜிஆரின் அரவணைப்பையும் பண முடிப்பையும் வெகு கொண்டாட்டத்துடன் ஏற்றுக்கொண்டு, அதற்கு ஈடாக கருணாநிதியை அவமதித்தார்களே. அவர் நீட்டிய கையை அருவருப்பாய்த் தட்டிவிட்டார்களே, அதற்கு இன்னும் வருத்தம் தெரிவிக்கவில்லை. தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லையோ. (கருணாநிதி நெடுமாறனைக் காகிதப் புலி என்று நையாண்டி செய்வது அதன் பொருட்டுத்தானோ.) தெரிவிக்க வேண்டாமெனில் விட்டுவிடவேண்டியது தானே அந்த மனிதரை, தேசியக் கூவத்தில் தோணிகள் ஓட்டி மகிழ? இந்தியத் தேசியம் சுப்பிரமணியன்சாமிகளின் அத்திம்பேர்களாலும் அம்மாஞ்சிகளாலும் நெருக்கிக் கட்டமைக்கப்பட்டது. ஈழத்தை வேரோடும் வேரடி மண்ணோடும் தர்ப்பைப் புல்லால் நோண்டி எடுத்துவிடக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பது அந்தத் தேசியம். அது இந்தியத் தமிழனையும்கூட மனிதனாக மதித்ததில்லை. ஆயிரங்காலத்து இனப் பகையின் தீராத வன்மத்தின் வெளிப்பாடு அது.

கருணாநிதிக்கு அந்த வருத்தம் ஊவா முள்ளாக இருக்கத்தான் செய்யும். அவர் ஒரு நல்ல பாம்பு போல, காத்திரமான யானையைப் போல. தமக்கு இழைக்கப்பட்ட அநீதியை மறந்துவிடாவாம் அவைகள். அவர் தன்னுடைய உயர்வுக்கும் உயரத்திற்கும் பொருத்தமற்றதெனக் கருதப்படும் அற்ப விஷயங்கள் எதையும் தள்ளிவிடுகிறவராகத் தெரியவில்லை. தன்னை நிறுவிக்கொள்ள பற்பல பின்புலக் கைகளைப் பெற்றவனுக்கு அது பெருமை சேர்க்கலாம். தன்னைத் தானே நிறுவிக் கொள்கிறவன் அற்ப விஷயங்களில் கவனங்கொள்ளாமல் விட்டால் ஒரு நாளைக்கு அவனையே அவை தள்ளிக்கொண்டு போய்விடும் என்னும் அரசியல் புலப்பாடு கருணாநிதிக்கு நிறையவே உண்டு. ஜெயலலிதாவுக்கு, 'ஆமான்டா, நான் பாப்பாத்தி தான்டா' என்று எதிரொலித்து அறைகூவிக்கொள்வது பெருமைக்குரிய தற்காப்புக் கவசமாக இருக்கலாம். ஆனால் கருணாநிதிக்கு அவரைப் பார்த்து உள்ளூர நகைக்கிற சாதிமானைத் தலைதூக்க முடியாமல் நசுக்கி அழிப்பதொன்றே அடுத்த கட்ட நகர்வுக்கான முதற்பணியாய் இருக்கும்.

அந்தக் காலத்தில் ஈழப் போராளிக் குழுக்கள் எம்ஜிஆரைப் பற்றிக் கொண்டது இரண்டு விதங்களில் எனக்கு இயல்பாகப் பட்டது. முதலாவது, 'அன்பே சிவம்' என்பதைப் பல்லாயிரம் கழுவேற்றங்களைக் கொண்டு நிலைநாட்டிய சைவம் மட்டும் இந்தியத் தமிழர்களோடு இணைப்புக் கண்ணியாய் இல்லாமல் போயிருந்தால் ஈழத் தமிழர்கள் தங்கள் மொழித் துய்ப்பாலும் பகிர்தலற்ற மனமூட்டத்தாலும் மலையாளிகளின் இணை பங்காளிகளாகவே ஒன்றியிருப்பார்கள். ஈழத்துப் பனைக்கும் கேரளத்துத் தென்னைக்கும் உள்ள நில வேற்றுமை ஒரு பொருட்டாகவே வகிடெடுத்திருக்காது. இரண்டாவது, ஈழத்தமிழர்கள் சாதிசார் வாழ்வியல் நடைமுறையில் ஆறுமுக நாவலரைப் பின்பற்றுகிறவர்கள். அவர்களுக்குக் கருணாநிதி பொருட்படுத்தத் தேவையற்றவராய்த் தோன்றியதொன்றும் வியப்பில்லை. 'இது அபத்தம். வேலுப்பிள்ளை பிரபாகரனே வெள்ளாளர் இல்லை' என்பார்கள். அதனாலென்ன? ஹிட்லர்கூட ஜெர்மானியன் இல்லைதான். பேசாப் பொருளை பெயரிட்டழைப்பதும், கழுத்தறுப்பு விஷயங்களின் முக்காட்டை விலக்குவதும் கற்களின் ஊடாகவும் கோடிழுத்துச் செல்லும் தர்க்கங்களுக்கு இயல்பானதுதான். ஓசையும் உருவமுமற்று, எல்லா அள்ளைகளையும் கிள்ளிக் கிலுகிலுப்பூட்டும் சாதிப் பூனையின் புளுத்திய நகங்களைத் தர்க்கப் பாறையில் அழுத்திப் பிறாண்ட விட்டால் தெறித்தெழும் நியாயப் பொறிகள் சுரீரிடத்தான் செய்யும்.

## 7

தமிழக அரசியல் களத்தின் அதிசயிக்கத்தக்க அண்மைக்கால வரவுகள் மருத்துவர் ராமதாஸ் அவர்களின் மக்கள் தொலைக்காட்சி அலை வரிசையும் தமிழ்ஓசை நாளேடும். ஒன்று தமிழ்க் கலாச்சாரத்தை மீட்டெடுக்கவும், மற்றொன்று தமிழ்மொழியை மறுவார்ப்புச் செய்யவும் முன்கை எடுக்கின்றன. வெகு அண்மைக் காலமாகத் தமிழக அரசை குற்றக்கூண்டில் ஏற்றுவதில் சன் குழுமமும் மக்கள் தொலைக்காட்சியைப் பின்பற்றத் தன் பாணியில் முயல்கிறது. மக்கள் தொலைக்காட்சியும் தமிழோசையும் தமிழ்நாட்டு ஆட்சிக்கெதிராக தோலுரித்துக்காட்டும் அத்தனை காட்சிப் படிமங்களும் நூற்றுக்கு நூறு நம்பகமானவை என்பதை எந்தப் பைத்தியக்காரனும் முதல் நுகர்விலேயே ஒத்துக்கொள்வான். ஆட்சி அதிகாரத்தைக் கொள்ளையர்களும் கல்நெஞ்சுக்காரர்களும் கைப்பற்றிக் கொண்டதால் நாடே கொந்தளித்துக் குமுறிக்கொண் டிருப்பதைப் போலவும், தெருவுக்கு வந்துவிட்ட மக்கள் மத்தியில் எந்த நேரத்திலும் புரட்சி வெடிக்கலாம் போலவும், காண்பவர்களின் கற்பனையில் திகில் வளர்க்கும் சித்திரங்கள் அவை. இன்னும் 10 அலைவரிசைகள் தொடங்கி, ஒவ்வொன்றும் தனித்தனித் தொகுப்புகளோடு 24 மணி நேரமும் ஒலிபரப்பினாலும் தமிழ்நாட்டு அவலத்தைக் கொட்டித் தீர்த்துவிட முடியுமா என்பது பொதுவாழ்வுச் சுரணையுள்ள எவருக்கும் இயல்பாய் எழும் கேள்வி.

இதனூடாகத் 'தமிழைத் தமிழாக்கு'ம் அவர்களது பணி தமிழ்த் தெருக்களிலேயே தொலைந்து போன தமிழை மீட்டெடுத்து நட்டுத் தமிழ்நாட்டைச் செழிக்க வைக்கும் அதியற்புதமான முயற்சி. தமிழின் மீது பற்றும் பாசமும் வைத்திருப்பவர்கள்கூடத் தமிழைவிட்டு எவ்வளவு அந்நியப்பட்டிருக்கிறார்கள் என்பதை முகத்தில் அறைகிறாற்போல் தொகுத்துச் சொல்லி விழிப்புறச் செய்யும் நன்றிக்குரிய பணி.

கைகள் இரண்டிலும் சொந்தபந்தங்களைப் பைகளாகத் தொங்கவிட்டுக்கொண்டு, முந்தைய முன்னுதாரணங்களைப் பின்பற்றி அரசியலுக்கு வந்த எவனும் புதிய முன்னுதாரணமாய் விளைவான் என்பதற்கு எந்த முகாந்திரமும் இல்லை. மாறாக, மொழியை மீட்கவும் வளர்க்கவும் முன் வருகிறவன் தன்னையே முன்னுதாரணமாக்கிக் கொள்ளும் அர்ப்பணிப்பாளனாவான். சொந்தச் சந்ததியின் துணையோடோ அல்லது தூற்றுதலோடோ, ஒட்டுமொத்த சமூகத்திற்கும் தன்னைத் தத்தம் செய்து கொள்கிறவனின் வரலாற்றுச் சிறப்பு மிக்க பணி அது. ராமதாஸ் அந்த வகையில் தன்னை வரலாறாக்கிக்கொள்ளும் தகுதி படைத்தவர்.

அரசியலிலும்கூட அவர் ஒரு புதிய வரலாறெழுதும் முனைப்புள்ளவராகத்தான் முதல்தோற்றத்திலேயே தன்னை முன்னிறுத்திக் கொண்டார். அந்தக் கூறு இன்றைக்கும் அவரிடம் தொழிற்படுவதைக் காணும் போது அவரே வருங்காலத் தமிழகத்தின் நம்பிக்கையும் வல்லமையும் என்பதாகத்தான் மகிழத் தோன்றுகிறது. தலித்துகளை அரசியல் பங்காளி களாக ஏற்க முன்வந்த, வெளிப்படையாக அறிவித்த ஒரேயொரு இடைநிலைச் சாதித் தலைவராக கண்ணுக்கெட்டிய தூரம் வரை மருத்துவர் ராமதாஸ் மட்டுமே தெரிகிறார். இது ஒன்றும் சாதாரண விஷயமல்ல. தலித்துகளைக் கொல்வதற்கே பிறந்தவர்கள் நாம் என்று உள்ளூர வக்கிரம் பிடித்தலையும் இடைநிலைச் சாதியிலிருந்து தலித் பிணத்துக்குத் தோள் கொடுக்கும் தலைவன் ஒருவன் தோன்ற முடியும் எனில் அவரே ராமதாஸ். எங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால் முதலமைச்சர் ஒரு தலித்துதான் என்று அறிவித்தவர் அவர். அண்மைக்காலமாக கருணாநிதி எப்படி தன்னைச் சாமானியன் என்று சொல்லிக் கொள்வதில்லையோ, அதுபோலவே மருத்துவரும் அதை மறு பிரகடனம் செய்யவில்லை என்பதற்காகக் காலம் கனியும் முன்பே நாம் சந்தேகம் கொள்ளத் தேவையில்லை. தலித் எழில்மலை, பேராசிரியர் பொன்னுசாமி ஆகியோர் அமைச்சர்களாய் அமர்த்தப்பட்டது அந்த முறைமையில்தான் என்று நம்பலாம். அரசியல் கருத் தாளராக ஏ.பி. வள்ளிநாயகம் பங்காற்றியதும் இன்று வடிவேல்இராவணன் இணைந்து செயல் படுவதும் அதன் தொடர்ச்சியாகவே இருக்க வேண்டும். ஆனால் தலித் சொந்தங்கள் எதிர்பாராமல் வந்து, உடன் பயணித்து, இறங்கிச் செல்லும் இரயில் பயணிகளைப்போல வந்து போகிறார்கள் என்பதையும் நாம் மறப்பதற்கில்லை.

அரசியல் செயல்பாட்டில் மருத்துவர் எப்போதோ வெள்ளிவிழா கண்டு முடித்தவர். அரசியல் களத்தில் ஆழமாகத் தொடர்ந்து படர்ந்து நிற்பவர். கூட்டணி அரசு என்று வந்துவிட்டபின் எப்போது வேண்டு மானாலும் யாரோடும் சேர்ந்து கட்சியை வளப் படுத்தலாம், அரசியலை பலப்படுத்தலாம் என்னும் தெளிவுள்ள அரசியல்வாதி. மற்ற அரசியல்வாதி களிடமிருந்து அவர் வேறுபடும் புள்ளி என்னவெனில்

அரசியலை மருத்துவர் ஆகக் குரூரமாக நேசிக்கிறார்– ஒரு விவசாயி நிலத்தை நேசிப்பது போல, ஒரு முதலாளி பணத்தை நேசிப்பதுபோல. பா.ம.க. மட்டுமின்றி பல அமைப்புகளையும் நிறுவியவர் என்னும் வகையில் அரசியலின் மேய்ப்பராகவே தன்னை நிறுவிக்கொள்ள முனைகிறார். அப்படிப்பட்டவர் ஒரு பிறவிப் பகைவனைப் போல் அரசை விளாசுவதில் காட்டும் திடீர் பாய்ச்சலின் உள்ளடக்கம் அப்படியொன்றும் நேர்த்தன்மை கொண்டதாகவோ தமிழ் வாழ்வைப் புதிய விடியலுக்கு இட்டுச்செல்லும் புரட்சித்தன்மை மிக்கதாகவோ இல்லை என்பதை சராசரி மனிதனும் அறியக் கூடியவனாய் இருக்கிறான். அவரது மூர்க்கமும் பாய்ச்சலும் கருணாநிதியையும் கருணாநிதியின் ஆடுகளத்தையும் கலைத்துப் போட்டுக் கவிழ்த்துக் காட்டுவதற்கே என்பதன்றி வேறெந்த நியாயத் தன்மையும் அதில் முற்படுவதாகத் தெரியவில்லை. விமர்சிப்பதில் அவர் காட்டும் கட்டுப்பாடற்ற வேகமும் கருணையற்ற போக்கும் சில அடிப்படை முறைமைகளைக் கூட நிறைவு செய்வதைத் தவிர்த்து விட்டன.



உதாரணமாக, அரசின் குறைகளை அல்லது செயலின்மைகளை ஒரு கூட்டணிக்கட்சித் தலைவர் என்னும் முறையில் முதலமைச்சரின் நேரடிக் கவனத்திற்குக் கொண்டு செல்லலாம். மக்கள் நலனை முதன்மைப்படுத்தும் எவரும் அதைத்தான் முதலில் செய்வர். முதல்வர் அகப்படாமல் போனாலோ, முகங்கொடுக்காமல் தவிர்த்தாலோ, குறைகளைக் களைய முனையவில்லை என்றாலோ, நட்பு காட்ட மறுத்தாலோ, இறுதிக்கட்ட எச்சரிக்கை யாக மக்கள் மன்றத்தில் குப்பைகளாகக் கொட்ட லாம். அப்படியோர் முறைமையைத் தவிர்த்துவிட்டால் அது வெறும் வல்லடி அரசியல்தானே தவிர மக்கள் நலன் சார்ந்த முயற்சியல்ல. மருத்துவரின் வல்லடி அரசியல் ஒட்டுமொத்த தமிழ்ச் சமூகத்திற்கும் கிடைத்த வரம் என்றால் நலந்தான். அப்படி இல்லையாயின் குறைந்தபட்சம் 'தாழ்வுற்று வறுமை மிஞ்சி' அல்லல்படும் அடிநிலை வன்னிய சமூக மக்களுக்கேனும் விடிவைத் தருவதாய் இருந்தால் அதுவும் பெரும் வரவுதான். ஆனால் அதற்கான முகாந்திரம் ஒன்றையும் காண முடியவில்லை. 'சந்தனக்காடு' தொலைக்காட்சித் தொடர் எடுத்துப் புகழ் சேர்த்துக்கொண்டவர்கள், இன்னும் சிக்கல்களோடு உறங்கி எழும் வீரப்பன் குடும்பத்தைத் தத்தெடுத்துக் கொள்வதையல்லவா முன்னுரிமைப் படுத்தியிருக்க வேண்டும்? அதற்கான நினைவே இல்லை என்னும்போது, கொஞ்சம் சில்லறைகளோடு கணக்குத் தீர்த்துவிடலாம் என்னும்போது, என்ன விதமான சமூக அக்கறை அல்லது சாதி அக்கறை கொண்டவர்கள் இவர்கள் என்று திகைக்கத்தான் வைக்கிறது.

கடந்த 15 ஆண்டுகளாக கருணாநிதியை மதிப்பிடுவதில் எனக்கு எந்த மனத்தடையும் இருந்ததில்லை. காற்றைப் போலொரு வியாபகத்தைக் கருணாநிதி சாத்தியப் படுத்தியிருப்பதும் அதற்கொரு காரணம். இனிவரும் காலம் மருத்துவர் ராமதாசுடையதாய் இருந்தால் நிழலினூடே பனிக்காற்றடித்தாற்போலக் கொஞ்சம் சில்லென்று வாழலாம். ஆனால் அதற்கு அவர் இன்னும் வெகு தூரம் பயணிக்க வேண்டும். பக்குவப்பட வேண்டும். தன்னில் ஒட்டிக் கொண் டுள்ள சில மிகைத் தசைகளைத் தயவு தாட்சண்யமின்றி தரித்தெறிய வேண்டும். சொல்லப்போனால் பொது நன்மைக்கென்று கச்சிதமாகச் செதுக்கப்பட்ட இன்னொரு கருணாநிதியாய் வியாபிக்க வேண்டும். அரசியலில் கருணாநிதியின் இடம் அப்படி. வெற்றிகரமான அரசியல்வாதி எவனும் கருணாநிதியின் ஊடாகவும் அவரை கடந்தும்தான் வளரவேண்டியுள்ளது. குறைந்த பட்சம் அவரது சமூகப்படுத்தப்பட்ட பெரியாரியமும், சாதி மறுப்பியமும் ஒரு மறுமலர்ச்சித் தமிழகத்திற்கு வலிய கால்களாய் இருக்கும்.

## 8

மனிதன் எப்போதும் கனவு கண்டுகொண்டே இருக்கிறான்; தனக்குப் பிடித்த மாதிரியான நல்லதுக்கான கனவு. இரவுகளுக்கும் பஞ்சமில்லை. ஆனால் வயிறு நிரம்பியிருக்க வேண்டுமே – அரைப் பங்கு சோறும் அரைப் பங்கு நீரும் என்னும் சம விகிதத்திலாவது. நல்ல கனவுகள் நம்மை தாலாட்டுவதென்பதுகூட அவ்வளவு எளிதாகக் கிடைத்துவிடுவதில்லை.

நாங்கள் கரடிச்சித்தூருக்கு மூடுந்தில் பயணித்துக் கொண்டிருந்த போது, மறைந்த சகோதரர் ஏ.பி. வள்ளிநாயகம் மருத்துவரைப் பற்றிச் சொல்லிக்கொண்டு வந்தார். அது ஒரு கனவுக் காலம் என்பதாகத்தான் அவரின் காட்சிப்படுத்தலும் இருந்தது. 'நான் இன்றைய மருத்துவர் ஐயாவைப் பற்றிச் சொல்லவில்லை. தடைகள் ஏதுமின்றி எல்லோராலும் எப்போதும் வெகு எளிதாக அணுகக் கூடிய, பிறருக்கிணையாகத் தன்னை இருத்திக் கொள்கிற துடிப்புமிக்க தோழரைப் பற்றிச் சொல்லுகிறேன். இரவு 12 மணிக்குக் கூட அவர் வீட்டுக் கதவைத் தட்டி எழுப்பி அவருடன் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ள முடிந்த காலம் அது. திறமைகளைத் தேடி ஒன்றிணைக்கவும், தலித்து களைச் சம பங்காளிகளாக ஏற்கவும் அவர் செயலூக்கம் கொண்டு விளங்கிய காலம் அது.'

அப்போது ஏ.பி. வள்ளிநாயகம், பாட்டாளிமக்கள் கட்சித் தோழர்களுக்கு அரசியல் வகுப்பு எடுத்துக் கொண்டிருந்த சமயம். அவ்வகுப்புகளுக்கு ராமதாசும் தவறாமல் வந்துவிடுவாராம். ஒருநாள் அவர் வருவதற்கு முன்பே வகுப்பு தொடங்கிவிட்டது. கருத்துகளைத் தொடக்கம் முதல் கேட்க முடியாமல் போனதை ஓர் இழப்பாக அவர் கருதினார். 'இனிமேல் நான் வருவதற்கு முன் வகுப்பைத் தொடங்காதீர்கள்' என்று கேட்டுக்கொண்டதாக வள்ளிநாயகம் சொன்னார். அதைச் சொல்லும்போது வள்ளிநாயகத்தின் குரல் புளகாங்கித உணர்வால் தழுதழுத்தது. இதில் நாம் கவனிப்பதற்கு இரண்டு புள்ளிகள் உள்ளன. ஒன்று, வள்ளிநாயகத்தின் திறமையை மருத்துவர் அங்கீகரித்த விதம். மற்றொன்று, மருத்துவர் தனது அதிகாரத்திற்குள் எதனையும் வரையறை செய்துகொள்ளும் உரம். தன் வரவுக்காக ஆசானையும் பிற மாணவர்களையும் காத்திருக்கக் கோருகிறோம் என்னும் நுண்ணுணர்வுக்கு அவர் ஆட்படவே இல்லை என்பதுதான் அந்த அதிகாரத்தின் வரம்பு. இன்று ராமதாஸ் அவர்களை 'மருத்துவர் ஐயா' என்று அழைப்பது வெகு பாந்தமான தமிழ்க் கலாச்சார விளிப்பாக நிலைத்துவிட்டது. மதிப்புக்குரியோரையும் வயதில் மூத்தோரையும் 'ஐயா' என்று விளிப்பது தமிழ் மரபு. தமிழ் மரபுக்குப் பொது மரபை மீறிச் சில கூடுதல் பொருள் உண்டு. அனிச்சையாக எழும் ஒரு மரியாதைச் சொல் தொடர்ந்து வலியுறுத்தப்படும்போது, அதுவே மேட்டிமை அடையாளமாகி விடுகிறது. இங்கு 'ஐயா'வும் அப்படியொரு மேட்டிமை அடையாளமாகவே பயன்படுத்தப்படுகிறது. இல்லையெனில் மருத்துவர் ஐயாவை அழைக்கும் அதே மரபில் 'மருத்துவர் சின்ன ஐயா'வையும் அழைக்க நேர்வது எப்படி? கோ.க. மணி போன்றவர்கள் அன்புமணியை குழந்தையாகத் தூக்கிக் கொஞ்சியிருப்பார்கள். இன்று அந்தக் குழந்தையைச் 'சின்ன ஐயா' என்றுதான் அழைக்க முடிகிறது எனில் அவர்கள் இழக்கும் சந்தோஷங்கள் எத்தனை! தளைக்கும் முடிச்சுகள் எத்தனை!

மருத்துவர் பல அமைப்புகளைத் தோற்றுவிக்கிறார். அவற்றுக்கு நிறுவனர் என்னும் பொறுப்பில் மட்டுமே தன்னை நிறுவிக்கொள்கிறார். பா.ம.க.வுக்கு அவர் நிறுவனர் என்னும்போது கட்சி அவருடைய சொத்தாகி விடுகிறது. அவருக்குப் பிறகு அவரது வாரிசுக்கு உரிமையாகக் கூடிய நிறுவனம். அதற்கேற்றபடிதான் நிறுவனர்கள் விளிக்கப்படுவார்கள் என்பது இங்கு நடைமுறைப் படுத்தப்படுவதாகத்தான் பொருள்படுகிறது. இதனை ஒப்பிடும்போது தி.மு.க. உண்மையாகவே அனைத்துத் தமிழ்நாட்டு மக்களுக்குமான அமைப்பாகிறது. அதைக் கருணாநிதியும் அவரது குடும்பத்தினரும் கையகப்படுத்தியிருக்கிறார்கள் என்று குற்றம்தான் சாட்டலாமே தவிர நாளைக்கே இன்னொரு தலைவன் அதைத் தன்வசம் கொண்டுவரலாம். ஆனால் பா.ம.க. அப்படியல்ல. வேண்டுமானால் இன்னொரு கட்சியை தொடங்கலாமே தவிர பா.ம.க.வை சட்ட ரீதியாக யாரும் கைப்பற்ற முடியாது. இதுதான் நடைமுறை உண்மையெனில் மருத்துவருக்கும் அவரது மக்களுக்குமான உறவு பண்ணையாருக்கும் பண்ணையாட்களுக்குமான உறவாக வறலாற்றைப் பின்னுக்கிழுத்துவிடக் கூடியதல்லவா.

நான் தமிழன் என்று சொல்லிக்கொள்வதில் எனக்குப் பெருமிதம் உண்டு. காரணம்,

என்னால் பத்தாம் நூற்றாண்டு அல்லது எட்டாம் நூற்றாண்டுத் தமிழனாய்ச் சிறப்பாக வாழ்ந்து காட்ட முடியும் என்பதற்காக அல்ல. பெரியாரின் தோளில் நின்றுகொண்டு என்னால் எளிதாக முன்னோக்கித் தாவிச் சென்றுவிட முடியும் என்பதால்தான். இவ்வகையில் தலித்துகளுக்கு அவர் கொடுக்கும் இடம் என்பதும்கூட அவர்களை உள்ளிழுத்துச் செரித்துக்கொள்ளும் முயற்சியாகத்தான் மதிப்பிடப்பட வேண்டி வரும் அல்லவா?

'பெரியார்' என்னும் பெயரும் 'திராவிடர்' என்னும் அடையாளமும் மருத்துவர் இராமதாஸ் என்னும் தமிழ்க் கலாச்சாரக் காவலருக்கு உகந்த சாரமாய் இருக்குமோ இருக்காதோ, எனக்குத் தெரியவில்லை. 'விண்'ணென்று ஓங்கி நின்ற தமிழனும் தமிழ் வாழ்வும் பெரியார் முன்னெடுத்த திராவிடத்தால்தான் வீழ்ந்துவிட்டதாக தமிழியங்கள் ஆய்ந்து சொல்லும் காலம் இது. ஏதோ இவர்கள் நேற்றுவரை நிமிர்ந்து நின்றாற்போலும் பெரியார் வந்துதான் இவர்கள் முதுகுத்தண்டை ஒடித்துவிட்டாற்போலும் அப்படியொரு பசப்பு. என்னளவில் அவ்விரு பெயர்களும் எனக்குகந்த பொருளில் சிறப்பாகவே படுகின்றன. பெரியார் கன்னடரா தமிழரா என்பதற்கெல்லாம் மேலாக தமிழனின் கடைசிக்கணு அறிவுச்சமாகவே நான் மதிக்கிறேன். 'திராவிட பாஷா', 'திராவிட சிசு', 'திராவிட வேதம்' போன்ற பரந்த சொல்லாடல்களில் எல்லாம் 'திராவிடம்' என்பது 'தமிழ்' என்பதின் சர்வதேசச் செலாவணிக் குறியீடாகத்தான் பயன்பட்டுள்ளது என்பதால் நான் அந்தப் பொருளிலேயே உறுதி கொள்கிறேன்.

## 9

இந்திய வரலாற்றைத் திரும்பிப் பார்த்தால் அசோகன் காலத்திலிருந்து ஔரங்கசீப் காலத்திற்கு அப்பாலும் தமிழ்நாடு தனித் தீவாகத்தான் சுதந்திரமாய் விடுபட்டுக் கிடந்திருக்கிறது. அதே நேரத்தில் அது புத்தர் காலம் முதலே பார்ப்பனக் கலாச்சாரத்தாலும் அதன் மௌடிக உச்சாடனங்களாலும் மெல்ல மெல்லத் தின்னப்பட்டு, முடிவில் பார்ப்பன மேலாதிக்கத்தின் மிதியடியாயும் கிடந்திருக்கிறது. பார்ப்பனர்கள் நேரடியாக ஆட்சி செய்யவில்லைதான். ஆனால் ஆட்சிக் கட்டிலை ஆட்டுவிப்பவர்களாகவும், அதில் யார் அமர்வது என்பதை நிர்ணயம் செய்கிறவர்களாகவும் அவர்களே இருந்திருக்கிறார்கள்.

என்றைக்கு இந்த வீழ்ச்சி உணரப்பட்டதோ அன்றைக்கே அதன் முரண்உயிர்ப்பாக அடையாளப்பட்டதுதான் பார்ப்பன எதிர்ப்பு என்னும் மான உணர்ச்சி – மனம் தூண்டப்படும்போதெல்லாம் கிளர்ந்தெழுவதான மான உணர்ச்சி. மீனுக்கு எதிர்நீச்சல் எப்படியோ, தமிழ் வாழ்வுக்கு பார்ப்பன எதிர்ப்பும் அப்படியே. பார்வையானது அரசியல்படும்போதெல்லாம் தமிழ் வாழ்வின் அடிநாதமாக உயிர்த்தெழுவது இஃது ஒன்றே. வரலாறு நெடுகிலும் முணுமுணுப்பாகவோ, முழக்கமாகவோ, தனிமனித எதிர்ப்பாகவோ, வெகுமக்கள் இயக்கமாகவோ, மதமாற்ற நடவடிக்கையாகவோ பார்ப்பனருக்கெதிரான தமிழரின் தன்னுணர்ச்சி தொடர்ந்து வெளிப்பட்டிருக்கிறது. அவ்வெளிப்பாட்டின் சென்ற நூற்றாண்டுத் தொடர்ச்சிதான் நீதிக்கட்சியின் எழுச்சியும் திராவிட இயக்கச் செயல்பாடுகளும். இதன் நடுவே இன்னொரு முக்கியமான வீழ்ச்சி நிலையையும் தெளிவுபடுத்தியாக வேண்டும். இடைவிடாத பார்ப்பனத் தாக்குதலில் பிடி நழுவிப் போன தென்னக மக்கள் தங்கள் இன அடையாளம் சார்ந்த பௌதிக இருப்பை நிலைப் படுத்திக் கொள்ளும் முயற்சியில் பார்ப்பனர்களோடு அதிகாரப் பகிர்வைக் கோருகிறவர்களாக மாறிப் போனார்கள். இப்படியாகத்தான் அதிகாரத்தில் விகிதாச்சாரப் பங்குரிமை, அழுத்தப்பட்டவர்களுக்கான இட ஒதுக்கீடு என்னும் கோரிக்கைகளை முன்வைத்து முதன்முதலில் தென்னகத்தில் மட்டுமே அரசியல் இயக்கங்கள் தோன்றின. இதைத்தான் நான் 'ஆதிக்கத் தமிழ்ச் சாதிகளின் அதிகாரக் கொள்முதலும் தன்மான விற்றொழிப்பும்' என்று அடைமொழியிடுகிறேன். பார்ப்பன எதிர்ப்புணர்ச்சி இந்தியாவிலேயே தமிழ்நாட்டில்தான் அணையா நெருப்பாய் உயிர்த்திருக்கிறது. அதற்குக் காரணம் அடிமன உணர்வாக இன – மொழி ஆளுமைக் கூறுகள் இங்கு மட்டுமே அழிவில்லாததாய்க் கூர்மை பெற்றிருக்கின்றன. இது கட்சி வேறுபாடற்றது. காங்கிரஸ் கட்சியிலும் ஓமந்தூர் இராமசாமி ரெட்டி யார் வெளியேறியதற்கும் பின்னாளில் காமராசர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதற்கும் பின்னணியாய்ச் செயல்பட்டது இந்த உணர்வுதான்.

தில்லியில் பார்ப்பன அறைகூவலை AIIMS தலைவர் வேணுகோபால் வடிவத்தில் அன்புமணி சந்தித்திருந்தாலும் பா.ம.க.வின் அரசியல் செயல்பாட்டில் பார்ப்பனர்க்கெதிரான தன்னுணர்ச்சி தகவமைக்கப்பட்டுள்ள விதம் பற்றி நமக்குத் தெளிவான சித்திரமில்லை. மாறாக, பல்பொருள் அங்காடிப் பங்கீட்டுத்தனமான சகோதர யுத்தங்கள் வெகு மூர்க்கமாக வடிவம் பெற்றுள்ளன. அந்த அரசியல் யுத்தத்தை வெகு தீவிரமாக்கி மலினப்படுத்தியது பா.ம.க.தான். அரசியலில் குறுகிய காலப் பலன்களுக்கும் நீண்ட காலப் பலன்களுக்கும் இடையே ஓடும் எல்லைக்கோட்டை நிர்ணயிக்கிறவனே எதிர்கால அரசியலைக் கணிக்கத் தெரிந்தவன்.

இருப்பையும் நடப்பையும் வைத்து இங்கு நாம் ஓர் எளிய சமன்பாட்டை எழுதிப் பார்க்கலாம். இக் கட்டுரையில் நாம் முதன்மைப்படுத்திய பழ. நெடுமாறன், ராமதாஸ், வைகோ, ஆகிய மூன்று தலைவர்களும் இந்த ஐந்து ஆண்டுகளில் ஜெயலலிதாவுக்கு எதிராகப் பதிவு செய்த விமர்சனங்களைத் தொகுத்துப்பாருங்கள் – ஒரு 10 பக்கம் தேறுமா? – 100 பக்கங்கள் என்றே வைத்துக் கொள்ளுங்கள். அதே சமயம் கருணாநிதிக்கு எதிரான அவர்களது விமர்சனங்களைத் தொகுங்கள். கருணாநிதி முதல்வரான பின் பொழுது விடிவது எத்தனை உறுதியானதோ அத்தனை உறுதியானது அவர்கள் விமர்சிக்காமல் இருக்கமாட்டார்கள் என்பதும் அல்லவா? ஆகவே, குறைந்தபட்சம் 100 மடங்காவது – 100 பக்கங்கள் அல்ல, 100 மடங்கு – தேறாது? விளக்கங்கள், வியாக்கியானங்கள் யாவும் பூதாகாரமாகத் தெரியும் உண்மையை எளிமைப்படுத்துவதற்குத்தான் பயன்படுமே தவிர உண்மையையே மறுத்துவிடுவதற்கல்ல. கருணாநிதி மூத்தவர், முதல்வர் என்னும் வகையிலும், இனவழிப் பட்ட சகோதரன் என்பதாலும் இந்தச் சகோதரர்கள் எத்தனை முறை அவரை நேரில் சந்தித்துப் பேசவும், கோரவும், குற்றம் சாட்டவும் முயன்றிருப்பார்கள்? நெடுமாறனும் வைகோவும் பட்ட கொடுமைகள் நல்லவேளை கருணாநிதி ஆட்சியில் நிகழவில்லை. அதனால் கருணாநிதி அப்படியெல்லாம் நிகழ்த்தத் தெரியாத யோக்கியர் என்பதல்ல நம் வாதம். உளவியல் ரீதியாக ஜெயலலிதாவின் மேல் அவர்களுக்கு அனிச்சையாய்த் தோன்றும் மதிப்புணர்வு அல்லது அச்ச உணர்வு கருணாநிதியின் மேல் இல்லை என்பதுதான் உண்மை. சட்டம் தான்தோன்றித்தனமாகப் பயன்படுத்தப்படும்போது அச்சம் ஏற்படுகிறது. தன்னுணர்வில் தவிர்க்கப்படும்போது அலட்சியம் வருகிறது; அதற்கெதிராக அறைகூவத் தோன்றுகிறது. கறுப்புவெள்ளையில் சொன்னால் இதுதான் உண்மை. இராமதாஸ், வை.கோ. ஆகியோர் ஜெயலலிதா விற்காகக் காத்திருப்பதிலும் அவரை அதீத வினயத் தோடு சந்திப்பதிலும் உறுத்தல் தராத தன்மான உணர்வு, கருணாநிதியை நினைக்கும் போதே காயப்படும் எனில், தமிழ்நாட்டு மலக்குழிகளைச் சாதித் தூய்மையால் மட்டுமே கழுவ முடியும் என்பதற்காக விம்மிதம் கொள்ள வேண்டியதுதான்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில்தான் கருணாநிதியின் வரலாற்றுயரம் நம்மைத் திரும்பிப்பார்க்க வைக்கிறது. தமிழ்த் தலைவர்கள் அவரின் எந்தப் பிரச்சனைக்கும் கைகொடுக்க மாட்டார்கள், எந்தக் கமுக்க உடன்பாட்டுக்கும் செயல்பாட்டுக்கும் முகங்கொடுக்க மாட்டார்கள் என்னும்போது பார்ப்பனர்களைச் சமாளிப்பதன் மூலம் தன்னையும் தானே முனைந்து பெற்ற தகுதிகளையும் தக்கவைத்துக்கொள்வதைத் தவிர அவரால் வேறென்ன செய்துவிட முடியும்? அப்படியும் கொழுத்துப்போய் (நண்டு கொழுத்தால் வளையில் தங்காது என்பார்கள். அந்த வகை கொழுப்பு இது.) சுப.தமிழ்ச்செல்வனுக்கு இரங்கற் கவிதை எழுதுவதும் இராமன் எந்தப் பொறியியற் கல்லூரியில் படித்தான் என்று அலம்பல் பண்ணுவதுமாக வகைதொகை இல்லாமல் மாட்டிக் கொள்ளவும் நேர்கிறது. இதுவும் கூட ஒருவேளை வாலைக் காட்ட வேண்டிய இடத்தில் தலையையும் தலையைக் காட்ட வேண்டிய இடத்தில் வாலையும் காட்டிச் சமாளிக்கும் ராஜதந்திரமாகக் கருதப் படவும் கூடும். கருணாநிதி எந்தத் தந்திரத்திற்கும் இரண்டாம் பட்சமானவரல்லர் என்பதுதான் அவரது பிறவிச் சிறப்பு.

## 10

தமிழகத்தைப் பாதித்துக்கொண்டிருக்கிற ஆற்றுநீர்ச் சிக்கலில் கருணாநிதியின் செயலின்மைதான் தோல்விக்குக் காரணம் என்பது அழுத்தமான

4. 1932 - ºŸè£ô^F™ ï£†´Š¹ø á˜(Aó£ñ) õ£›, ¬è - î I ›Šªð£N™ - 8: 1-2

5. 1938- ðœOòèóŠ ðöƒè¬ î - ðFŠ¹: î I ›Šªð£N™ ( Í ô º ‹ ð¬öò¾¬ó»‹) 14:7

6. 1938 - F¼, °øÀ ‹ àðGì îƒèÀ ‹ - î I ›Šªð£N™ - 14:10

7. 1938 - Þô , è í Š¹ôõ˜- ñ.ï£.«ê£ñ²‰îó‹ Hœ¬÷- î I ›Šªð£N™ - 15:11

8. 1954 - Suggestions for the proposed Kambaramayanam Edition and tentative programme for the Tamil Research Department, being extracts from the letters sent to the Vice - Chancellor, Annamalai University on 15.10.52, 29.11.52 & 23.12.53

9. 1954 - è‹ðó£ñ£ò í Š ðFŠ¹‹ G¬ô¬ñ»‹ - î I ›Šªð£N™ - 30: 5 - 6

10. 1957 - èƒè£«îM â¿Fò ñ¶ó£ Müò‹: ñFŠ¹¬ó - î I ›Šªð£N™ (ã¿ Þî ›èœ - ªî£ì˜ è†´ ¬ó) 33: 6-12

11. 1958 - «ðó£CKò˜ ªð. ²‰îó‹ Hœ¬÷ («ðó£. ªð. ²‰îó‹ Hœ¬÷ G¬ù¾ñô˜) - î I ›Šªð£N™ - 33: 6-12

12. 1958 - è£™´ ªõ½‹ Üõ˜ õ£›‰î è£ôº ‹ - î I ›Šªð£N™ - 34: 4

13. 1961 - î£ñ v A«óJ ¡ Þóƒè Ÿð£(ªñ£Nò£ , è‹) - ï£†´Š¹ø Þ´è£†®™ â¿Fò¶ - MŸð¬ù àK¬ñ: ¬êõ C^î£‰î ËŸðFŠ¹ , èöè‹, F¼ªï™«õL.

14. 1964 - F¼õ£êè‹ (º îŸð° F, Í ô‹) Ü ‡ í £ñ¬ôŠ ð™è¬ô , èöè‹, Þó ‡ ì£‹ ðFŠ¹ - 1984, Í ¡ø£‹ ðFŠ¹ - 2004

15. 1967 - ðö‰î I ›„ ªê£™ô¬ ì¾: ¹¶„«êK Hªó…² Þ‰Fò GÁõù‹ ( Í ¡Á ªî£° Fèœ)

16. History of Siddha Medicine - Department of Indian Medicine & Homoeopathy, Chennai - 106

17. **°PŠ¹:** ãØ˜ «îõ£ó^Fó†´ ñŸÁ‹ Þ¼ ÝƒAô , èM¬î Ë ™èœ ÝAòõŸ¬ø^ ªî£°^î£˜ â¡ø °PŠ¬ð ÜPò º®Aø¶. Ë ™èœ ð£˜¬õ , ° , A¬ì ,èM™¬ô. ÞŠð†®ò™ º¿¬ñò¡ Á.


(Þ ,è†´ ¬ó â¿î Íôñ£è Ü¬ñ‰îõ˜èœ «ðó£CKò˜ °«ó£ ñŸÁ‹ è ‡ í ¡. î I ›Šªð£N™ è†´ ¬óè¬÷^ ªî£° ,è àîMòõ˜ ÝŒõ£÷˜ è.ÜŒòŠð ¡ .êó²õFñè£™ ªî£ì˜ð£ù ªêŒFè¬÷„ «êèK^îõ˜ ÝŒõ£÷˜ ð£.ªüŒè« í w. Þ ,è†´ ¬ó è E Šªð£P õN î†ì„² ªêŒîõ˜ ÝŒõ£÷˜ «ô£.ªüòô†² I. Þõ˜èœ Ü¬ùõ¼ , °‹ ï ¡ P»¬ì«ò ¡ . க. ஆ-ா்)

பாண்டிச்சேரி பிரெஞ்ச் இந்திய நிறுவனம் வெளியிட்டுள்ள அறிஞர் நீ.கந்தசாமிப் பிள்ளையவர்களின் நற்றிணை ஆங்கில மொழிபெயர்ப்பு நூலில் (Narrinai Text &Translation) இடம் பெற்றுள்ள கட்டுரை இது.

●

## ஒரு கடிதம்

**ஐ**யா, வணக்கம். இலக்கியத்தை 'உலகமயமாக்கல்' எனும் சந்தைப் படுத்தலில் வணிகமாக்கி ஏராளமாய்ப் பொருளும் புகழும் குவித்துக் கொண்டு அதுவே தமிழுக்கும் அதன் இலக்கியத்துக்கும் செய்யும் சேவை என்று(!) ஏமாற்றிக் கொண்டிருக்கும் பம்மாத்து ஒருபுறம். அரசியல் அதிகாரத்தின் பயங்கரங்களுக்குள் ஒளிந்துகொண்டு மொழியை ஆதாயமாக்கி அந்த இனத்தைக் குழி தோண்டிப் புதைக்கும் கொடூரங்களின் அன்றாட நிகழ்வுகள் மறுபுறம். அதனூடான மனிதத் துக்கு விரோதமாய் எப்போதும் 'இயங்கியல் விதி' போல நடந்து கொண்டிருக்கும் சாதிய வன்கொடுமைக் கேவலங்கள் இன்னொரு புறம் என இருக்கிற தமிழ்ச் சூழலை எதிர்கொள்கிறவர்களுக்குத்தான் 'கவிதாசரணின்' இதழ்ப் பணி எத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை உணர முடியும். சமூக இருட்டுக்குள் ஒற்றைப் புள்ளியாய் ஒரு வெளிச்சம் போல வந்து, ஊழித்தீயாய் மாறி, இப்பொழுது இதழின் வழியாக எவராலும் புறந்தள்ள முடியாத ஓர் இலக்கிய இயக்கமாகி யிருக்கிறது 'கவிதாசரண்.' இந்த நிலையை அடைய அது எடுத்துக்கொண்ட காலச் சேதமும் பொருள் நட்டமும் ஒருபுறம் இருக்கட்டும். எதிர்கொண்ட அவமானங்களும் காயங்களும் தனிமைப் படுத்தல்களும் ஆறாத மனக்காயங்களாகியிருப்பதை உடன் இருந்து அவதானிக்கிற எம்மைப் போன்றவர்களின் உள்ளக் குமுறலாகத்தான் தங்களின் 'ஆசிரியர் பக்கம்' அமைந்திருக்கிறது.

'கால்டுவெல் நூற்பதிப்பை முன்வைத்து' பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். கால்டுவெல் தலித் இல்லை. அடிப்படையில் மதம் சார்ந்த அடையாளங்களுடன் வாழ்ந்தவர். ஆனால் அவருக்கு மதங்கடந்த மனிதப் பார்வை, மாந்த நேயம் இருந்திருக்கிறது. அதனால்தான் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தை' வெறும் மொழியியல் வெளிப்பாடாகக் கொண்டு வராமல் வரலாறு சார்ந்த, சமூகம் சார்ந்த இனவரைவியல் நூலாகவும் கொண்டு வந்திருக்கிறார் என்பதை 133 ஆண்டுகளுக்குப் பிறகு நீங்கள் இப்போது தேடிக் கண்டுபிடித்துச் சொன்ன பிறகுதான் 'தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு'த் தெரிய வந்திருக்கிறது. அதற்கு இந்தச் சமூகம் என்ன செய்ய வேண்டும்? நன்றி பாராட்ட வேண்டும். அதுதான் நாகரிகமுடைய ஒரு சமூகத்தின் நல்ல அடையாளம். ஆனால் உண்மை நிலை அப்படியில்லை. எல்லாரும் அவரவர் சாதியை, அதன் பெருமையை மனதில் குப்பையாகச் சேர்த்துவைத்துத் தூக்கித் திரிகிற 'சாதிச் சங்க காலம்' இது. சங்க காலத்திலும் இப்படித்தான் இருந்திருக்கும் போல. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று உலகத்துக்குச் சொல்லிவிட்டு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்/ ஊரும் சேரியும்/தனித்தனி இடத்தில்' (இது விரைவில் வரவிருக்கும் என்னுடைய போன்சாய் ஹைக்கூ தொகுப்பில் இடம் பெற்றுள்ளது) என்று தம் சொந்தச் சகோதரர்களைச் சாதியச் சிலுவையில் அறைந்தவன்தானே அவன்? சாதியை ஒழிக்க வேண்டும், சாதியற்ற மனிதனாகத் தமிழன் தன்னை முன்னிறுத்த வேண்டும், தலை நிமிர வேண்டும் என்றுதானே நீங்கள் தொடர்ந்து எழுதியும் பேசியும் வருகிறீர்கள். பார்த்தார்கள் நம் தமிழர்கள். உங்களைச் 'சாதியற்ற தமிழன்' சிலுவையில் அறைந்துவிட்டார்கள். அதற்காக நாம் ஏன் வருத்தப்பட வேண்டும்? பெருமையல்லவா பட வேண்டும்? உங்களையும் என்னையும் இந்தத் தமிழ்ச் சமூகத்தையும் இப்படிப் பாழ்படுத்தி வைத்திருக்கிற நம் 'சாதித் தமிழர்கள்'தாம் வெட்கப்பட வேண்டும். ஆனால் அதற்கு மாறாக நீங்கள் குறிப்பிடுவதுபோல எல்லாருமே தெரிந்தேதான் மௌனிகளாக நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இது மனிதருக்கு மனிதர் செய்யும் வஞ்சகம் என்றும் மனித சமூகத்துக்கு இழைக்கப்படும் அநீதி என்றும் அவர்களுக்குத் தெரியாதா என்றால் நம்மை விடவும் நன்றாகவே தெரியும். பிறகு நாம் என்ன செய்ய? நாசமாய்ப் போக' என்று மண்ணை வாரித் தூற்றலாம். அவ்வளவுதான். ஏசுவை சிலுவையில் அறையும்போது அவரைச் சிறுமைப்படுத்த எண்ணி அவருக்கு இரண்டு பக்கங்களிலும் இரு கொலைக்குற்றவாளிகளைச் சிலுவையில் அறைந்தார்கள். இப்போது தமிழர்கள் சாதியற்ற உங்களுக்கு ஒரு பக்கத்தில் சாதி இழிவுடைய தலித்தையும் மறு பக்கத்தில் கால்டுவெல்லையும் சேர்த்து சிலுவையில் அறைந்து விடுவார்கள். வேண்டுமானால் பாருங்கள். கடைசியில் அதுதான் நடக்கப்போகிறது. ஆனால் ஒன்று. ஏசுவல்ல நாம், மூன்றாம் நாள் பகைவர்களுக்கருளவென்றே உயிர்த்தெழ. மாறாக, சாதிப் பகை ஒழித்து அதே சாதியச் சிலுவையில் சாதி வெறியர்களை அறைந்து, தன் சாம்பலிலிருந்து தானே எழும் பீனிக்ஸ் பறவைகள்போல நாம் என்பதைக் காலம் உணர்த்தும்.

குறிப்பு: 'ஆசிரியர் பக்கத்தில்', ''திருவள்ளுவர் பெயரால் ஒரு கால நெடுங்கணக்கை அரும்பாடுபட்டுத் தேர்ந்துகொண்ட தமிழக அரசு அதற்கான தமிழ்ப் புத்தாண்டு நாளையும் உடன் நிகழ்வாக அறுதியிட்டு நடைமுறைப்படுத்தியிருக்க வேண்டும். தமிழ் சார்ந்த இவ்விதமான அரசு நறுவிசுகளில் தமிழ்நாட்டு அரசு ஒருபோதும் முறையறிந்து செயல்படவில்லை என்பதுதான் தமிழர்கள் எதிர் கொள்ளும் அதிர்ச்சி மிக்க அறைகூவல்,'' என்று எழுதியிருந்ததைத் தொடர்ந்து நம் இதழில் 'கலைஞர் தலையை வெட்டுவோம்' என்ற இந்து பாசிசத்தின் திமிரை எதிர்த்துப் பதிவு செய்த 'எச்சரிக்கை' எனும் என் கவிதையையும் கணக்கில் வைத்துப் பார்த்த நேரம், தற்போது தமிழக அரசு தை முதல்நாளைத் தமிழ்ப் புத்தாண்டாக, தமிழர் ஆண்டு முதலாக அறிவித்திருப்பது நம் 'கவிதாசரண்' இதழுக்குக் கிடைத்த மெய்யான தமிழ் வெற்றி என்று கருதலாம் அல்லவா?

புதுச்சேரி - 10 **பாரதிவசந்தன்**

# நான் பேசுவது யாருக்காக? எதைப் பற்றி?...



■ எக்ஸ்ரே மாணிக்கம்

உலக மயம், தாராளமயம், தனியார் மயம் எனும் வடிவங்களைப் போற்றவா அல்லது தூற்றவா? முதலாளித்துவ சனநாயகம் உயர்ந்ததா அல்லது பாட்டாளி வர்க்க சர்வாதிகார சனநாயகம் சிறந்ததா என விவாதிக்கவா? தெள்ளு தமிழில் அள்ளித் தரும் இலக்கிய விருந்து படைத்து சுவைக்கவா? மனிதநேயம் காக்க சிற்றிதழ்கள் வரிந்துகட்டி வாதிடுவதைப் போற்றவா, அல்லது புலனாய்வு செய்யவா? ஆனாதிக்கமே பெண்ணடிமைக்குக் காரணமென வேர்மூலம் கண்டறியவா? தமிழர் தேசியமா, தமிழ்த் தேசியமா, அல்லது தாராள தேசியமா என குல மரபுக் குழுக்களின் தொல் மரபணுவைப் பிளந்து பார்க்கவா?

ஆசியக் கண்டத்திலிருந்து வந்த இஸ்லாமியப் படை எழுநூறு ஆண்டுகளுக்கு மேலாயும், ஐரோப்பிய போர்ச்சுகீசியர் தொடங்கி, பல நாட்டினர் தொடர்ந்து, ஆங்கிலேயர் வரை ஆண்ட இருநூறு ஆண்டுகளுக்கு மேலும் ஆக மொத்தம் ஆயிரம் ஆண்டுகளாய் - அந்நியர்களுக்கு அடிமைப்பட்ட சூழ்நிலையைப் பூதக்கண்ணாடி கொண்டு தோண்டி புதைபொருள் ஆய்வு செய்து கண்டறியவா?

இரண்டாவது உலகயுத்தம் கை கொடுக்க, இந்தியர்கள் போராட, இழந்த சுதந்திரம் மீட்டெடுக்கப்பட, அதன் பயன் எந்தச் சாதியால் வல்லாண்மையுடன் வளைத்துப் போடப் பட்டுள்ளது என வாதப்பிரதிவாதம் செய்யவா?

மேலே கூறியவும் இன்னும் பலவும் தமிழர்களின் பேசுபொருளாகி, அறிஞர்களால் ஆய்வும் தீர்வும் கண்டறியப்படலாம். இவை பற்றி எழுதவும் பல பேர் உண்டு.

இவற்றிலெல்லாம் எனக்கும் கவனங்கள் உண்டு எனினும் எனது பேசுபொருள் அவையல்ல. மாறாக, வந்தேறிப் பார்ப்பனர்கள் வர்ணம், சாதி, தீண்டாமை எனப் பாகுபடுத்திக் கொடுக்க, அதற்கு ஊக்கமும் ஆக்கமும் கொடுத்து, ஒரு நாடு, ஒரு மொழி, ஓரின மாந்தரில் சிலரைப் பல நூறு ஆண்டுகளாய் ஒதுக்கி, ஓரம் கட்டி, தீண்டாமை எனும் முத்திரையைக் குத்தியோரும், அதற்கு உடந்தையாய் இருந்து நடைமுறைப் படுத்தியோருமே எனது பேசுபொருளாகின்றனர்.

இந்தியச் சுதந்திரத்திற்கு எல்லோரும் கூடிப் போராடும்போது, தீண்டாமையால் பாதிக்கப் பட்டோர் எங்கள் சுதந்திரம் என்னாயிற்று? எனப் போர்க்குரல் கொடுத்ததும் - இந்திய சுதந்திரத் தோடு ஒடுக்கப்பட்டோர் விடுதலையும் ஒரு சேர வந்து சேரும் என்னும் சத்திய வாக்குமூலத்தால், எதிர்க்குரல் மந்தப்படுத்தப்பட்டது.

தமிழகத்தில் பார்ப்பன ஆதிக்கம் ஒடுக்கப்பட்டு திராவிட ஆட்சி ஆதிக்கம் பெற்றுவிட்டால், தாழ்த்தப்பட்டோர் விடுதலை கைமேல்தான் என முழங்கப்பட்டது. திராவிட ஆட்சி ஆதிக்கம் பெற்றுவிட்டது. ஆனால் தமிழகக் கிராமங்களில் தீண்டாமை இன்னும் தன் கொடும் நஞ்சைக் கக்கிக்கொண்டுதான் இருக்கிறது. குறைந்த பட்சம் சாதி ஒழிப்பும் தீண்டாமை ஒழிப்பும் வெவ்வேறானவை என்னும் அடிப்படைப் புரிதலை எட்டும் அளவுக்குக்கூட சமூகக் கவனங்கள் குவிக்கப்படவில்லை. தீண்டாமை யும் சாதியும் தனித்தனித் தளங்களில் வேரூன்றி யுள்ளன என்பதால் இரண்டையும் ஒன்றாக்கிப் பேசுவதும் எழுதுவதும் பிரச்சினையைச் சிக்கலாக்கவே உதவியுள்ளன.

இந்து மதம் வார்த்தெடுத்த மிக மோசமான கொள்கைகள் இரண்டு. ஒன்று இன்றைய நிலையில் கிராமங்களில் கோயில், குளம், உணவகம் மற்றும் பொது இடங்களில் செட்யூல்டு மக்களும் (SC) மற்ற சாதியினர் போன்று சமூக உறவில் கலந்து வாழும் வாழ்வுரிமையைத் தடுத்து ஒதுக்கி வைக்கும் தீண்டாமையாகும்.

ஆரம்ப காலகட்டத்தில் தீண்டாமையை செட்யூல்டு சமூகம் மீது திணிப்பதற்கு அன்றைய இந்து மதத் தமிழரசர்களின் வல்லாண்மை துணை செய்தது. அரசர்கள் வழி தைத்த அந்த முள்ளை, முள்ளால் எடுப்பது போன்று, இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தால் சட்டபூர்வமாக தீண்டாமை ஒழிக்கப்பட்டது. ஆனால் நடைமுறையில் அது தொடர்வதும், அதே நேரத்தில் எந்த அரசுகள் வந்தாலும், அரசு இயந்திரம் கண்டும் காணாதது போல் இருப்பதும் வாடிக்கையாகி விட்டது. அரசர்கள் காலத்திலும் இப்போது ஆளவந்தவர் களின் நீட்சியிலும் ஆதிக்க மனங்களில் மாற்ற மில்லை என்பதால் நிலைமை கிட்டத்தட்ட ஒன்றுதான்.



கிராமங்களில் சாலை ஓரத்திலுள்ள (Tea) 'டீ' கடைகளில் இரட்டை டம்ளர் முறையை ஒழிக்க முடியாத நிலைதான் தமிழகத்திலுள்ளது.

தமிழகக் காவல் துறையால் 'டீ'க் கடைக்காரரோடு போரிட முடியாத நெருக்கடியில், மத்திய ரிசர்வ் படைக்குத் தமிழக அரசு கோரிக்கை விடலாம். மத்திய அரசுப் பாட்டாலியன்களால் முடியாத பட்சத்தில் உலக ஐக்கிய நாட்டுக் கூட்டுப் படைக்கும் இந்திய அரசு கோரிக்கை வைக்கலாம் என நாம் சொன்னால், நமது ஜனநாயக எதிர் கட்சிகள் ஓரணியில் திரண்டு நின்று 'ஐக்கிய நாட்டுப் படை போதாது. உலகிலுள்ள அதிநவீன ஆயுதத்தால்தான் 'டீ' கடைக்காரரை சற்றேனும் அச்சுறுத்த முடியும்' என ஆர்ப்பாட்டம் செய்து உண்ணாவிரதம் இருந்தாலும் இருப்பார்கள்.

அறுபது ஆண்டு கால ஜனநாயக ஆட்சி நடந்த நாடாம்! அதிலும் புரட்சிகர எதிர்கட்சிகளும் உள்ள தேசமாம்!

ஆயிரம் ஆண்டுகள் அந்நியர் ஆட்சிகளால் அடிமைகளாய் ஆளப்பட்டவர்களுக்கு - அடுத்த வரின் அடிமைத்தனத்தை வலியுணர்ந்து அகற்ற போதிய அரசியல் தெரியாதுபோலும்.

அம்பேத்கர் பெயர் சொல்லும் எத்தனையோ கட்சிகளும், விடுதலை அமைப்புகளும் இருந்தும் இரட்டைக்குவளை பிரச்சினையை முன்நிறுத்தி ஆளும் அரசையும் மற்ற கட்சிகளையும் தீர்வு காணும்படி நிர்ப்பந்திக்க முடியாத காரணம் என்ன?

எஸ்.சி. சாதிஅடையாள அமைப்புகளில் அல்லாமல் பல்வேறு கட்சிகளிலும் அங்கம் வகிக்கும் எஸ்.சி. தலைவர்களும், தொண்டர்களும் அந்தந்த கட்சிகளில் வாதாடி இரட்டை டம்ளர் மற்றும் தீண்டாமை வடிவங்களை ஒழிக்கும்படி வலியுறுத்த முடியாத நிலை ஏன்?

ஆக, தீண்டாமை ஒழிந்த சமூகமாய் ஆகாதவரை அதிகம் படித்து ஆயிரம் உயர்பதவிகள் வகித்தாலும், அரசியல் அதிகாரப் பீடத்தில் அமர்ந்தாலும் தீண்டாமைக் கொடுமைக் குள்ளானவர்களுக்கு மற்ற சமூகங்களின் மத்தி யில் மரியாதை இருக்கப்போவதில்லை.

ஆப்பிரிக்காவிலிருந்து ஆடுமாடுகளைப் போன்று விலை பேசப்பட்டு, அமெரிக்காவில் அடிமை களாய் விற்கப்பட்டு, கொடிய அடக்குமுறைக்கு ஆளானவர்கள் கறுப்பின மக்கள்.

விலைக்கு வாங்கியவர் கொன்றாலும் அதைத் தட்டிக் கேட்பதற்குச் சட்டமும் இல்லாத அன்றைய நிலை.

கறுப்பர்கள் போராட ஆரம்பித்தனர். மனிதாபி மான உள்ளம் கொண்ட வெள்ளையர், அம் மக்களின் விடுதலைக் கருத்தாக்கங்களை உருவாக்கி உலகின் முன்னே எடுத்து வைத்தனர். நிற பேதம் கொண்ட வெள்ளையர், கறுப்பர் விடுதலைக்கு எதிர்ப்பாய்க் கிளம்பினர். விடுதலைக்கு ஆதரவானவர்கள் ஒருபுறம். கடும் எதிர்ப்பைக் காட்டியவர்கள் மறுபுறம். இந் நிலையில்தான் கறுப்பர்களின் விடுதலைப் பிரகடனத்தை ஆப்பிரகாம் லிங்கன் நாட்டிற்கும் அகிலத்திற்கும் அறிவித்தார். அங்கு சட்டம் சரியாக இயங்கியதால் அவர்கள் சமத்துவம் நோக்கி மேலெழுந்தனர். நூற்றி ஐம்பது ஆண்டுகளில் அவர்களின் எழுச்சியும், வெள்ளை நண்பர்களின் தொடர் துணை போராட்டங்களும் வெற்றியை ஈட்டித் தந்தன.

இந்திய அரசியல் சட்டத்தை இயற்றி ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேற்றி வரும்போது, ‘தீண்டாமை ஒழிந்தது’ எனச் சட்டம் நிறைவேறுகிறது.

அமெரிக்காவில் நிறவெறிக்கெதிரான சட்டம் வரும்போது எதிர்ப்புக் கிளம்பிற்று. ஆனால் இங்கோ ‘தீண்டாமை அனுசரிப்பது தண்டனைக் குரிய குற்றம்’ என்னும் தீர்மானம் ஒரு சிறு எதிர்ப்போ சலனமோ இல்லாமல் சட்டமானது.

இன்றோ, தீண்டாமை தொடர்வதை சலனமற்றுப் பார்த்துக்கொண்டு ஆட்சி மௌனம் காக்கிறது.

நியாயமற்ற மனிதர்கள் நிரம்பியதுதான் இந் நாடோ...? நியாயமற்றவற்றை வாழ்வியக்கமாகப் பேணுவதுதான் இந்திய மனமோ? வர்ணாசிரமத் தாக்கத்திற்கெதிரான சட்ட ஆட்சி என்பது ஆகப்பெரும் கனவுதானோ?

மறைந்த பிரதமர் இந்திரா காந்தியால் கொண்டு வரப்பட்ட ‘அவசரகால சட்டம்’ நடைமுறையில் இருந்த கால கட்டத்தில் - தீண்டாமை ஒதுங்கிப் பதுங்கியது - இரட்டை கிளாஸ் ஒற்றைக் கிளாஸ் ஆனது. தீண்டாமை ஒழிப்புப் பற்றி எந்த அறிவிப்பும் இல்லாமல் நிறைவேறியது. அவசர கால சட்டத்தை முழுமையாக ஆதரிப்பதல்ல நம் நோக்கம். சட்டத்தைக் கட்டாயமாக நடைமுறைப் படுத்தினால் தீண்டாமை ஒழியும் என்பதை அது காட்டியது. ஆனால் இந்திய ஜனநாயகஆட்சி- இந்து ஜனநாயக மனம்- நடைமுறையிலும் செய்நேர்த்தியிலும் தீண்டாமைக்கு ஆதரவாகவே சுவாசிக்கிறது, செயல்படுகிறது.

## தீண்டாமையின் இரண்டாவது கூறு:

உலகில் எங்குமே ஒரு தொழிலை ஒரு குறிப் பிட்ட சமூகம் மட்டுமே செய்யவேண்டுமென்ற கட்டாய நிலை இல்லை.

ஆனால் தமிழகக் கிராமங்களில் பிணம், செத்த மாடு புதைத்தல், பறை (தப்பு) அடித்தல் எனும் வேலையைக் கட்டாயமாக எஸ்.சி. மக்கள் செய்தே ஆகவேண்டும்.

சட்டப்படி யாரையும் கட்டாயப்படுத்தி எந்த ஒரு வேலையையும் செய்ய வைப்பது தண்டனைக் குரிய குற்றம் என்பதை யாவரும் அறிவர்.

அடிமை வேலைகளில் ஒன்றான பிணப் பறை அடிக்க தஞ்சை மாவட்டம் குருங்குளம் கிராமத்தைச் சேர்ந்த குருமூர்த்தி மறுக்கிறார். பொறுக்க முடியுமா சாதி ஆதிக்கத்தால்? குருமூர்த்தியின் இரண்டு கட்டைவிரலையும் வெட்டி, கண்ணாடிக் குடுவையில் காட்சிப் பொருளாக வைத்து - அவரையும் எஸ்.சி. மக்களையும் திடுக்கிட வைத்து- தீண்டாமை நிலை நிறுத்தப்படுகிறது.

பறை கொட்டவில்லை என்றால் பிணம் என்ன எழுந்தா வந்துவிடும். இதற்கே இந்த நிலை என்றால், பிணம் புதைக்க மறுத்து எஸ்.சி. மக்கள் போராடினால், ஊரே திரண்டு ஒன்றோடொன்று மோதி வெட்டுக்குத்துதான் மிஞ்சுகிறது.

இதை மாற்றி அமைக்க முடியாதா? ஏன் முடியாது? அறிவு ஜீவிகளே, அரசியல்வாதிகளே, மதவாதி களே, மனித உரிமை ஆர்வலர்களே, இது இந்நாட்டில் மட்டுமே வழக்கப்படுத்தப்பட்ட சதி.

## அதை உடைப்பது எவ்வாறு?

நகரங்களில் சுடுகாட்டு வேலை என்பது நகராட்சி வேலையாக உள்ளது போன்று, கிராமங்களிலும் கிராம ஊராட்சி மன்ற வேலையாக நடைமுறைப் படுத்தப்பட வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திலும் ஆண்டிற்கு ஒருமுறை

கூட இறப்பு ஏற்பட வாய்ப்பில்லை. கிராமங்களில் மக்கள் தொகை குறைவாக இருப்பதால் இறப்பு விகிதமும் குறைவாக இருக்கும். இவ்வாறான சூழ்நிலையில் ஊருக்கு ஊர் அவ்வேலையைச் செய்ய மாதச் சம்பளத்தில் ஆட்களை நியமனம் செய்யத் தேவையில்லை.

ஓர் ஊராட்சி மன்றத்திற்கு உட்பட்ட கிராமங்கள் சுமார் பதினைந்திலிருந்து இருபதுக்கு மிகா. ஊராட்சி மன்றம் மூலமாக ஓர் ஊராட்சி சுடுகாட்டிற்கு வேலை செய்ய, நல்ல சம்பளத் துடன் கூடிய முழுநேரத் தொழிலாளியாக மூன்று நபர்களை நியமனம் செய்ய வேண்டும்.

இப்போது, அந்த வேலை எஸ்.சி. மக்கள் செய்த வேலை என்ற நிலையிலிருந்து ஊராட்சி மன்ற (அரசாங்கம்) வேலையாக மாற்றப்படுகிறது. மேற்சொன்ன வேலையைச் செய்ய, ஊராட்சி பொது அறிவிப்புச் செய்து, வேலை வாய்ப்பு மனு பெற்று விருப்பப்பட்ட யாரை வேண்டுமானாலும் நியமிக்க வேண்டும். அதாவது, எல்லாச் சாதியின ருக்கும் அவ்வேலை பொதுமைப் படுத்தப்பட்டு பணியாளர்கள் நியமிக்கப்பட வேண்டும்.

ஒரு கிராமத்தில் மாடோ மனிதரோ இறந்தால், ஊராட்சி அலுவலகத்திற்குத் தெரிவித்து, அடக்கம் செய்யப் பணம் கட்டி, உரிய ரசீது பெற்றவுடன், ஊராட்சி மன்றப் பணியாளர் வந்து நல்லடக்கம் செய்வார்.

எல்லா நாட்களிலும் சுடுகாட்டு வேலை இருக்கப் போவதில்லை. ஆகவே ஊராட்சிமன்ற அலுவலக வேலையை மீதி நாட்களுக்கு அவர்களது கல்வித்தகுதிக்கு ஏற்ப வழங்க வேண்டும். இதை நடைமுறைப்படுத்தினால் எஸ்.சி. சமூகத்தின் மறைமுகக் கட்டாய வேலை சட்டபூர்வமாக மாற்றப்பட்டுவிடும்.

இக்கருத்தின் செயலாக்கம் தமிழக சட்ட மன்றத்தில் விவாதிக்கப்பட்டு அதற்கான சட்டம் இயற்றி, அதை ஊராட்சி மன்றங்கள் நிறை வேற்றும்போதுதான் செட்யூல்டு மக்களுக்கு விடுதலை கிடைக்கும்.

## சாதி ஒழிப்பா?
## இந்து மதச் சீர்திருத்தமா?

தீண்டாமை ஒழிப்புக்குச் சட்டம் உள்ளது. ஆனால் சாதியை ஒழிக்க வழி என்ன இருக்கிறது? சாதியே ஏற்றத் தாழ்வை நிர்ணயிக்கும் முக்கிய அளவு கோலைக் கொண்டுள்ளது. சாதியக் கட்டுமானம் இந்து மதத்தோடு இரண்டறப் பிண்ணப்பட் டுள்ளது. சாதியை அசைக்கப் பார்ப்பது இந்து மதத்தைச் சாய்க்கப் பார்ப்பதற்குச் சமமாகும்.

சீர்திருத்தத்தாலோ மனமாற்றத்தாலோ சாதிக் கனல் சற்று குறையுமே தவிர ஒழியாது என்பது காலம் கண்டறிந்த உண்மை.

எப்பொழுது சாதி ஒழிய வேண்டும் என்ற எண்ணம் உதயமாயிற்று? தீண்டாமையால் பாதிக்கப் பட்டோர் அடித்தளத்தில் அழுத்தப்பட்டு மூச்சுத் திணறலால் சற்றுத் திமிறி அசைந்தபோது, சாதி அடுக்கு பிரமிடு சற்று குலுங்கிய நிலையில் தோன்றியதுதான் சாதி ஒழிப்பு என்பது.

எஸ்.சி. மக்களுக்குச் சாதி ஒழிப்பு என்பது சாதியைச் சுமந்துள்ள இந்து மதத்தைத் துறப்பது என்பதுதான். அதுதான் உண்மை.



சீர்திருத்தத்தால் உண்மையாகவே சாதி ஒழியும் என்று வைத்துக்கொள்வோம். ஆனால் அதன் சடங்கு சம்பிரதாயங்கள் தொடரத்தானே செய்யும்? அங்குதானே சாதியின் சல்லி வேர்கள் அறம் பேசி எழுகின்றன? அதுதானே சாதிக்கான நியாயம்? அங்கிருந்து கொண்டு சீர்திருத்தம் பேசுவது - ராசாராம் மோகன்ராயின் 'சதி' ஒழிப்பிலிருந்து தொடங்கி இன்று வரை வந்து, மீண்டும் ஒரு வட்டமடித்து தொடர்ந்து சாதி பேணிக்கொண்டு இருப்பது போல்தான்.

நாத்திகக் கருத்தாக்கத்தில் எல்லா மதங்களோடும் இந்து மதமும் ஒதுக்கப்பட்டு விடும். உலகம் பூராவும் நாத்திகம் பேசப்படுகிறது. ஆனால் எங்கும் ஒரு அமைப்பாக உருவாக்கப்பட்டு கூட்டுச் சமூகமாக அது இயங்கவில்லை. நாத்திகச் சமூகப் பயிர் தழைக்க உரமிட்ட நிலம் இல்லை. அவ்வாறே இந்தியாவிலும் தமிழகத்திலும் எனலாம்.

கலப்பு மணம் ஒன்றே சாதியத்தைச் சற்றே அசைக்கவல்ல செயலாகும். மற்றய சீர்திருத்தம் எல்லாம் பழம் போக்கோடு ஒத்திசைந்து போகும் உடன்படிக்கையே.

இந்துமத ஏற்றத்தாழ்வுக் கொள்கைகளால் தொடர்ந்து துயருற்ற எஸ்.சி. மக்களையும், மற்றும் பார்ப்பனிய ஆதிக்க இந்து மதத்தை எதிர்ப் பவர்களும், கடவுளின் பெயரால் மனித சுதந்திரத் தைக் கட்டுப்படுத்தும் மதத்தை விரும்பாதவர் களும், பௌத்தக் கொள்கையில் பற்றுள்ளம் கொண்ட யாவரும் பௌத்தத்திற்கு வாருங்கள் என்று அழைத்து 1956ஆம் ஆண்டு பௌத்தம் ஏற்றார் அண்ணல் அம்பேத்கர்.

புத்தர் போதித்த பௌத்தத்தில் கடவுளும், கடவுள் கொள்கைகளும் இல்லை. ஆத்மா, நரகம், சொர்க்கம் என்பதும் இல்லை. பொதுவில் மக்களை ஒன்றிணைத்து நல்வழி காட்டும் மார்க்கமே பௌத்தமாகும்.

## இந்து மதமா?... பார்ப்பனியமா?

உலகப் படைப்புகள் அனைத்தும் கடவுளுக்குள் அடக்கம், கடவுள் பார்ப்பன மந்திரத்திற்குள் அடக்கம் என்பதை அடிப்படை அலகாகக் கொண்டு வேத மதக் கருத்துக்களைப் பரப்பினர். அவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டு கடவுள் வழிபாடு முதல் கலியாணம் கருமாதி வரை வாழ் வியல் நடைமுறையாய் பின்பற்றுவது பார்ப்பனர் மட்டும் அல்ல, திராவிடத் தமிழர்களும்தான்.

இதிலென்ன பார்ப்பான் - திராவிடன் வேற்றுமை - இருவரையும் உள்ளடக்கி ஒரே பெயராக்கி இந்துமதம் என்ற பெயரில் சட்டமாக்கியது ஆங்கில அரசு.

கொடுமையான மனுஸ்மிருதிச் சட்டத்தை அப்படியே நிறைவேற்றிய தமிழ் அரசர்கள்தானே இங்கு ஆட்டிப்படைத்தனர்?

விஞ்சியதோர் கொடுமை யாதெனின், வீழ்ச்சி யுற்றிருந்த இந்து மதத்தைக் காப்பாற்ற, திருஞான சம்பந்தன் தூண்டிவிட, சமத்துவத்தைப் போதித்த தமிழ்ச் சமணமதத் துறவிகளோடு எட்டாயிரம் சமணம் சார்ந்த தமிழர்களை கூன்பாண்டியன் எனும் தமிழ் அரசன்தானே கழுவேற்றிக் கொன்றான்!

அரசர்கள் கொன்று குவித்தபின், இந்து மதம் நின்று நிலைக்க பக்திப் பாடல்களாய்த் திருநாவுக்கரசர் எனும் அப்பர் தேவாரத்தையும், மாணிக்கவாசகர் திருவாசகத்தையும், கம்பர் ராமாயணத்தையும், சேக்கிழார் பெரிய புராணத் தையும் மற்றும் பலரும் பற்பல சமய நூல் களையும் இயற்றி மக்களிடையே பரப்புவதை மகேசன் தொண்டாக மேற்கொண்டனர்.

ஆண்ட தமிழ் அரசர்களோ விண் முட்டும் கோபுரங்களைக் கொண்ட கோயில்களை கட்டி, நிமிர்ந்து பார்த்த மாத்திரத்திலேயே பக்திமான் களைப் பரவசப்படுத்தி இந்து மதத்திற்குள் இறுக்கமாகக் கட்டி வைத்தனர்.

அவ்வாறான கோயில்களுள் சில, தஞ்சை பெரிய கோயில், திருவரங்கக் கோயில், சிதம்பரம் கோயில், மதுரைக் கோயில், ராமேஸ்வரக் கோயில் மற்றும் அறுபடை முருகன் கோயில்கள் போன்ற வையாகும். அத்துடன்கோயில் நிர்வாகத்துக்கென ஆயிரக்கணக்கான நிலக்கொடைகளும் வழங்கப் பட்டன.

இந்து மதத்தை மேலோங்கச் செய்ய திராவிடத் தமிழர்கள் மடங்களை ஏற்படுத்தி, மடாதிபதி களாய் ஆனார்கள். அவற்றுள் சில - திருப்பனந் தாள் மடம், மதுரை ஆதீன மடம், குன்றக்குடி ஆதீன மடம், போன்ற பிறவும் ஏற்படுத்தி, தமிழர்களை இந்து மதக் கட்டுக்குள் வைத்திருக் கும் சாதனை புரிந்துள்ளனர்.

இவ்வாறு திராவிடத் தமிழ் அரசர்கள், புலவர்கள், மடாதிபதிகள் என கட்டுக்கோப்பாய் இயங்கி இந்து மதத்தை வளர்த்தெடுத்திருக்கிறார்கள்.

ஆக, இந்து மதத்திற்கு உழைத்தவர்களை விட்டு விட்டு பிராமணியம் ஒன்றை மட்டும் சுட்டுவதால் மதத்திற்குத் திராவிடத் தமிழர்களின் பங்களிப்பை - அதனால் கெட்டிப்பட்ட வன்கொடுமையை மென்மைப்படுத்திவிட முடியாது.

ஆகவே, இந்து மதத்தைப் போற்றியும், பாதிக்கப் பட்டோரைத் தூற்றியும் எழுந்த பார்ப்பனர் + திராவிடத் தமிழர் இருவரையும் ஒருநிலையில் வைத்து எழும் இந்துக்கள், இந்துமதம் என்னும் சுட்டலை எதிர்த்தே எழுதவும் பேசவும் வேண்டும்.

# மலேசியத் தமிழர் எழுச்சி ஊடும் பாவும்



■ காஜா மடா ஹமீது

உலக வரலாற்றைக் கிமு, கிபி எனப் பகுப்பதைப்போல், நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் மலேசிய இந்திய வமிசா வளியினரின் வாழ்வியல் வரலாறு வருங்காலத்தில் இன்ராப்ஃ பிற்கு முன், இன்ராஃபிற்குப் பின், அதாவது இமு, இபி என்று பகுத்துப் பார்க்கப்படுவது தவிர்க்க முடியாததாகிவிட்டது.

உலகின் பிற பகுதிகளில் நிகழ்ந்ததைப்போலவே மலேசியாவிலும் இடதுசாரிகள் செய்திருக்கவேண்டிய, ஆனால் செய்யாமல் போன மாற்றத்தை தத்துவம் பயிலாத சாமான்ய வக்கீல்களும் பிறரும் 25-11-2007இல் நிகழ்த்திக் காட்டினார்கள்.

தமிழ்நாட்டு முசுலிம்களில் பெரும்பாலோர் நவம்பர் நிகழ்வை மதப்போராட்டமாகவே நோக்குகின்றார்கள் என்ற இவ்விதழாசிரி யரின் கருத்தோடு, தமிழகத்திலிருந்து வந்து கோலாலம்பூரில் இமாமாக மார்க்கப் பணி செய்வோருடனான உரையாடலும் ஒத்துப்போவது ஒரு நகைமுரண்தான்.

தாங்கள் மூன்றாந்தர குடிமக்களாக நடத்தப்படுகிறோம் என்றும் தங்கள் நலனில் அரசு அக்கறை கொள்ளவில்லை என்பதுமான எண்ணங்கள் மலேசியத் தமிழர்கள் மத்தியில் செழித்ததற்கு அரசுதான் காரணம்.

ஓய்வு பெற்ற டாக்டர் மகாதீர் தலைமையிலாகட்டும், இன்றைய மாண்புமிகு அப்துல்லாவின் நிர்வாகத்திலாகட்டும், சாமிவேலு என்ற கங்காணியின் திறமைதான் பெரிதாகக் கருதப்பட்டதே யொழிய இந்திய மக்களின் தேவைகள் அல்ல. நவம்பர் பேரணி அரசாங்கத்தை உலுக்கி கங்காணியின் மீதான நம்பகத்தன்மையை கேள்விக்குள்ளாக்கியது.

மலேசியத் தமிழர்களின் குறைகளின் வரலாற்றை மைக்கா ஓல்டிங்ஸ் (MAIKA HOLDINGS) இலிருந்து தொடங்குவது பொருத்தமா யிருக்கும் என்று படுகிறது.

மைக்கா ஓல்டிங்சு (MAIKA HOLDINGS) சிக்கல் மகாபாரத பாஞ்சாலியின் புடவைவைப்போல. அவ்வப்போது வெடித்தெழுவதும் பின்னர் நீறு பூத்த நெருப்பாகிப் போவதும் கடந்த கால நிகழ்வுகள். அவற்றின் விளைவுகளை இன்ராஃப் பேரணி நன்கு வெளிப்படுத்தியது.

மைக்கா ஓல்டிங்சு நிறுவனம் ஒரு முதலீட்டு மற்றும் சொத்துடைமை நிர்வாக வர்த்தகத்தை அடிப்படையாகக் கொண்டு செப்தம்பர் 13, 1982இல் தொடங்கப்பட்டது.

இந்தியச் சமூகத்திடமிருந்து வசூலிக்கப்பட்ட 10 கோடியே 60 இலக்கத்திற்கு 1984ஆம் ஆண்டு வாக்கில் அதன் 66,000 பங்கு தாரர்களுக்கு பங்குச் சான்றிதழ் வழங்கப்பட்டன.

மக்கள் ஓசை நாளேட்டில் அதன் ஆசிரியர் திரு இராஜன் அவர்கள் எழுதியிருந்ததைப்போல, இனி எப்போதைக்கும் நிகழ்த்திக் காட்ட முடியாத அதிசயமாக, புறக்கணிக்கப் பட்டவர்கள் அனை வரும் ஒருதாய் மக்களாக மாறிவிட்டது போல் உணர்ந்து, பல்லாயிரக்கணக்கில் பங்கெடுத்த வரலாறு அது.

1979ஆம் ஆண்டு, மாண்புமிகு மாணிக்கவாசகம் அவர்கள் திடீரென்று காலமாக, அதுவரை மலேசிய இந்தியர் காங்கிரசின் (மஇகா) துணைத்தலைவராக இருந்த மாண்புமிகு சாமிவேலு, கட்சியின் தேசியத்தலைவராகிறார். அப்போதுதான், அதாவது 13.09.1982இல் மலேசிய இந்திய சமுதாயம் பொருளாதாரத்தில் உயர்வு பெற வேண்டும் என்ற ஒரு கருத்து முன்வைக்கப்பட்டு, மைக்கா ஓல்டிங்சு லிமிடெட் என்ற ஒரு முதலீட்டு நிறுவனத்தை மஇகா ஆரம்பிக்கிறது.

ஒரு பங்கு ஒரு வெள்ளி என்ற நிலையில் 100 மில்லியன் பங்குகளை விற்பது என முடிவெடுக்கப்படுகிறது. அந்தக் காலகட்டத்தில் இத்தகவல் கிட்டத்தட்ட ஒரு மின்சக்தியை உடலுக்குள் பாய்ச்சுவது போல இந்திய சமுதாயத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரிடமும் பெரிய பரவசத்தை ஏற்படுத்தியது. இந்திய சமுதாயம் எதிர்காலத்தில் ஏற்றம் பெற வேண்டுமானால், இப்படி ஒரு திட்டம் அவசியமே என்று எல்லோராலும் உணரப்பட்டது.

ஆகவே தோட்டப் பாட்டாளி மக்கள், கிராம மக்கள், நகர்ப்புற இந்தியர்கள், படித்தவர்கள், ஆசிரியர்கள், பட்டதாரிகள், விவசாயிகள், உயர்ந்த பொறுப்பில் இருந்தவர்கள், வணிகர்கள், தொழிலதிபர்கள் என சமுதாயத்தின் எல்லாத் தரப்பு மக்களும் இந்தப் பங்குகளை வாங்கத் திரண்டனர்.

வசதியுள்ளவர்கள் தங்கள் சேமிப்பைக் கொண்டு பங்குகளை வாங்க, வசதியற்றவர்கள் தங்களுக்காகவும் தங்கள் பிள்ளை களுக்காகவும் கடினப்பட்டு, சீட்டுக் கட்டி சேமித்து வாங்கிய நகைகளை அடகுக் கடையில் வைத்து பங்குகளை வாங்கினார் கள். தோட்டப் பாட்டாளிகளும் கிராமப்புற மக்களும் தாங்கள் ஆசையாக வளர்த்து வந்த ஆடுமாடுகளைக்கூட விற்று அதிலிருந்து பெற்ற பணத்தை இந்த முதலீட்டு நிறுவனத்தில் செலுத்தினர்.

ஏற்றம் பெறுவோம் என்ற ஒட்டுமொத்த எதிர்பார்ப்பு, புதிய வாக்குறுதிகளால் ஏற்பட்ட நம்பிக்கை, 1979இல் ஏற்பட்ட மஇகா வின் புதிய தலைமைத்துவம்- இப்படி எல்லாமே இணைந்து இந்தியர்கள் 100 மில்லியன் அல்ல அதையும் தாண்டி 125 மில்லியன் பங்குகளை வாங்கினர் என்பது வரலாறு.

இந்திய சமுதாயத்தால் இதையும் சாதிக்க முடியுமா? என்று மற்ற இனங்கள் வியக்கும் வகையில் இந்த நாட்டில் நடந்த ஒரு பொருளாதார மறுமலர்ச்சி என்று இதனைக் குறிப்பிடலாம்.

இந்த 125 மில்லியன் பங்குகளை தனிநபர்கள் ரொக்கமாக வாங்கிய தோடு, அப்போது உருவாகியிருந்த பல கூட்டுறவுகள், இந்தியர்

சார்ந்த அமைப்புகள், சமூக இயக்கங்கள் அனைத்தும் இதற்குப் பக்கபலமாக இருந்து பங்குகள் வாங்கிப் பெருமை சேர்த்தன.

ஒரு முதலீட்டு நிறுவனத்தின் மூலதனத்திற்காக சமுதாயம் தனது சேமிப்பை இழந்தது. வருமானம் ஈட்டும் தனது மூலதனம் பலவற்றை இழந்தது. உடைமைகளை இழந்தது. ஆனால், இத்தனை இழப்புகளையும் ஏற்றுக்கொண்ட இந்திய சமுதாயம் ஒரே ஒரு நம்பிக்கையைத்தான் இந்த மைக்கா நிறுவனத்தின் மீது வைத்தது. அதாவது, வருங்காலம் நமக்கு வசந்த காலம், இனி நமக்கு நடக்கப்போவன யாவும் நல்லவையே என்று நம்பியது.

அந்த நம்பிக்கை கானல் நீரான கதையோ மிகச் சோகமானது.

இன்ட்ராபின் எழுச்சியையும் சாமிவேலுவின் வீழ்ச்சியையும் இதன் தொடர்ச்சியாகத்தான் பார்க்க வேண்டும்.

மைக்காவின் நிறுவனராக சாமிவேலு விளங்க, அதன் நிறுவன உறுப்பினர்களாக சி.சுப்ரமணியம், கர்னயில் சிங் நிஜார், மகா லிங்கம் ஆகியோர் ஆரம்பத்தில் இருந்தனர். நிறுவனம் உருவான பின்னர் படிப்படியாகத் தலைவரின் விருப்பத்தில் அல்லது அவரது கட்டுப்பாட்டில் அவருக்கு வேண்டியவர்கள் மட்டும் மைக்கா பொறுப்புகளில் இடம் பெறுகின்ற காலம் உருவானது.

என்ன செய்கிறார்கள் எதைச் செய்கிறார்கள் என யாருக்கும் தெரியாது. காதும் காதும் வைத்தாற்போல மைக்கா மூலமாக முதலீட்டுத் திட்டங்கள் அரங்கேற்றப்பட்டன. தலைவரின் விருப்பத்தின் பேரில் மைக்காவுக்குப் பதவி நியமனங்ள் நடந்தன. இன்றைய நிலவரப்படி அதன் தலைவராக ரசிட் மானாப் (மலாய்க்காரர்) விளங்க, அதன் முதல் தலைமை நிலைய அதிகாரியாக சாமிவேலுவின் தவப் புதல்வர் வேள்பாரி விளங்கி வருகிறார்.

நியமனம் செய்யப்பட்ட யாருக்கும் வர்த்தக அனுபவமோ ஒரு முதலீட்டு நிறுவனத்தை வழிநடத்தும் வாணிபத் தகுதியோ கிடையாது. இதனால் இவர்கள் தொடங்கிய 25க்கும் மேற்பட்ட துணை நிறுவனங்களின் மூலம் செய்யப்பட்ட எல்லாமே மூடு விழா கண்டன.

அப்பாவி மக்கள் சேர்த்துக் கொடுத்ததை ஊறுகாய் கம்பெனி, டேப் கம்பெனி, செங்கல் கம்பெனி, புத்தகக் கம்பெனி என்று உருப்படியே இல்லாத திட்டங்களில் முதலீடு செய்து பணத்தைப் பாழடித்தார்கள்.

மஇகா தலைமையகத்திற்கு அருகில் 26 மாடி ஓட்டலைக் கட்டப் போகிறேன் என்று சாமிவேலு அறிவித்து 38 ஆயிரம் சதுர அடி நிலத்தை வாங்க, அவர் நடத்திய சதிராட்டம் ஆகக் கீழ்த்தரமானது..

ஓட்டல் கட்ட அடிக்கல் நாட்டப்பட்டது என்னவோ உண்மை. ஆனால் 23 ஆண்டுகள் கடந்தும் இன்னும் அந்த இடத்தில் ஒரு செங்கல் கூட எழவில்லை. என்றாலும், அதே நிலத்தின் பெயரைச் சொல்லி எம்யூஎஃப்பி (MUFB) எனப்படும் நிறுவனத்திடமிருந்து 35 லட்சம் வெள்ளி கடன்தான் வாங்கப்பட்டது. அந்தக் கடனைக் கட்ட மைக்காவிலிருந்து மொத்தம் 52 லட்சத்து 46 ஆயிரம் வெள்ளி வழங்கப்பட்டிருக்கிறது. மஇகா 1 கோடி வெள்ளியை வழங்கியிருக்கிறது. இவ்வளவு பணம் பறிபோன நிலையில் அந்தக் கட்டடமும் எழவில்லை. அந்த நிலம் என்ன ஆனது என்ற விபரமும் இதுவரை சமுதாயத்திற்குச் சொல்லப்பட வில்லை.

இந்தியர்கள் நம்பிக் கொடுத்த பணத்தை வைத்து முறையாக நிர்வாகம் செய்ய வேண்டிய ஒரு மைக்கா தலைவர் அந்தப் பணிமனையில் பணிபுரியும் சில பெண்களிடம் நடத்திய காமக் களியாட்டங்களைக் கண்டு இந்தச் சமுதாயம் வெந்து நொந்து வேதனையின் உச்சத்திற்கே போனது. அதுதான் சாமிவேலுவின் தவறான தலைமையின் உச்ச முன்னுதாரணம்.

சரி, சமுதாயம் அள்ளித் தந்த பணத்தைத்தான் ஒழுங்காக நிர்வகித்து அதை உருப்படியாக செலவழிக்கவில்லை. ஆனால், அரசாங்கம் அள்ளித் தந்த கோடிக்கணக்கான பங்குப் பணத்தை யாவது இவர்கள் அதன் மேன்மைக்கு பயன்படுத்தினார்களா என்றால் அதற்கும் பதில் பூஜ்ஜியம்தான்.

மஇகாவின் அப்போதைய பொது உறவு அல்லது மக்கள் தொடர்புக் குழுவின் தலைவரான பாராட் மணியம் என்ற சுப்ரமணியம் 19.03.1994இல் செய்தியாளர் கூட்டத்தில் ‘‘சாமி வேலு ஒரு திருடர். அவர் இந்தியச் சமூகத்திடமிருந்து பங்குகளைத் (டெலிகோம்) திருடினார்,’’ என்று பட்டவர்த்தனமாகக் கூறினார்.

உடனே அப்போது மைக்காவின் தலைவராக இருந்த திரு ஜி. பாசமாணிக்கம், மைக்காவுக்கு ஒரு கோடியே ஐம்பது லட்சம் வெள்ளி தணிக்கை செய்யப்படாத லாபம் கிடைத்திருப்பதாகவும் அதன் உறுப்பினர்கள் ஐந்து விழுக்காட்டிற்கும் மேலான லாப ஈவை எதிர்பார்க்கலாம் என்றும் அறிவித்தார். கூடவே 64,000 முதலீட்டாளர்களுக்கான வெள்ளி 33 லட்சம் லாப ஈவு மீண்டும் மைக்கா நிறுவனத்தின் முதலீட்டு நடவடிக்கைகளுக்குப் பயன் படுத்தப்பட்டு வர்த்தக நடவடிக்கைகள் விரிவுபடுத்தப் படும் என்றும் அறிவித்தார்.

இரண்டாம் முறை 2003இல் புகைச்சல் ஏற்பட்டபோது முந்தையவை சம்பந்தமான உண்மை நிலை என்ன என்பது பற்றிக் காவல் துறையினரும், ஏசிஏ-வும் விசாரிக்க வேண்டுமென மைக்கா பங்குதாரர்களும், அகில மலேசிய இந்தியர் முன்னேற்ற முன்னணி (ஐபிஎஃப்)யினரும் நாடு தழுவிய அளவில் போலீஸ் நிலையங்களில் புகார் செய்தனர்.

ஒரு சான்றாக, சா ஆலம் ராஜா என்றழைக்கப்படும் கே இராமசாமி, தாம் 1984ஆம் ஆண்டு மைக்காவில் 2,500 வெள்ளியை முதலீடு செய்திருந்ததாகவும், அம்முதலீட்டுக்கான போனஸ் பத்திரத்தை 1997இல் பெற்றதாகவும் கூறியதோடு, தொடர்ந்து ‘‘மேலும், இன்றுவரை நாம் மைக்காவிடமிருந்து சல்லிக்காசையும் பெற வில்லை. ஆகவே, சாமிவேலு எமது முதலீட்டுத் தொகையோடு இருபது ஆண்டுகளுக்கு எட்டு சதவீதம் எனும் விகிதத்தில் வட்டியுடன் திருப்பித் தர வேண்டும்,’’ என்று கூறினார்.

அப்போது, சாமிவேலு தனது பத்திரிக்கை செயலாளர் சிவபாலன் வழியாக, ‘100 மில்லியன் முலீட்டில் தொடங்கப்பட்ட மைக்கா நிறுவனம் 320 மில்லியன் வெள்ளி மதிப்புள்ள சொத்துகளைக் கொண்டிருப்பதாகவும், அவற்றை அழிப்பதற்கு மேற்கொள்ளப் படும் எவ்வகை முயற்சியும் சட்டத்தின் வழி கையாளப்படும்’ என்றும் எச்சரித்தார். ஆனால் இந்தப் பொய் சாமிவேலுவின் திருகுதாளங்களில் ஒன்றுதானே தவிர வேறில்லை.

‘‘மைக்கா ஓல்டிங்சு முடிந்துபோன விவகாரம். பழைய குப்பையைக் கிளறாதீர்கள்,’’ என்று கூறியிருந்த மஇகாவின் உதவித் தலைவரும், எம்பியுமான வீரசிங்கத்திற்கு, மைக்கா பங்குதாரரான காஜாங்கைச் சேர்ந்த திரு எஸ்.இராமசாமி,

‘‘அப்படியானால் மைக்கா பணத்தை முடித்து விட்டீர்களா? குப்பையில் போட்டது உண்மைதானா? உங்கள் தலைவர் மாட்ரிட் ஸ்பெய்னிலிருந்து முப்பத்திரண்டு கோடி வெள்ளி மதிப்புள்ள சொத்துக்களை மைக்கா கொண்டுள்ளதாகக் கூறியுள்ளாரே. இவ்வளவு சொத்துக்களை வைத்துக் கொண்டு பங்கு வாங்கிய உறுப்பினர்களுக்கு என்ன செய்துள்ளீர்கள்? ஏன் டிவிடென்ட் கொடுக்கவில்லை? பிரச்சினை என்று வந்தவுடன் கோடி கோடியாய்ப் பேசுகின்றீர்கள், இல்லாவிட்டால் அதைப்பற்றியே மூச்சு விடுவதில்லையே, ஏன்? எங்கள் பணம் என்ன ஆனது? அதற்கு பதில் சொல்லுங்கள்,’’ என்று கேட்டிருந்தார்.

இதன் உச்சகட்டமாக, ‘இந்திய சமுதாயத்தில் மறுமலர்ச்சியை ஏற்படுத்த, சாமியின் இழிவுப் பேச்சுக்கு முடிவு கட்ட ஓரணியாய், ஒரே சக்தியாய்த் திரளுங்கள்!’ என்ற தலைப்பில் ஐபிஎஃப் தேசியத் தலைவர் எம்.ஜி.பண்டிதனின் அழைப்பறிக்கையை (17.11.2003) மலேசிய நண்பன் வெளியிட்டது.

இன்றல்ல, நேற்றல்ல, கடந்த 24 ஆண்டுகளாக இப்படி வாய்ச் சவடால் அடித்தே சமுதாயத்தை ஊமையாக்கியவர் சாமிவேலு.

‘‘இவரது இந்த அடாவடிப் பேச்சுகளையும் மக்களைக் கொத்தடிமை

களாக நடத்துகின்ற போக்கையும் சூடு சொரணையுள்ள எந்த வொரு தமிழனாலும் பொறுத்துக் கொள்ள முடியாது. 24 ஆண்டு கள் அமைச்சராக இருந்து சமுதாயத்தைப் பொருளாதாரத்தில் தூக்கி நிறுத்துகிறேன் என்று கூறி, ஏழை அப்பாவி மக்களிடம் வசூலித்த 106 மில்லியன் மாயமாய் மறைந்து போன கதையை இந்த நாடே அறியும்.

''சமுதாயத்திற்காக அரசாங்கம் வழங்கிய டெலிகோம் பங்கு களை 2 வெள்ளி கம்பெனிக்கு (வெறும் இரண்டு வெள்ளியை மூலதனமாய்க் கொண்டு தொடங்கப்பட்ட பினாமி கம்பெனி) திசை மாற்றி அப்படியே அந்தப் பங்குகளைக் காணாமல் போகச் செய்த சம்பவங்களையும் இந்த ஏழைச் சமுதாயம் பார்த்துக் கொண்டு எதுவும் கேட்க முடியாமல் வாய்மூடி இருக்கிறது. பணம் போட்டவர்கள் விளக்கம் கேட்டால் குண்டர்களை வைத்து அடித்து மிரட்டுவது, எகத்தாளம் பேசுவது, ஏளனம் செய்வது சாமிவேலுவின் வாடிக்கையாகிவிட்டது.

''சாமிவேலு இந்திய சமுதாயத்திற்குத் தொடர்ந்து தலைவராக நீடித்தால் சமுதாயம் சீரழிந்து சின்னாபின்னமாகிவிடும். அவருக்கு எதிராக ஒன்றுபட்ட சக்தியாக எனதருமைத் தொண்டர்கள் ஓரணி யில் திரள வேண்டிய நேரம் வந்துவிட்டது.

''இந்திய சமுதாயத்திற்கு விடிவு காலம் ஏற்பட, புதிய நம்பிக்கை ஏற்பட, புதிய தலைமைத்துவம் ஏற்பட, நீதி கேட்கும் போராட் டத்தில் நாடு தழுவிய நிலையிலுள்ள ஆயிரமாயிரம் தொண்டர் களும் என் உடன் பிறப்புகளும் ஒரே சக்தியாக முழங்க முன் வருமாறு அழைக்கிறேன்.

''இது வேடிக்கை பார்க்கும் நேரமல்ல. அது விவேகமும் அல்ல. நாம் ஏழைகள்தான். ஆனால் கோழைகள் அல்ல. நம்மைக் கோழைகளாக நினைத்து தமது வாய்க்கு வந்தபடியெல்லாம் இழித்தும் பழித்தும் பேசுகின்ற சாமிவேலுவின் பேச்சுகளை மானம் மரியாதையுள்ள யாரும் பொறுத்துக்கொள்ள முடியாது.

''நமக்கிடையில் இதற்கு முன்பு சிற்சில கோபதாபங்கள் இருந் திருக்கலாம். கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். அதையெல்லாம் மறந்துவிட்டு இந்திய சமுதாயத்தை ஒரு புதிய பாதைக்கு இட்டுச் செல்லும் மறுமலர்ச்சிக்கு இன்றே தன்னை அர்ப்பணித்துக்கொண்டு என் தொண்டர்கள், என் தம்பிகள், என் உடன்பிறப்புகள் அனை வரும் எழ வேண்டுமென்று அழைக்கிறேன்.''

இப்படி வீர முழக்கமிட்ட அதே பண்டிதன், மீண்டும் சாமிவேலு வுடன் சேர்ந்துகொண்டு, நவம்பர் பேரணியின் தாக்கங்கள் பொதுத் தேர்தலோடு ஒன்றுமில்லாமல் ஆகிவிடும் என்று ஆருடம் கூறிய தோடு, இன்று இவ்வுலகத்தை விட்டே பிரிந்தும் விட்டார்.

இவ்வளவு நடந்த பின்னும் அரசாங்கம் அமைச்சர் சாமிவேலு வுக்கு ஆதரவாக அமைதி காத்ததே தவிர, நாட்டு மக்களான பங்குதாரர்களின் நலன் குறித்து அக்கறை கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

முந்தைய பிரதமரின் காலத்தில் அரசாங்கம் அள்ளித் தந்தவை களுக்கு முறையான கணக்குகள் இல்லை. ஏன், இந்திய இளைஞர் களின் குற்றச் செயல் ஈடுபாடுகளைக் குறைப்பதற்காக அண்மை யில் அரசாங்கம் ஒதுக்கிய நிதியில் ஆரம்பிக்கப்பட்டதுதான் ''சமூக வியூக வாரியம்''. இதன் கணக்கு வழங்குகள் என்ன? என்பது சமுதாயத்துக்குத் தெரியாது என்பது மட்டுமல்ல அதனால் ஏற்பட்ட தீர்வும் சொல்லும்படி இல்லை.

அதிகாரத்தில் உள்ளவர்கள் செய்ய முடியாததை நவம்பர் 25 பேரணி ஏற்பாட்டாளர்கள் சாதித்தார்கள் என்பதனை எண்ணும் போது ஆனந்தக் கண்ணீர் அருவியாகின்றது. ஒரு முப்பது ஆண்டுகளுக்கு முன் இப்படியொரு விழிப்பு ஏற்பட்டிருந்தால் எம்மினம் எத்தகைய ஆச்சரியங்களை அறுவடை செய்திருக்கும்! திருமணம், இறப்பு, குழந்தை பெயரீடு, குடமுழுக்கு, கோவில் திருவிழா, நூல் வெளியீடு, பாராட்டுக் கூட்டம் என்று அனைத்து நிகழ்வுகளிலும் எது இருந்ததோ இல்லையோ, அடிதடி, குத்து வெட்டு மட்டும் இல்லாமல் இருந்ததில்லை. ஆனால் இன்ராஃப் பிற்குப் பின் ஆங்காங்கே விரல்விட்டு எண்ணத்தக்க அளவில் ஒன்றிரண்டைத் தவிர வேறு எதுவும் இல்லை என மெச்சும் அளவிற்கு நிலைமை மாற்றம் கண்டுள்ளது. பேரங்காடிகளிலும், பொதுப் போக்குவரத்துகளிலும் வேறு பல இடங்களிலும் சந்தித்துக் கொள்ளும் தமிழர்கள் குறைந்த அளவு புன்னகைத்துக் கொள்ள வாவது செய்கின்றார்கள் என்பதை காணும்போது எத்துணை மகிழ்ச்சி! இத்தகைய வியத்தகு மாற்றத்தை ஏற்படுத்திய பேரணி யினருக்கும் அவர்களின் கதாநாயகனான தோழர் உதயகுமாருக்கும் ஒரு சலாம் வைக்காமல் இருப்பது நன்றி கெட்ட செயல் அல்லவா!

இபிக்கு பின் வெறும் லெட்டர் பேட் அமைப்பிடம்கூட மகஜர் வாங்கும் பிரதமர் அன்றைக்கு மைக்கா தொடர்பில் காட்டிய கரிசனம் என்ன! சாமியைவிட சிறந்த கங்காணி வேறொருவர் கிடைக்கமாட்டார் என்ற காரணத்தால் மௌனம் சாதித்தாரா என்ற வினா இயல்பாகவே எழுகின்றது!

இதற்கிடையில், 25.06.2007இல் கிள்ளான் தெங்கு அம்புவான் ரசிமா மருத்துவமனையில் பிரபல தொலைக்காட்சி நடிகை 29 வயதே ஆன சுஜாதா திடீர் மரணமடைந்தார்.

அமைச்சர் சாமிவேலுவின் தவப்புதல்வரும் மைக்காவின் தலைமைச் செயல் அதிகாரியுமான வேள்பாரியின் தனிச் செயலாளராக நீண்ட காலம் பணியாற்றியவர்தான் மறைந்த சுஜாதா. இவரின் திடீர் மரணம் நிகழ்ந்த ஒரு மாதத்திற்குப் பின்னரே புலன் விசாரணை சூடுபிடித்தது. அதுவும் எதிர்க்கட்சி அரசியல்வாதிகளின் தலை யீட்டிற்குப் பின்னரே. திடீர் மரணம் என்று முதலில் வகைப்படுத்தப் பட்டது. பின்னர் கொலை என வகைப்படுத்தப்பட்டு விசாரணை நடத்தப்பட்டது. அதன் முடிவுகள் இன்னும் அறிவிக்கப்படவில்லை.

பொதுமக்களால் விலாவரியாக பேசப்பட்ட இம்மரணமும் கூட இந்தியச் சமுதாயத்தில் மேலும் அதிருப்திகள் தோன்ற வழி வகுத்தன எனலாம்.

முன்னர் போலீஸ் லாக்காப்பில் மாண்ட இந்திய இளைஞர்களின் மரணங்களும்கூட நினைவிற்குக் கொணரப்பட்டு விரிவாகப் பேசப் பட்டன. வழக்கறிஞர் உதயகுமாரின் தொடக்கப் பணிகள் எவரும் கண்டுகொள்ளாத காவல் நிலைய சாவுகள் சார்ந்தே தொடங்கின எனலாம். தான் சார்ந்த இனத்திற்கு மட்டுமின்றி போலீஸ் அராஜ கத்திற்குப் பலியான மலாய்க்காரருக்கும் போராடிய சிறப்பிற் குரியவர் இவர். நிலைமை விபரீதமாக, இலண்டனுக்குச் சென்று தங்கியிருந்து, வக்கீலான மலேசிய அமைச்சர் ஒருவரின் உத்தர வாதத்தின் பேரில் கோலாலம்பூருக்குத் திரும்பி வந்தவர் தோழர் உதயகுமார். அன்றைக்கு அவரை நோக்கி ''மலிவான விளம்பரத் திற்காக நாடகமாடுகிறார்,'' என்று விரல் நீட்டியவர்கள் இன்றைக்கு அவரை சமுதாயக் காவலர் என்று புகழாரம் சூட்டு கின்றார்கள்.

பிறர் மீது பழி போட்டே இவ்வளவு காலம் பதவிகளை அலங் கரித்து வந்தவர்தான் சாமிவேலு.

மலேசிய நாட்டு இந்தியர்களின், குறிப்பாகத் தமிழர்களின் வள வாழ்வு குறித்து இபி-க்குப் பிறகு பலவற்றை சாமிவேலு பேசியுள்ளார். ''எங்கள் நாட்டிற்கு வந்து பாருங்கள். ஒரு பிச்சைக்காரனைக்கூடப் பார்க்க முடியாது. சாதாரண நபருக்குக் கூட ஆயிரக்கணக்கில் சம்பளம் கிடைக்கும் அளவிற்கு வேலை வாய்ப்பு உள்ளது,'' என்று குமுதம் ரிப்போர்ட்டரில் உளறியிருந் தார். பொறுப்பற்றுப் பேசுவதில் அவர் எப்போதும் வல்லவர்.

இந்தியர்களின் நிலை குறித்து மலாய் நண்பர்கள் இருவரின் கருத்துகள் கடந்த திசம்பரில் என்எஸ்டி ஆங்கில நாளேட்டின் வாசகர் பகுதியில் வெளியிடப்பட்டன. அவை பரிசீலிக்கப்பட வேண்டிய நல்ல ஆவணங்கள்.

''இந்தியக் குடும்பங்களின் சராசரி வருமானம் வெள்ளி 3,456

ஆக இருக்கிறது. தேசிய நிலை சராசரி வருமானமே வெள்ளி 3,022தான் என்று சாமிவேலு குறிப்பிடுகிறார். இது உண்மைக்கு மாறானது மட்டுமல்ல, இவருக்கு எங்கிருந்து இப்புள்ளி விவரங்கள் கிடைத்தன என்பது தெரியவில்லை.

''அண்மையில் பினாங்கிற்குப் போயிருந்தேன். ஜோர்ஜ் டவுன் வட்டாரத்தில் இன்னமும் மிக ஏழ்மை நிலையில் இருக்கின்ற இந்தியக் குடும்பங்களையும் வீடில்லாத குடும்பங்களையும் கண்டேன்.

''அது அந்தி சாயும் நேரம். திடீரென எனது காரை நான் ஒரு நிறுத்துமிடத்தில் நிறுத்தியபோது, அங்கே 'ஜாகா கிரெத்தா' (கார் காவலர்) ஒருவர் என்னை எதிர்கொண்டார். உபரி வருமானத்திற்காக அவர் அந்த வேலையைச் செய்வதாக எனக்குத் தெரிய வந்தது. காசு கொடுக்காமல் போனால் என் காரை கீறி விடுவார்கள் என்ற அச்சத்தில் ஒரு வெள்ளியைக் கொடுத்துவிட்டு வெளியேறினேன்.

''இரவு வேளையில் ஐந்தடியில் பல இந்தியர்கள் படுத்துறங்குவதைக் கண்டேன். இரவில் கடைகள் மூடப்பட்ட பிறகு வீடற்ற இந்தக் குடும்பங்கள் இக்கடைகளுக்கு முன் தங்குவதாகத் தெரிய வந்தது.

''இப்போது எனது கேள்வியே, இப்படிப்பட்ட ஏழ்மை நிலையில் உள்ள இந்தியர்கள் இருக்கின்றபோது, இவர்களையும் சேர்த்துத்தான் இந்தியர்கள் வளர்ச்சி அடைந்திருக்கின்றார்கள் என்று சாமிவேலு சொல்ல வருகிறாரா?

''தங்களுக்கான சொந்தக் கூரையின்றி யாருக்கோ உரிமையான கடைகளையே தங்கள் வீடுகளாகக் கொண்டு தங்குகின்ற ஏழை இந்தியர்கள் நகர்ப்புறங்களில் இன்று நல்ல வாழ்க்கையில் இருக்கிறார்கள் என்று சாமிவேலு கூற வருகிறாரா?

''இந்த நாட்டில் உள்ள ஏழைகளில் பெரும்பாலோர் இந்தியர் என்பது ஒரு கவலைக்குரிய கூறாகும். சில நெறி விலக்குகள் இருக்கலாம். ஆனால், எல்லோருமே நலமாக வளர்ச்சியாக இல்லை'', என்று விவரித்திருந்தார் துங்கு யூசோப் ஜிவா என்பார்.

இனி, மற்றொருவரின் கருத்தைப் பார்ப்போம்:

''இந்தியர்களின் வளர்ச்சி நிலையைச் சொல்லுகின்றபோது அது உண்மை நிலைகளை எதிரொலிக்க வேண்டும். இந்தியர்களைப் பற்றிச் சொல்லப்படுகின்ற புள்ளி விவரங்கள் எனக்குச் சரியானதாகப் படவில்லை. இன்று மலேசியாவின் மக்கள் தொகை 2 கோடியே 80 லட்சமாக இருக்கிறது. நாம் எப்போதுமே மிகப் பெரிய இடைவெளி நிறைந்த மற்ற இனங்களை ஒப்பிட்டுப் பார்க்கிறோம்.

''பூமிபுத்ராக்கள் (மண்ணின் மைந்தர்கள்) 64 விழுக்காட்டினர் (17,920,000). சீனர்கள் 24 விழுக்காட்டினர் (6,720,000. இந்தியர்கள் 8 விழுக்காட்டினர் (2,240,000). இந்த நாட்டில் அனைத்து மலாய்க்காரர்களும் பூமிபுத்ராக்கள் என்றாலும், பூமிபுத்ராக்கள் எல்லோருமே மலாய்க்காரர்கள் அல்லர். மலேசிய நாட்டு அமைப்பின் அடிப்படையில் பூமிபுத்ரா என்ற சொல் மலாய்க்காரர்களையும் ஓராங் அஸ்லி (பழங்குடிகள்) உட்பட சபா, சரவாவில் (கிழக்கு மலேசியா) வாழும் இதர பல பழங்கடி மக்களையும் குறிப்பிடுகிறது. எப்போதுமே இது போன்ற பூர்வீகக் குடிமக்கள் மிகக் குறைந்த பிரிவினராகவும் வேலை வாய்ப்பு இல்லாதவர்களாகவும் இருப்பதுண்டு. எனவே, ஒரு சராசரி வருமானத்தைக் காட்டுகின்றபோது இது தொடர்பான ஆய்வுகள் சரியாக அமைவதில்லை.

ஒவ்வோர் இனத்திற்கும் மாறுபட்ட அமைப்பு முறைகள் இருக்கின்றன. மாறுபட்ட தொழிலில் அவர்கள் இருக்கிறார்கள். அவர்களின் வருமானமும் மாறுபடுகிறது. சராசரி வருமானத்தை, இதை வைத்துக் கணக்கிட முடியாது. அதை ஓர் அளவுகோலாக வைத்து இந்த நாட்டு மூவினங்களின் வளர்ச்சி நிலையை மதிப்பிடவும் முடியாது. அப்படி கணித்தால் அது ஒரு தவறாகவே முடிந்துவிடும். வறுமை என்பது ஒரு குறிப்பிட்ட இனத்திற்கும் சமயத்திற்கும் மட்டும் உரியதல்ல. அவர்கள் இருப்பது கிராமமா அல்லது நகரமா என்பதும் முக்கியமல்ல. அல்லல் படும் அனைவரும் அரசின் ஆதரவுக்கும் உதவிக்கும் உரியவர்கள்,'' என்று கூறியிருந்தார் எப்எஸ்.மால்ஹி.

முனைவர் நாகப்பன் மக்கள் ஓசை இதழில் எழுதியிருந்த கட்டுரையின் சாரம் இது:

''இந்து உரிமை நடவடிக்கை குழு கம்போங் மேடான் சம்பவம் தொடர்பாக அரச ஆணைக்குழு விசாரணை செய்ய வேண்டும் என்ற கோரிக்கையோடு தன் செயல்பாடுகளைத் தொடங்கியது.

''பின்னர் இமயமலை ஏறிய மூர்த்தியின் பிரேத விவகாரம், காவல் நிலையக் காவல் அறைகளில் தடுத்து வைக்கப்பட்ட இந்தியர்கள் அங்கேயே இறந்து போகும் நிகழ்ச்சிகள் குறித்த விசாரணைகள், கோவில் உடைப்பு போன்ற பல பிரச்சினைகளிலும் ஈடுபட்டது.

''ஒட்டுமொத்தமாக இந்தியர்கள் எதிர்நோக்கும் எல்லாப் பிரச்சினைகளுக்கும் பொதுக் காரணம் என்ன? என்று பார்த்தபோது ஏழ்மையே என்று அறியப்பட்டது. போதிய கல்வி இன்மை, நல்ல வேலை வாய்ப்பின்மை ஆகியன ஏழ்மைக்கு காரணங்கள் ஆயின.

''ஆனால், இந்தியர்கள் ஏழைகள் அல்லர் என்று கூறும் ஒரு புள்ளி விவரத்தைச் சிலர் இன்று கூறி வருகின்றனர். இந்தப் புள்ளி விவரமே அனைத்துலக நிறுவனங்களுக்கும் அளவுகோல் ஆகிறது.

''புள்ளி விவரம் தவறானதாக இருக்கும் என்பது அதனைக் கையாள்கிற ஆய்வாளர்களுக்கு நன்கு புரியும். புள்ளி விவரத்தை வைத்துக்கொண்டு முடிவு செய்வது ஒரு வகை ஆய்வு. முடிவை வைத்துக்கொண்டு புள்ளி விவரத்தைத் தயார் செய்வது மற்றொரு வகை ஆய்வு. இந்த ஆய்வோ இரண்டாம் வகையானது.

''மலேசியாவின் மூன்று முக்கிய இனங்களின் சராசரி மாத வருமானத்தைக் குறிப்பிடும்போது சீனர்கள் வெ.4,426, இந்தியர்கள் வெ.3,456, மலாய்க்காரர்கள் வெ.2,711 என 2004ஆம் ஆண்டு புள்ளி விவரம் காட்டுகிறது. இந்தப் புள்ளி விவரம் எப்படி தயார் செய்யப்படுகிறது?

''குறிப்பிட்ட இனத்தில் உலகப் பணக்காரரின் மாத வருமானத்தையும் அடிநிலைத் தொழிலாளியின் மாத வருமானத்தையும் கூட்டி சம்பாதிக்கிறவர்-சம்பாதிக்காதவர் ஆகிய அனைவரின் எண்ணிக்கையாலும் வகுத்தால் வரும் சராசரி தொகையே இது.

''மற்றவர்களை விட்டு விடுவோம். இந்தியர்களை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். உலகின் பெரிய பணக்காரர் பட்டியலில் இருக்கும் ஆனந்தக்கிருஷ்ணன் உட்பட பலரைப் பற்றி நாம் அறிவோம். இவர்களை விட கொஞ்சம் சிறிய பணக்காரர்களாகச் சிலர் உள்ளனர். அமைச்சர்கள், துணை அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள், மாநில ஆட்சி மன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள் இப்படி பல்வேறு பொறுப்புகளில் இருப்பவர்கள் நிச்சயம் தோட்டப் பாட்டாளிகளைப் போல் சம்பளம் பெறுபவர்களாக இருக்க மாட்டார்கள்.

''இவர்கள் வருமானத்தையும் மலேசிய இந்திய உலகப் பணக்காரர்களின் வருமானத்தையும் தோட்டப் பாட்டாளிகள், தொழிற்சாலைப் பணியாளர்கள் ஆகியோர் சம்பளத்தோடு கூட்டிச் சராசரி கண்டு பிடித்து இந்தியர் வருமானம் 3,456 வெள்ளி என்று சொல்வது புள்ளி விவரத்திற்குப் பொருந்தலாம்.

''ஆனால், உண்மை நிலவரத்திற்குப் பொருந்தாது. நம்மில் எத்தனை பேர் 3,456 வெள்ளி அல்லது அதற்கு மேல் சம்பளம் பெறுகிறோம் என்று பார்த்தால், இந்தப் புள்ளி விவரத்தின் அபத்தம் புரியும்.

''சராசரி மாத வருமானம் இப்படி இருக்கையில், இனங்களின் சொத்துடைமை வேறு தோற்றத்தைக் காட்டுகிறது.

''2002ஆம் ஆண்டின் புள்ளி விவரப்படி சீனர்கள் 40.3 விழுக்

காடு, பூமிபுத்ரா 18.7 விழுக்காடு இந்தியர் 1.5 விழுக்காடு. இந்த 1.5 விழுக்காடும் இந்தியர்களில் இரண்டு அல்லது மூன்று பேரின் சொத்துடைமைக்குள் அடங்கிவிடும் என்பது அனைவராலும் அறியப்பட்ட உண்மை.

''இந்தியரின் சராசரி மாத வருமானத்தைவிட பூமிபுத்ராக்களின் சராசரி வருமானம் குறைவாய் இருப்பதற்கு என்ன காரணம்?

''பூமிபுத்ரா என்றவுடன் நாம் மலாய்க்காரர்களை மட்டுமே நினைவு படுத்திக்கொள்கிறோம். தீபகற்ப மலேசியாவில் பல வகைப் பெயர்களில் பழங்குடியினர் இருக்கின்றனர்.

''சபா, சரவா மாநிலங்களில் நகர்ப்புற மக்களோடு கிராமப்புற மக்களும் பல இனங்களின் பெயரால் பழங்குடியினரும் வாழ் கின்றனர். இவர்கள் அனைவருமே பூமிபுத்ரா மக்கள் தொகையில் அடக்கப்படுகின்றனர்.

''தீபகற்ப மலேசியாவிலும் சபா, சரவா மாநிலங்களிலும் உள்ள இப்பழங்குடியினர் நிரந்தர வருமானம் தரும் தொழில்களைச் சார்ந்தவர்கள் அல்லர். அனைவரையும் சேர்த்து பூமிபுத்ராக்களின் சராசரி மாத வருமானத்தைக் கணக்கிடுவதால் அவர்களின் சராசரி வருமானம் குறைந்துள்ளது.

''பூமிபுத்ராக்களின் சராசரி வருமானம் குறைந்திருந்தாலும் அவர் களின் சொத்துடமை இந்தியர்களைக் காட்டிலும் 17 மடங்கு அதிக மாய் உள்ளது. இது எப்படி சாத்தியமானது? பூமிபுத்ராக்கள் நிறுவன ரீதியாக வளர்ந்திருக்கிறார்கள் என்பதையே இது காட்டுகிறது. இந்த நிறுவனங்களில் முதலீடு செய்யும் வாய்ப்பு பெற்ற பூமி புத்ராக்கள் இவை ஈட்டும் லாபத்திலும் பங்கு பெறும் வாய்ப்பை பெற்றிருப்பார்கள். நமது சொத்துடமை 1.5லிருந்து 1.3க்குப் போயிருக் கிறது. நிறுவன ரீதியில் நாம் தேய்மானம் அடைந்திருக்கிறோம்.

''சராசரி மாத வருமானம் மக்கள் தொகையை அடிப்படையாகக் கொண்டது. பூமி புத்ராக்களின் சராசரி மாத வருமானத்தைக் கொண்டு பார்த்தால் இவர்களில் ஏழைகள் இருக்கின்றனர் என்பதை மறுக்க முடியாது. இதற்கு இரண்டு காரணங்களை நாம் அனுமானிக் கலாம். இவர்களில் ஒரு பகுதியினர் தங்கள் பண்பாட்டிலிருந்து மாற விரும்பாத, அரசின் புதிய மேம்பாட்டுத் திட்டங்களை ஏற்காத பழங்குடி மக்களாக இருக்கலாம். மற்றொன்று, புதிய பொருளா தாரக் கொள்கையின் சலுகைகள் ஏழை பூமிபுத்ராக்களுக்குப் போய்ச் சேராமல் இருக்கலாம்.

''ஒரு நாட்டின் ஏழைகள் எந்த இனத்தவராக இருந்தாலும் அவர்களை மேம்படுத்துவது அரசின் கட்டாயக் கடமையாகும். ஏழ்மையை அடிவேராகக் கொண்டு சமூகப் பொருளாதாரச் சீர் கேடுகள் வளர்கின்றன. கொலை, கொள்ளை, வழிப்பறி போன்றவை, சமயம், அதிட்டம் ஆகியவற்றின் பெயரால் நடைபெறும் ஏமாற்று வேலைகள் ஆகியவை சமூகப் பொருளாதாரச் சீர்கேட்டின் வெளிப் பாடுகள். அதிருப்திகள், ஆட்சேபணைகள், மறியல் ஆகியவை அதே சமூகப் பொருளாதாரச் சீர்கேட்டின் நாகரிகமான வெளிப்பாடுகள்.

''பிரச்சினைகளின் மூலகாரணத்தைக் கண்டு நிலைமையைச் சீர் செய்வதற்கான வழிமுறைகளை ஆராய்ந்து அரசு செயல்பட வேண்டும். காவல் துறையை மேம்படுத்துவதும் சிறைச்சாலை களை விரிவுபடுத்துவதும் பிரச்சினைகளைத் தீர்க்காது. ஆணிவேர் வரை பிரச்சினைகளை அலசி ஆராய்வதே முக்கியம்.''

2

24.11.07 மாலை கதிரவன் மேற்றிசையில் மறைய, இருள் கவியத் தொடங்கியதும் பக்தர்களின் எண்ணிக்கை மெல்ல மெல்லப் பெருகியதால் என்றைக்கும் இல்லாத அளவிற்கு பத்துமலையில் கூட்டம் அதிகமாக இருந்ததாம். மாற்ற முடியாது என்று சொல்லப் பட்டு, நம்பப்பட்டு வரும் தலையெழுத்தை மாற்றி அமைத்த மாந்தர்களின் வரலாறு பத்துமலை அடிவாரத்தில்தான் துவங்க விருக்கின்றது என்பதனை அப்போது எவரும் அறிந்திருக்கவில்லை.

இப்படி பெரும் எண்ணிக்கையில் திரண்டிருந்தவர்களில் ஒரு பிரிவினர் கார்த்திகை விழாவுக்காக வந்திருந்தவர்கள் என்றால், மற்றொரு பிரிவினர் மறுநாள் நடைபெறவிருந்த பேரணியில் பங்குபெற வருகை தந்திருந்தவர்கள். நாட்டின் பிற பகுதிகளில் இருந்தும் வந்து சேர்ந்திருந்தவர்கள் அன்றைய இரவு கார்த்திகைத் திருநாள் வழிபாட்டிலும் கலந்து கொள்வதற்காக அங்குக் கூடியிருந்தனர் என்று தெரிய வருகின்றது.

நேரம் செல்லச் செல்ல குழுமியிருந்தவர்களின் எண்ணிக்கை உயர்ந்து சென்று சில ஆயிரங்கள் ஆகியதாம். இப்படித் திரண்டவர்கள் தங்களின் சொகுசு வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளித்துக் கொண்டிருப்பவர்களின் அதிகாரத்திற்கு அறைகூவல் விடுப்பவர்களால் ஏற்பாடு செய்யப்பட்டு மறு நாள் ஞாயிற்றுக் கிழமை நடைபெறவிருக்கும் பேரணியில் பங்கெடுக்க வந்தவர்கள் என்பதனை உணர்ந்த கோயில் நிருவாகத்தினர், கோயில் சொத்துகளுக்கு அழிவை ஏற்படுத்துகின்றனர் எனும் நோக்கில் போலீசில் புகார் செய்துள்ளனர்.

ஆலய வளாகத்தின் முதன்மை கேட் மூடப்பட்டதின் பின், அங்கிருந்து வெளியேறுவதற்காக முயன்றவர்களின்மீது கலக மடக்கும் போலீசார் கண்ணீர் புகையையும் அமில நீரையும் பீய்ச்சி அடித்தனர் என்பதெல்லாம் மறுநாள் ஸ்டார், என்எஸ்டி, மலாய், மாண்டரின் மற்றும் தமிழ்த் தினசரிகளிலும் வெளிவந்த செய்திகளாகும்.

ஆனால், ஐஜிபி கண்ணீர்ப் புகை மற்றும் அமில நீர் பயன்படுத்தப் படவில்லை என்று ஆணித்தரமாகக் கூறியதை ஸ்டார் ஆங்கில நாளேடு வெளியிட்டிருந்தது. இணையப் பக்கத்தில் காணப்பட்ட ஒளிப்படங்கள் போலீஸ் படைக்கு பொறுப்பானவரின் அறிவிப்புக்கு மாறானதாகவே இருந்தன.

இச்சம்பவத்திற்குச் சிலநாட்களுக்கு முன்னர் நேர்மையான தேர்தல் நடைபெற வேண்டியும், தேர்தல் ஆணையரின் பதவி நீட்டிப்பு செய்யப்படக்கூடாது எனக் கோரியும் எதிர்க்கட்சிகளை உள்ளடக்கிய ''பெர்சே'' (தூய்மை) எனும் அமைப்பின் ஏற்பாட்டில் நடைபெற்ற பல்லாயிரக்கணக்கில் பல்லின மக்களும் பங்கெடுத்த போராட்டத் திலும் கண்ணீர்ப்புகையும், அமில நீரும் தாராளமாகக் கையாளப் பட்டன. அப்போதும் போலீசுத் துறையின் அதிகாரிகள் இப்படித் தான் மறுத்தனர் என்பதும் ஒப்பிடத்தக்கதாகும்.

போலீசாரை எதிர்கொண்ட மக்கள் கையிலிருந்த பிளாஸ்டிக் தண்ணீர் புட்டிகளோடு, கீழே கிடந்த கற்களையும் எடுத்துத் தங்களைத் தாக்கியவர்களின் மீது எறிந்திருப்பர் என்பது ஏற்கத்தக் கவையே. தம்மைத் தற்காத்துக் கொள்ளாத உயிர் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை!

கோவில் வளாகத்தில் கூடியிருந்தவர்களின் மீது தாக்குதல் மேற் கொண்டனர் கலகமடக்கும் போலீசார். இந்த அமளிதுமளியில் தான் நூற்றுக்கும் மேற்பட்ட மக்கள் பாதிக்கப்பட்டனர். இது எவ்வகையிலும் சட்டக் காவலர்களின் கவனத்திற்கு வரவில்லை. மாறாக, காயம்பட்ட போலீஸ்காரர்களின் நிழற்படங்கள் பத்திரிக்கை களில் வெளியிடப்பட்டு பரபரப்பாக்கப்பட்டது.

மக்கள் ஓசை நிருபர் திரு விசுவநாதன் இது குறித்து, ''ஞாயிற்றுக் கிழமை அதிகாலை 3 மணியளவில் சிற்கோம்பாக்கில் இருந்து பத்துமலை நோக்கி மோட்டார் சைக்கிளில் சென்று கொண்டிருந் தேன். நான் ஒரு பத்திரிக்கை விற்பனையாளன் என்பதால் அந்நேரத்தில் பத்திரிக்கைகளை எடுக்க அந்த வழியே சென்றேன். பத்துமலை மயில் கேட்டை வந்தடைந்ததும் அங்கு இந்தியர்கள் கதறித் துடித்து நாலாபுறமும் ஓடிய காட்சியைப் பார்த்துத் துடித்துப்போனேன். பத்துமலை வளாகமே கரும்புகையாகக் காட்சியளித்தது. உள்ளே இருந்தவர்கள் வெளியே வர முடியாத படி இரும்புக் கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. பத்துமலையில் இருந்த கூட்டத்தைக் கலைக்க போலீசார் மேற்கொண்ட நடவடிக்கையில் அவர்கள் அங்குமிங்கும் ஓடிய காட்சிகள்

பெரும் வேதனையைத் தந்தன,'' என்று குறிப்பிட்டிருந்தார்.

கோயில் வளாகத்தில் அடைபட்டு நின்ற மக்கள் மீது தாக்குதல் தொடுக்கப்பட்டதோடு 700க்கும் மேற்பட்டோர் கைது செய்யப் பட்டனர். பின்னர் படிப்படியாக விடுவிக்கப்பட்டு 80 பேர் நீதிமன்றத்தில் குற்றம் சாட்டப்பட்டனர். இவர்களில் இறுதியாக 31 பேர் ஒரு போலீசுக்காரரைத் துரத்திக் கொலை செய்ய முயன்றதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு வழக்கு மன்றத்தில் நிறுத்தப் பட்டனர். இருபது ஆண்டு சிறைத்தண்டனை விதிக்க வகை செய்யும் குற்றவியல் சட்டம் பிரிவு 307இன் கீழ் இவர்கள் குற்றச்சாட்டை எதிர்நோக்கியிருந்தனர்.

சா ஆலம் செசன்சு கோர்ட்டில் நடைபெற்ற இவ்வழக்கில் 31 பேருக்கும் பிணையல் மறுக்கப்பட்டது.

ஏறத்தாழ பத்து நாட்கள் இடைவெளியில் மீண்டும் நடைபெற்ற வழக்கில் ஐவர் விடுதலை செய்யப்பட்டதோடு, 26 பேர் மீதான கொலை முயற்சி குற்றச்சாட்டு விலக்கிக்கொள்ளப்பட்டது.

ஆனால், பொதுச் சொத்துக்கு சேதம் விளைவித்தல், சட்ட விரோதப் பேரணியில் பங்கேற்றல் ஆகிய இரண்டு குற்றச் சாட்டுகளை 26 பேரும் எதிர்நோக்கியிருக்கின்றனர். இவ்வழக்கின் பின்னணியில் உள்ள அரசியல்தான் என்ன? ஜாமீன் மறுக்கப்படும் அளவு கடுமையான வழக்கில் திடீர் திருப்பம் ஏற்பட்டது ஏன்?

''வேறொன்றுமில்லை, நவ. 25க்குப் பிறகு செல்லாக் காசாகி விட்ட மஇகாவிற்குப் புத்துயிர் ஊட்ட மேற்கொள்ளப்படும் நாடகத்தின் முதல் அங்கம் இது,'' என்று கருத்து தெரிவித்தார் வழக்கறிஞர் தோழர் ஒருவர். பின் வந்த நாட்களில் அரங்கேறியவை அவரின் கருத்தை உறுதி செய்தன.

துணைப்பிரதமர் முதல் இன்னபிற மலாய்க்கார, சீன அமைச்சர்கள் அனைவரும் 'இந்தியர்கள் ம இ காவைக் கைவிட்டு விடக் கூடாது. மஇகா மட்டுமே இந்தியர்களை பிரதிநிதிக்கும் கட்சி. அக்கட்சியினால் மட்டுமே இந்தியர்களின் எதிர்காலத்திற்கு உத்தரவாதம் வழங்க முடியும்' என்று கருத்து வெளியிட்டனர்.

கிழக்கு வானம் இன்னமும் இருட்டியிருந்த அந்தப் புலர்காலை நேரத்தில் பிரிட்டிசு தூதரகத்தைச் சுற்றியிருந்த சாலைகளில் - மலேசிய நாடு விடுதலை பெற்று அரை நூற்றாண்டுகளாகிவிட்ட பிறகும் உரிமை மறுக்கப்பட்டவர்களாக வாழும்- இந்திய மற்றும் இலங்கை வமிசாவளியினரான மலேசியர்கள் கூட்டம் கூட்டமாக நடமாடிக்கொண்டிருந்தார்கள். இவர்களோடு வெளியூர்களில் இருந்து இரயிலிலும், பேருந்துகளிலும் வந்து சேர்ந்தவர்களும் அங்கிருந்தவர்களோடு கலந்தனர்.

நேரம் கரையக் கரைய அம்மக்கள் திரளின் எண்ணிக்கை ஆயிரம், ஐந்தாயிரம், பத்தாயிரம் என்று பெருகிக்கொண்டிருந்தது. நாடு முழுவதிலுமிருந்து மக்கள் தைப்பூசத்திற்கு வருகையளிப்பதைப் போல் வந்து குவிந்துகொண்டிருந்தார்கள் என்று அன்றைய காட்சியை விவரித்தார் இடதுசாரிக் கட்சியைச் சேர்ந்த தோழர் சிவ லெனின்.

பேரணிக்கு வருபவர்களைத் தடுப்பதற்காகத் தலைநகரில் ஆங்காங்கே சாலைத் தடுப்புகளை ஏற்படுத்தியிருந்த போலீசாரின் முன்னேற்பாடு பலன் தராத நிலையில், குவிக்கப்பட்டிருந்த கலகமடக்கும் போலீசார் காலை எட்டு மணியளவில் அமில நீரைப் பாய்ச்சி கூட்டத்தினரைக் கலைக்க முற்பட்டனர். இதன் தொடர்ச்சியாக அவர்கள் கண்ணீர்ப் புகை பயன்பாட்டையும் மேற்கொண்டனர். இப்படி கலைக்க முயன்றபோது, கூடியிருந்த வர்கள் சிதறிக் கலைந்து பின்வாங்குவதும் பின்னர் மீண்டும் ஒன்று திரண்டு முழக்கமிடுவதுமாக நேரம் கடந்து கொண்டிருந்தது.

''தாக்குதல்களினால் அவதிப்படுவோரை ஓரமாக அழைத்துச் செல்வதும் பாதிக்கப்பட்டவர்களின் வாயில் உப்பைப் போடுவது தோடு முகங்களைக் கழுவி விடுவதுமான நம் மக்களின் ஒற்றுமை யினைக் கண்டு பிரமித்துப் போனதோடு இஃது கனவா அல்லது உண்மையா என்பதனை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டி எனது கையை கிள்ளிப் பார்த்துக் கொண்டேன்,'' என்றார் இடதுசாரிக் கட்சியினரான நாற்பதைக் கடந்த நண்பர் மணியம்.

அங்கிங்கெனாதபடி தூதரகப் பகுதியை ஒட்டியிருந்த சாலைகளில் கூடி நின்றனர் வாய்ச்சொல்லைத் தவிர எந்தவித ஆயுதமும் அற்ற மக்கள். உயர்ந்த இரட்டை அடுக்குக் கட்டடம் இருக்கும் ஓகஇஇ எனப்படும் நீண்ட தெருவில் காலை பத்து மணியளவில் இதர பொறுப்பாளர்களோடு தோன்றிய உதயகுமார், அங்கு குழுமியிருந்த ஏறத்தாழ 10,000 ஆயிரம் பேர் மத்தியில் உரை நிகழ்த்தினார்.

இவ்வாறு தங்களின் வழித்தோன்றல்களின் வளவாழ்வுக்காகக் கண்ணீர்ப் புகைத் தாக்குதலை எதிர்கொண்டு, வேதியல் நீரில் நனைந்து கொண்டிருந்த நிலையில், வேதமூர்த்தி மற்றும் மனோகர னோடு வேறு சிலரும் உரையாற்றினர்.

எழுச்சி உச்சக்கட்டத்தை அடைந்த நிலையில் குழுமியிருந்த பல்லாயிரத்தவர் தூதரகத்தை நோக்கிச் செல்ல எத்தனித்தனர். இவற்றைத் தடுக்கும் முயற்சியில் இறங்கிய காவலர்கள் இடைவிடாத கண்ணீர்ப் புகையோடு அமில நீர்த்தாக்குதலையும் மேற்கொண்டனர்.

''நாங்கள் மலேசியர்கள். எங்களுக்கு நீதி வேண்டும். சுதந்திரம் வேண்டும். தமிழ்ப்பள்ளிகளைப் புறக்கணிக்காதே,'' போன்ற சொற்கள் முழக்கங்களாக ஒலித்தன என்று சிவ லெனின் குறிப்பிட்டார்.

பிரிட்டானியத் தூதரக அதிகாரிகளிடத்தில் மனுவைச் சமர்ப்பிக்க வாய்ப்பில்லாத நிலையில் நண்பகல் ஒரு மணியளவில் உரை யாற்றிய உதயகுமார் பேரணியில் கலந்து கொண்டவர்களுக்கு நன்றி சொல்லி அமைதியாகக் கலைந்து செல்லக் கேட்டுக் கொண்டார்.

தங்களின் நோக்கம் நிறைவேறவில்லையே என்ற வருத்தம் இருந்த போதிலும், சட்டத்தை மதித்து ஏற்பாட்டாளர்களின் வேண்டு கோளை ஏற்ற பேரணியினர் வரலாற்றை மாற்றி எழுத வழிசெய்து அங்கிருந்து மெல்லக் கலைந்து சென்றனர்.

பங்கேற்றோரின் கருத்தைத் தெரிந்து கொள்வது சூழ்நிலையைப் புரிந்துகொள்ள உதவும்.

''கர்ப்பினிப் பெண்ணுக்கு முறையான பாதுகாப்பும் மரியாதையும் இல்லை. கர்ப்பினிப் பெண் என்றுகூடப் பாராமல் என்னையும் கலகத்தடுப்புப் போலீசார் தாக்கினர். நாங்கள் அமைதியாகத் தானே ஊர்வலம் சென்றோம்? அராஜகம் புரியவில்லையே? எனினும் போலீசார் ஏன் அராஜகம் செய்தனர்?'' எனக் கலங்கினார் ஆஸ்துமா நோயாளியான நான்கு மாதக் கர்ப்பினி பி இந்திரா.

மலேசிய வழக்கறிஞர் மன்றத்தைச் சேர்ந்த பத்துப் பேர் கொண்ட கண்காணிப்புக் குழுவினர் பேரணியில் கலந்துகொண்டனர். அக்குழுவிற்குத் தலைமையேற்ற வழக்கறிஞர் ஹரிஸ் இப்ராகிம் (மலாய்க்காரர்), ''இந்தப் பேரணியில் கலந்துகொண்ட கூட்டத் தினரைப் போலீசார் கையாண்டவிதம் குறித்து நான் அதிருப்தி அடைந்துள்ளேன்,'' என்றார். மேலும் 'பேரணியில் கலந்து கொண்டவர்கள் மீது தண்ணீர் அடித்த போலீசார் அவர்களைப் பிடித்து மிகவும் மோசமாகத் தாக்கியது வருத்தத்தை அளிப்பதாக' அக்குழுவில் இடம்பெற்றிருந்த பிறிதொரு வழக்கறிஞர் தெரிவித்திருந்தார்.

மறுநாள் நடைபெற்ற நாடாளுமன்ற மக்களவைக் கூட்டத்தில் ம இ காவைப் பிரதிநிதித்த கேமரன் மலைத் தொகுதி நாடாளுமன்ற உறுப்பினர் கே.தேவமணி, ''அண்மையில் இந்து உரிமை நடவடிக் கைக்குழு நடத்திய பேரணி, அரசாங்கத்தின் கொள்கைகள் மீதான இந்திய சமுதாயத்தின் மன நிறைவின்மையைப் புலப்படுத்து கிறது. அதனால்தான் 50 ஆயிரம் பேர் வரையில் வீதியில் திரண்டிருக்கிறார்கள். இது அரசாங்கத்தின் தோல்வி. எனவே, அரசாங்கம் இதனைக் கவனமாகப் பரிசீலிக்க வேண்டும்,'' என்று பேசியிருந்தார்.

அவருக்குப் பதிலளித்த பிரதமர் துறை அமைச்சர் நஸ்ரி அப்துல் அசிஸ், ''ஐம்பதாயிரம் பேர் வரை அப்பேரணியில் திரண்டார்கள்

என்பதை தேவமணி எப்படிச் சொல்ல வருகிறார் என்பது தெரிய வில்லை. அப்படியென்றால், இவரும் அவர்களோடு சேர்ந்து ஆர்ப்பாட்டம் செய்தாரா? அரசாங்கம் இந்தியர் களுக்கு எதுவும் செய்யத் தவறி விட்டது என்று இவர் சொல்வாரா னால் இவர் எதற்காக மஇகாவில் இருக்கிறார்? மஇகாவில் இருந்து இவர் விலகுவதுதான் மரியாதையாக இருக்கும். அரசாங்கத்தை மஇகா நூறு விழுக்காடு ஆதரிக்கிறது என்று நான் நம்புகிறேன்,'' என்று பேசியிருந்தார்.

அவையின் 18(1) பிரிவின் கீழ் இந்து உரிமை நடவடிக்கைக் குழு வினரின் பேரணி சம்பந்தமாக விவாதிக்க வேண்டும் என்று எதிர்க் கட்சி நாடாளுமன்ற உறுப்பினர் குலசேகரன், கொண்டு வந்த அவசரத் தீர்மானம் மக்களவை யில் நிராகரிக்கப்பட்டது.

இது குறித்து வழக்கறிஞர் மன்றத் (BAR COUNCIL) தலைவர் அம்பிகா சினிவாசன், ''அமைதியான முறை யில் பேரணியில் கலந்து கொண்ட வர்கள் மீது முரட்டுதனத்தை போலீசார் காட்டியிருக்க வேண்டிய அவசியமில்லை. பேசுவதற்கு வாய்ப் பளிக்கப்படும் ஒரு நாட்டில் எதை யும் பேசாமல் இருக்க வேண்டும் என தடைவிதிப்பதும் அமைதி யான முறையில் நடைபெறும் பேரணியைத் திசை திருப்பி விடுவதும் சரியான செயல் அல்ல. எதையும் பேசக்கூடாது, நாங்கள் சொல்வதைக் கேட்டு அமைதி யாக இருங்கள் என்று சொல்வதாக இருந்தால் ஒரு சனநாயகம் பறிக்கப் படுவதாகத்தான் அர்த்தமாகிறது. பேசித் தீர்க்க வேண்டிய பல விவகாரங்கள் இருக்கும் நிலையில் பேசும் உரிமைகள் தடுக்கப் படுமானால் வருங்காலத்தில் பேசித்தீர்க்க வேண்டிய விவகாரங்களுக்கு யாருமே பேச முன்வர மாட்டார்கள்,'' என்று கூறினார்.

''இப்படியொரு பேரணி நடத்தப்பட்டதைக் குறைகூறுவதை விடுத்து ஆயிரக்கணக்கான மக்கள் தங்களது நிறைவின்மையை வெளிப்படுத்தியதற்கான காரணத்தை அறிந்துகொள்ள வேண்டும். இந்திய சமூகம் மற்றும் இதர சமூகங்களின் சாதாரண நிலையில் உள்ளவர்களின் வீட்டுடைமை, கல்வி, சுகாதாரம், வேலை வாய்ப்பு, சொத்துடைமை, சமய சுதந்திரம் போன்ற சிக்கல் களுக்குத் தீர்வு காணப்பட வேண்டும். நாட்டின் அமைதி மற்றும் நிலைத்தன்மைக்குப் பேரணி, மறியல் மற்றும் ஆர்ப்பாட்டங்களை விட அதிருப்தியும் ஏமாற்றமும் பெரிய மிரட்டலாக இருக்கும்,'' என்று பினாங்கு மாநில அமைச்சர் டாக்டர் தோகின்யூன் (சீனர்) கூறியிருந்தார்.

இன்றைக்கு சீனர்களைப் பெரும்பான்மையாகக் கொண்டுள்ள பல்லினக் கட்சியான கெரக்கானின் இளைஞர் பிரிவு உதவித் தலைவரான எஸ்.பரஞ்சோதி, 'மலாய்க்காரர்களின் மத்தியில் தன்னுடைய பிரபலத்தை நிலைநிறுத்திக்கொள்ள, இனவாத உணர்ச்சியைத் தூண்டும் வகையில் அம்னோ நிலைமையை மோசமாக்கிக்கொண்டிருப்பதாகவும், இந்திய சமூகம் நான்காம் தர பிரஜைகளாகத் தள்ளப்படும் அளவுக்கு அவர்களைப் பற்றி அரசாங்கம் கவலைப்படாமல் தொடர்ந்து புறக்கணித்து வருவ தாகவும்' அரசாங்கத்தைக் குற்றஞ் சாட்டி இருந்தார்.

இவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என அம்னோ வினர் கோரியபோது தாம் எவ்வகை யான நடவடிக்கைக்கும் அஞ்சப் போவதில்லை என்று ஒற்றை வரி யில் முடித்துக்கொண்டார்.

பேரணி முடிந்த சில நாட்கள் இடைவெளியில் பத்திரிக்கையாளர் களிடம் பேசிய உதயகுமார் இந்திய சமூகத்தின் நலனைப் பாது காக்க உதவக்கூடிய 18 அம்சக் கோரிக்கை (இக்கோரிக்கைகளில் சில விட்டுக்கொடுப்புகள் வேண்டும் என்பது நமது கருத்து) குறித்து மாண்புமிகு அப்துல்லா அகமது படாவியுடன் பேச்சு நடத்த நாங்கள் தயாராக இருக்கிறோம். அப்துல்லா தான் எங்கள் பிரதமர். எங்கள் கோரிக்கை குறித்து அவருடன் மனம் திறந்து பேச விரும்பு கிறோம். நாங்கள் சந்தித்துப் பேச பிரதமர் இணக்கம் தெரிவித்தால் எங்களின் போராட்டத்திற்கு வெளி நாடுகளின் ஆதரவைப் பெறும் முயற்சியை நிறுத்திக்கொள்வோம்,'' என்று குறிப்பிட்டிருந்தார்.

ஈழ நாட்டுப் போராட்ட வரலாற்றை நன்கு அறிந்திராத காரணத்தால் தான் இவர்கள் இந்தியாவை நம்பியதும் நம்புவதும் என்று சொல்வதில் தவறிருக்காது.

இந்திய நாட்டு ஆட்சியாளர்களைப் பொறுத்தமட்டில் அவர்களுக் குத் தமிழ் என்பதும் தமிழன் என்பதும் வெறுக்கத்தக்க கெட்ட வார்த்தைகள்.

அத்தகைய தன்மை கொண்டவர்களை விடவா, மலாய்க்காரர்கள் மோசமானவர்களாக இருந்துவிடப் போகிறார்கள்?

இங்கு கங்காணி முறை அமுலில் இருப்பதும், இந்தியர்களின் அதிகார பூர்வ பிரதிநிதிகள் தாங்கள்தாம் என்று சொல்லிக்கொள்பவர்கள் தங்களது மூக்கிற்கு அப்பால் பார்க்க முடியாதவர்களாக இருப்பதும் தான் ஒட்டுமொத்த பிரச்சினைகளுக்கும் அடித்தளமாகிறது.

''இந்தியர்களின் ஏகோபித்த ஒரே தலைவர் வலிமை கொண்ட சங்கிலிமுத்து சாமிவேலுதான் என்ற மாயையில் இருந்த பிரதமர் எவ்வாறு உதயகுமார் தரப்பினரோடு பேச்சு வார்த்தைக்கு முன் வருவார்?'' என்ற வாசகர் அனுமானம் சரியானதே!

அப்படியொரு சந்திப்பு இன்னும் நிகழவில்லை. மாறாக, ''என்னிடம் பெரிய காது உள்ளது. நல்லது கெட்டதுகளை என் பெரிய காது நிச்சயம் செவிமடுக்கும்,'' என்ற பிரதமரிடம் நேரடியாக மனு சமர்ப்பிக்க அமைக்கப்பட்ட நாற்பத்தெட்டு அமைப்புகளின் கூட்டு கீழ்க்காணும் கூட்டறிக்கையை வெளியிட்டது:

''மலேசிய மேம்பாட்டுத் திட்டங்களின் வழி நாட்டின் இனங்களுக் கிடையே வருமான இடைவெளியைக் குறைக்க அரசாங்கம் நடவடிக்கைகளை எடுத்தாலும் அவை மலேசிய இந்தியர்களுக்கு அவ்வளவாகப் பயன் தரவில்லை. மலேசிய இந்தியர்கள் மத்தியில் இத்தகைய சிக்கல்கள் இருப்பதால்தான் அவர்களின் மனக்குறை

## பெரிய மனிதர்கள் ஒன்றுபோலச் சிந்திக்கிறார்களா?

*கங்கு வரிசை 8ஆக. வந்த வீ.அரசு எழுதி, 2 ஆண்டுகளுக்கு முன் வந்த ''சிறுபத்திரிகை அரசியல்'' என்னும் நூல், பக். 10இல் இப்படி ஒரு பகுதி:*

- எழுத்து (1959-1972) தொடங்கி பிரக்ஞை (1974-1978) வரையிலான சிறுபத்திரிகை மரபு.
- புதியதலைமுறை (1966) தொடங்கி நிகழ் (1983-1995) வரையிலான சிறுபத்திரிகை மரபு.
- படிகள் (1978) தொடங்கி வித்தியாசம் (1994) வரையிலான சிறுபத்திரிகை மரபு.
- நிறப்பிரிகை (1990-2000) உருவாக்கிய தமிழ்ச் சிறுபத்திரிகை மரபு.

இப்பாகுபாடு சமகாலத்தில் (1959-2000) நிகழ்ந்த சிறுபத்திரிகை மரபு சார்ந்த அச்சு ஊடகப் போக்குகளை அடையாளப் படுத்தும் நோக்கில் செய்யப்பட்டுள்ளது.

*காலச்சுவடு இதழ் 100, பக். 72இல் (ஏப்ரல் 2008) பழ.அதியமான் எழுதிய ''தூக்க நினைத்த கோவர்த்தன கிரி'' என்னும் கட்டுரையில் வந்துள்ள ஒரு பகுதி:*

''இந்தச் சிறுபத்திரிகை மரபை எழுத்து (1959-1972)இலிருந்து பிரக்ஞை (1974-1978) என்பதாக ஒரு மரபையும், புதிய தலைமுறை (1966) லிருந்து நிகழ் (1983-1995) என இன்னொரு தீவிர மார்க்சிய மரபும், படிகள் (1978) முதல் வித்தியாசம் (1994) வரையிலான நவீனத்துவச் சாயல் மரபும், நிறப்பிரிகை (1990-2000) உருவாக்கிய அரசியலை முதன்மைப் படுத்திய மரபும் என நாம் பிரித்துப் பார்க்க முடியும்.''

*அச்சு யுகத்தை விடுங்கள். இது இணையதள யுகம் அல்லவா? ஒருபோலச் சிந்திக்கும் பெரிய மனிதர்கள் ஆகத்துக்கும் பெருத்துப் போய்விட்டார்கள்! வேறென்ன சொல்ல?*

களின் வெளிப்பாடுகள் மறியலில் வந்து முடிகின்றன. இதன் வழி, இந்திய சமூகத்துக்குப் பிரச்சனைகள் இருப்பது தெளிவாகத் தெரிகிறது. கடந்த நவம்பர் 25, கோலாலம்பூரில் கூடிய ஆயிரக் கணக்கான இந்தியர்கள், தங்களின் அதிருப்தியை வெளிப் படுத்தி, மலேசியாவில் சிறந்த எதிர்காலம் வேண்டி அவர்கள் தங்கள் கோரிக்கைகளை முன்வைத்தனர்.''

இபிக்கு முன், 'பிரதமரிடம் சொல்லி விட்டேன், பேசி விட்டேன்' என்று அம்புலி மாமா கதைகள் சொல்லிக்கொண்டிருந்தவரிடம்தான் இவர்கள் கோரிக்கை வைத்துக்கொண்டிருந்தார்கள்.

அரசு சாரா (என்ஜிஓ) இந்தியப் பொது அமைப்புகளின் பெறுப் பாளர்களைப் பிரதமர் சந்தித்தார். கையோடு இந்தியர்களின் பிரச்சினைகளைக் கண்டறிய சிறப்புக் குழு அமைக்கும்படி மஇகாவைப் பணித்தார். ஒன்றைக் கவனியுங்கள். இவ்வளவு நடந்த பின்னும் பிரதமர் சாமிவேலுவைத்தான் நம்பிக் கொண்டிருந்தார் என்பது அவரின் நல்ல காலமா? தமிழரின் கெட்ட காலம் என்று சொல்வதா?

கைதானவர்களின் விடுதலைக்காக ஆங்காங்கே உள்ள கோயில் களில் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்பட்டன. மஇகாவினரின் தலையீட்டால் பல்வேறு ஊர்களில் வழிபாடு நடத்த கோயில் நிருவாகத்தினர் அனுமதி மறுத்தனர்.

டிசம்பர் 2ஆம் தேதி பத்துமலையில் நடைபெற்ற அவ்வாறான சிறப்பு வழிபாட்டுக்குப் பின் நடைபெற்ற கூட்டத்தில், உதயகுமார் கீழ்க்கண்டவாறு பேசியிருந்தார்:

''கடந்த 26 ஆண்டுகளாக இந்திய சமுதாயத்தைப் பிரதிநிதித்து அமைச்சரவையில் வீற்றிருக்கும் சாமிவேலுவால் சமுதாயப் பிரச்சினைகளைத் தீர்க்க முடியவில்லை. ஒரு மாதத்திற்கு நான்கு முறை அமைச்சரவைக் கூட்டம் நடைபெறுகிறது. ஆண்டுக்கு 52 முறை என்ற கணக்கில் கடந்த 28 ஆண்டுகளில் 1,456 அமைச்சரவைக் கூட்டத்தில் சாமிவேலு பங்கேற்றிருக்கிறார். இதே காலகட்டங்களில் தமது அமைச்சிலும் இந்தியர்களைச் சந்தித்துக் குறைகளைக் கேட்டறிந்திருக்கிறார். அப்படியானால் கடந்த 28 ஆண்டுகளில் அப்படி என்னதான் சாமிவேலு அமைச்சரவையில் பேசி இந்திய சமுதாயத்தின் பிரச்சினைகளைத் தீர்த்து வைத்தார் என்பதைத் தெரிந்துகொள்ள மலேசிய இந்திய சமுதாயமே ஆவலுடன் இருக்கிறது. இந்திய சமுதாயத்தை மஇகா மட்டும்தான் பிரதிநிதிக்கிறது என்று மார்தட்டிக் கொள்ளும் சாமிவேலு, இந்தியர்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகளுக்கு அமைச்சரவையில் பேசித் தீர்வு காண முடியாமல் போனது ஏன்? இனியும் இந்திய சமுதாயம் சாமிவேலுவையும், மஇ காவையும் நம்பத் தயாராக இல்லை. சமுதாயம் விழித்துக் கொண்டது. பிரதமர் அப்துல்லா அகமது படாவியால் மட்டுமே சமுதாய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியும். மஇகா அமைத்துள்ள சிறப்புக்குழு மீது சிறிதளவும் நம்பிக்கை இல்லை. இதுவரை இந்திய சமுதாயம் பாழ்பட்டுப் போனதற்கு இவர்களே முழுக்க முழுக்கக் காரணம்.''

தோழர் உதயகுமாரின் உரையை மக்கள் ஓசை நாளேடு வெளியிட்டது.

9.12.07 அன்று பினாங்கு மாநிலத்தின் பட்டர்வொர்த் நகரில் நடைபெற்ற பிரிதொரு வழிபாட்டுக் கூட்டத்திற்குப்பின் உதய குமார், கீழ்கண்டவாறு பேசியிருந்ததை மலேசிய நண்பன் நாளேடு வெளியிட்டிருந்தது:

''நாங்கள் விடுதலைப்புலிகள் இயக்கத்தோடு தொடர்பு கொண்டுள் ளதை 24 மணி நேரத்திற்குள் போலீஸ் நிரூபிக்க வேண்டும். அப்படி நிரூபிக்கவில்லை என்றால் விடுதலைப் புலிகளோடு தொடர்பு இருப்பதாக கூறப்பட்ட குற்றச்சாட்டு பொய்யான குற்றச்சாட்டா கக் கருதப்படும். கடந்த 50 ஆண்டுகளாக மலேசிய இந்தியர்கள் எதிர்நோக்கி வரும் பல்வேறு பிரச்சினைகள் குறித்து சம்பந்தப் பட்டவர்களிடம் பலமுறை பல மகஜர்கள் வழங்கப்பட்டன. எந்த மகஜருக்கும் சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து எந்தப் பதிலும் கிடைத்ததில்லை. ஒரு அரசியல் கட்சி திட்டமிட்டு இன்ராஃப் பிற்கு எதிராகப் பொய்ப்பிரச்சாரங்களைச் செய்து வருகிறது. இதற்கு காரணம் எந்த நேரத்திலும் பொதுத் தேர்தல் அறிவிக்கப் பட்டால் இந்தப் பிரச்சினையைப் பெரிதுபடுத்தி தேர்தல் பிரச்சாரத்தை மேற்கொள்ளத்தான். இந்த நாட்டு மலாய் சமூகத் தினர் மிகவும் நல்லவர்கள். நாம் யாரையும் வம்பிற்கு இழுக்க வில்லை. நமது சட்ட பூர்வ உரிமைகளைத்தான் கேட்கிறோம். இன்று இந்தப் வழிபாட்டுக் கூட்டம் நடத்தப்படுவது சிறையில் அடைத்து வைக்கப்பட்டுள்ள 31 பேர்கள் விரைவில் விடுவிக்கப் பட வேண்டும் என்பதற்காகவே. எந்த நேரத்திலும் நான் கைது செய்யப்படுவேன். அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. நமது நோக்கம் நமது உரிமையைப் பெறுவதுதான். நாடு முழுவதும் தற்போது இந்தியர்களிடையே ஏற்பட்டுள்ள இந்த விழிப்புணர்ச்சி தொடர வேண்டும்.

''நாம் ஒன்றுபட்டிருந்தால் நம்மை யாரும் ஒன்றும் செய்துவிட முடியாது. நாம் யாருக்கும் எதிரிகள் அல்லர். நாம் தீவிரவாதி களும் அல்லர். இப்போது மட்டுமல்ல, எப்போதும் மலேசிய இந்தியர்கள் தீவிரவாதத்தில் ஈடுபடமாட்டார்கள். அதில் நம்பிக் கையும் இல்லை.''

வழிபாட்டுக் கூட்டங்கள் ஒரு புறம், கருத்துக் கணிப்பு இன்னொரு புறம், சவடால் தலைவரின் நக்கல் நையாண்டி எரிச்சல் கலந்த பல்சுவை பேச்சு வேறொருபுறம் என்று நாட்கள் ஓடின.

நாட்டின் நிலைத்தன்மைக்கும் பாதுகாப்பிற்கும் அச்சுறுத்தலான வர்கள் என்ற காரணத்திற்காக 13.12.2007 தேதியன்று இன்ராஃப் முன்னணியினரான

1. பொன்னசாமி உதயகுமார், வயது 46
   இன்ராஃப்பின் சட்ட ஆலோசகர்.
2. மலையாளம் மனோகரன், வயது 46
   இன்ராஃப்பின் சட்ட ஆலோசகர்
3. இராமசாமி கெங்காதரன், வயது 40
   இன்ராஃப்பின் சட்ட ஆலோசகர்
4. வீரமான் கணபதிராவ், வயது 34
   இன்ராஃப்பின் சட்ட ஆலோசகர்
5. கிருச்ணன் வசந்தகுமார், வயது 34
   இன்ராஃப்பின் ஒருங்கிணைப்பாளர்

ஆகிய ஐவர் உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் 1960, பிரிவு 8(1)இன் கீழ்க் கைது செய்யப்பட்டனர்.

இன்ராஃப்பின் தலைவர் வக்கீல் பொன்னுசாமி வேதமூர்த்தி, அச்சமயம் போராட்டத்திற்கு ஆதரவு திரட்ட வேண்டி வெளி நாடு சென்றிருந்ததால் அவர் பெயர் கைதுப் பட்டியலில் இடம் பெறவில்லை.

உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் பேரா மாநிலத்தில் தைப்பிங் நகரை அடுத்து அமைக்கப்பட்டுள்ள தடுப்பு முகாமின் காவலில் வைக்கப்பட்டுள்ளவர்களை விடுதலை செய்ய வேண்டு மென்று அரசாங்கத்திற்கு வேண்டுகோள் விடுப்பதும், அவர்கள் விடுதலை செய்யப்படும் வரை ஓயப்போவதில்லை என்றும் முழக்கமிட்டு தேர்தல் தோல்விக்குப் பின் ஆயிரம் கதைகள் பேசும் சாமிவேலு, அவ்வய்வரும் கைது செய்யப்பட்டபோது என்ன சொன்னார் என்பது நீங்கள் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டிய ஒன்றாகும்.

''நாடு அமைதியாக இருப்பதற்கு இன்ராஃப்பின் ஐந்து முக்கிய தலைவர்களும் உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டது சரியான நடவடிக்கையாகும்''.

மற்றொரு நிகழ்ச்சியில் பின்வருமாறு உதிர்த்திருந்தார்:

''இந்த நாடு அமைதியில்லாத நாடு என உலகுக்குப் படம்



பிடித்துக் காட்டவும், இந்நாட்டுப் பாதுகாப்பிற்குக் குந்தகம் விளைவிக்கவும் முயன்ற தலைவர்களைக் கைது செய்தது, அரசு செய்த ஒரு தைரியமான நடவடிக்கை.''

இவ்வகை அரசியலுக்கு என்ன பெயரிடுவது என்று நீங்களே முடிவு செய்யுங்கள்.

அரசு சார்பற்ற அமைப்புகளைச் சேர்ந்த மற்றொரு குழுவினர் பிரதமரைச் சந்தித்துப் பேசினர். அவ்வமைப்புகளின் பொறுப்பாளர் களில் பத்துமலை தேவஸ்தானத்தின் தலைவரும் அடக்கம். சாமி வேலுவும் பங்கேற்றிருந்தார்.

இச்சந்திப்பைத் தொடர்ந்து, பிரதமர் இலாகாவில் துணையமைச் சராக இருக்கும் மாண்புமிகு கேவியஸ் (தமிழர்) அவர்கள் கட்சி நிகழ்ச்சி ஒன்றில் இவ்வாறு பேசினார்:

''சாமி கும்பிட வந்தவர்களை வெளியே போகவிடாமல் இரும்புக் கேட்டைப் பூட்டிப் போலீசாரை வரவழைத்தவர்கள்தான் இந்திய சமுதாயத்தின் பிரச்சினைகளைத் தீர்க்கப்போகிறார்களா? பத்து மலையில் போலீசார் நுழைந்திருக்கிறார்கள். இவர்களை நுழைய அனுமதித்தது யார்? இரும்பு கேட்டைப் பூட்டி மக்கள் வெளியேறி விடாமல் போலீசாரை வரழைத்தவர்கள் இவர்கள்தான். ஆனால், இன்று இவர்கள் சமுதாயம் எதிர்நோக்கும் பிரச்சினைகள் குறித்து அரசாங்கத்திடம் பேசி இருப்பதாகச் சொல்வது வேடிக்கையாக இருக்கிறது. இப்படிப்பட்ட சமுதாயத் தலைவர்களை நாம் தூக்கி எறியனும். இவங்கதான் சமுதாயத்திற்காகப் போராடப் போகிறார்களா? பத்துமலை தைப்பூச உண்டியல் பணம், சிறி மகா மாரியம்மன் ஆலய வசூல், கோர்ட்மலை பிள்ளையார் ஆலயத்தின் வசூல் ஆகியவற்றைக்கொண்டு இந்தியச் சமுதாயத்திற்கு எவ்வளவோ செய்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்யவில்லை. இவர்கள் சமுதாயத்தின் மேம்பாடு குறித்துப் பேசுகிறார்கள். இந்தப் பணம் சமுதாயத்திற்குக் கொடுக்கப் பட்டிருந்தால் பல பிரச்சினைகள் தீர்க்கப்பட்டிருக்கும்.''

எதிரி போர்வைக்குள்தான் இருக்கிறான் என்பதனை மலேசிய இந்தியர்களில் பெரும்பான்மையினரைப் புரிந்துகொள்ளச் செய்தது நவம்பர் பேரணியாகும்.

மலேசியத் தமிழர்களின் பரிதாப நிலைக்கு மலாய்க்காரர்களைப் பெரும்பான்மையாகக்கொண்ட அரசாங்கம் மட்டுமே காரணமல்ல. கூடவே அடிமைப் புத்தி கொண்ட இந்திய வம்சாவளி அரசியல் தலைவர்களும்தான்.

இந்திய சமூகத்துக்குச் சேவையாற்றப் பேயாய் அலைந்து கொண்டிருப் பதாக சாமிவேலு பறைசாற்றிக்கொள்வதுண்டு. மலேசியாவில் 40,000க்கு மேற்பட்ட இந்தியர்களுக்குப் பிறப்புப் பத்திரம் இல்லை. அடையாள அட்டைக்காகவும் குடியுரிமைக் காகவும் சுமார் 70,000 இந்தியர்கள் காத்திருக்கின்றனர். இக்குறைபாடுகளால் அவர்கள் தங்கள் வாழ்க்கையில் பெரும் இன்னல்களை அனுபவிக்கின்றனர். இவ்வுண்மைகள் பேய்க்குத் தெரியாது என்பதுதான் அதிசயம்.

இபிக்குப் பின் முதன்முதலாகச் சொல்லத்தக்க பல நிகழ்வுகள் நடைபெற்றுள்ளன.

ஸ்ரெய்ட் டைம்சு நாளிதழுக்குப் பேட்டியளித்த சாமிவேலு, ''நாடு முழுவதும் உள்ள தமிழ்ப் பள்ளிகளில் கடுமையான ஆசிரியர் பற்றாக்குறை நிலவுகிறது. வரும் பள்ளி ஆண்டு தொடங்குகிறபோது குறைந்தது 350 முதல் 400 ஆசிரியர்கள் வரை நிரப்பப்பட வேண்டும்,'' என்று சொல்லிக்கொண்டு திரிகிறார். இது தேசிய ஆசிரியர் பணியாளர் சங்கத்தின் பொதுச்செயலாளர் லொக் இம் பெங் (சீனப் பெண்மணி) அவர்களின் அறிக்கை கடந்த டிசம்பர் மாதம் தினசரியில் வெளிவந்த பிறகுதான் அவருக்குத் தெரிய வந்துள்ளது.

மக்களின் மௌனம் நிறைந்த சகிப்புத்தன்மை எதற்காகவோ விழிப்போடு காத்து நின்றதைப் பேரணிக்குப் பின் நடைபெற்ற சம்பவங்கள் புலப்படுத்துகின்றன.

''இந்நாட்டில் உள்ள இந்தியர்கள் மலேசிய அரசாங்கத்தால் இன அழிவுக்கு உட்படுத்தப்படுகிறார்கள் என்ற பச்சைப் பொய்யை இந்து உரிமை நடவடிக்கைக் குழு கட்டவிழ்த்து விட்டிருக்கிறது. நான் உண்மையிலேயே ஆத்திரம் அடைந்திருக்கிறேன். நான் அவ்வளவு எளிதில் சினமுற மாட்டேன். ஆனால் இந்தப் பச்சைப் பொய்யைச் சகித்துக்கொள்ள முடியவில்லை. இன அழிவு என்பது போஸ்னியாவைப் பார்த்து நாம் தெரிந்துகொள்ள வேண்டும். செர்பியர்கள் கொல்லப்பட்டபோது போஸ்னியர்களை அந்நாட்டிலிருந்து முற்றாகத் துடைத்தொழிப்பதற்கு அவர்கள் என்னென்ன செய்ய முடியுமோ அத்தனையும் செய்தார்கள். ஆனால் நாம் இங்கு அப்படியொரு செயலைச் செய்யவும் இல்லை. செய்ததும் இல்லை.''

இப்படிச் சொன்னவர் பிரதமர் மான்புமிகு அப்துல்லா படாவிதான்.

இசா சட்டத்தில் எழுபதுகளில் மூன்றாண்டுக் காலம் தடுப்புக் காவலில் இருந்த பழம்பெரும் தொழிற்சங்கவாதி தியாகராஜா இதற்குச் சொன்ன மறுமொழி: ''இவர் பட்டியலிட்டது மட்டும்தான் இன அழிப்பிற்கான வழிமுறை என்று இவருக்கு யார் சொன்னது? திபெத்தில் அன்றாடம் நடக்கும் இனக்கலப்பையும் பண்பாட்டு ஒடுக்குதலையும் இன ஆழிப்பு என்ற வரையறைக்குட்படுத்துவது என்ன பாவமா? தாய்மொழிக் கல்விக்கான வாய்ப்புகளைக் குறைப்பதையும், வழிபாட்டுத்தலங்களை இடித்து அப்புறப்படுத்து வதையும், பல்கலைக் கழக நுழைவு, அரசாங்க உத்தியோக வாய்ப்பு என்பனவற்றில் ஓரங்கட்டப்படுதலையும், குறிப்பிட்ட இன இளைஞர் மட்டும் போலீஸ் லாக்கப்பில் மாண்டுபோவதை யும் நீண்ட கால நோக்கில் பார்ப்போமானால் இன அழிப்பின்பாற் பட்டவையே ஆகும்.''

உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம் விதி 73இன் கீழ் சந்தேகத்திற் குரிய மனிதர்களை 60 நாட்களுக்குக் காவலில் அடைத்துவைத்து விசாரணை செய்ய போலீசாருக்கு அதிகாரம் உள்ளது. அதன்பின் போலீசார் வழங்கும் பரிந்துரையின் பேரிலேயே சம்பந்தப்பட்டவர் களை இரண்டாண்டுகள் வரை தடுப்பு முகாமில் வைக்க உள்துறை அமைச்சர் ஆணை பிறப்பிக்க முடியும்.

ஐவர் கைதில் இந்த அடிப்படைகள் ஏதும் பின்பற்றப்படவில்லை. உரிமைகள் அற்ற இடத்தில் சனநாயகம் கேலிக் குரியதாவது இவ்வாறுதான்.

நிலைமை இவ்வாறு அல்லோலப்பட்டுக் கொண்டிருந்த சூழலில்தான் அதிர்ச்சிக் குள்ளாக்கிய அந்தச் சம்பவம் நடந்தது.

வழக்கம்போல் தைப்பூச நாள் வந்தது. கோயிலுக்கும் தெய்வங்களுக்கும் மட்டுமே முதன்மை தரும் தீவிர மதப்பற்றுள் ளவர்கள் என்று சுயமரியாதைக்காரர் களாலும் சீனர்களாலும் மலாய்க்காரர் களாலும் கருதப்படும் தமிழர்கள் ‘பத்து மலை தைப்பூசப் புறக்கணிப்பு’ செய்தது தான் அது.

அரசுக்குத் தமிழர்கள் காட்டிய அசலான எதிர்ப்புணர்வு.



மலேசிய இந்தியர்களுக்கு அனைத்து உரிமைகளையும் சலுகைகளையும் அரசு வழங்க வேண்டும் என்பதுடன் உள் நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டிருக்கும் தங்களை நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டும் என்றும் அந்த ஐவரும் 20ஆம் நாள் காலை ஏழு மணிக்கு உண்ணா நோன்பு போராட்டத்தைத் தடுப்புக் காவலில் தொடங்கினர்.

பத்துமலையில்தான் மக்கள் கோயில் புறக்கணிப்பு. மற்ற கோயில் களில் எப்போதும்போல் கூட்டம் பொங்கி வழிந்தது.

நாட்டில் பல்வேறு பிரச்சினைகள் தலைதூக்கி நின்றபோதும், ‘‘மக்களுக்களித்த வாக்குறுதிகளை தேசிய முன்னணி நிறை வேற்றி இருப்பதால் தேர்தலில் மிகப்பெரிய வெற்றியைப் பெறு வோம்,’’ என்று கூறி பிரதமர் தேர்தலைச் சந்தித்தார்.

புரையோடிப்போன தேசிய முன்னணி ஆட்சியின் மேல் ஏற்பட்ட வெறுப்பும், டாக்டர் மகாதிரால் ஓரினப் புணர்ச்சியாளர் என்று குற்றம் சாற்றப்பட்டு பதவி நீக்கம் செய்யப்பட்டுச் சிறையிலும் தள்ளப்பட்ட முன்னாள் துணைப்பிரதமர் அன்வர் இப்ராஹிம் சிறை மீண்ட பின்னர் இந்தியர்களோடு கொண்ட அணுக்கத் தொடர்பும், இபிக்கு முன் உதயகுமார் குழுவினருடன் சமூக நீதிக் கட்சி, அதாவது மக்கள் நீதிக் கட்சி இணைந்து செயல் பட்டமையும், இன்ராஃப் பேரணிக்குப் பின் நாடு முழுமையும் முன்னெழுந்த எழுச்சியின் நியாயமும், அன்வரின் அனுபவமும் நம்பகத்தன்மையும் தேர்தலில் நல்ல பலனைத் தந்தன.

தேர்தலுக்கு முன்னர் அன்வர் கூறியது: ‘‘இந்திய சமுதாயத் தினரிடத்தில் புதிய உத்வேகத்தை அரசியல் ரீதியாகக் காண முடிகிறது. 50 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த மாற்றம் ஏற்பட்டுள்ளது. இன்றைய சூழ்நிலையில் இந்திய சமுதாயம் முழுமையான மனத் தோடு அரசியல் மாற்றத்திற்குத் தயாராகிவிட்டதைக் காண முடிகிறது. இதன் முக்கிய காரணங்களில் ஒன்று இன்ராஃப் தலைவர்களும் அவர்களின் போராட்டமும் ஆகும்.’’

பிரதமர் அப்துல்லா படாவியைத் தவிர ஏனையோர்க்கு இந்த உண்மை தெரியவே செய்தது.

தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டபோது நாடு மீண்டும் ஒருமுறை அமர்க்களப்பட்டது.

மலேசிய வரலாற்றில் முதன்முறையாக ஆளும் கூட்டணி மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையை இழந்து சாதாரண வெற்றியைப் பெற்றது.

28 ஆண்டுகள் கோலோச்சிய சாமிவேலு காணாமல் போயிருந்தார். 9 நாடாளுமன்றத் தொகுதிகளில் போட்டியிட்ட மஇகா 3இல் மட்டுமே தலை காட்டியது. அதேபோல் 20 சட்ட மன்றத் தொகுதிகளில் 7 இடங்களையே தக்க வைத்துக்கொண்டது.

முந்தைய பொதுத்தேர்தலில் 199 இடங் களைப் பெற்றிருந்த ஆளுங் கூட்டணி இப்போது 136 இடங்களை மட்டுமே பெற்றது. முன்பு 19 இடங்களில் வென்ற எதிர்க்கட்சிகள் இப்போது 83 நாடாளு மன்ற இடங்களைப் பிடித்தன.

எதிர்க்கட்சிக் கூட்டணி ஆளும் பினாங்கு மாநிலத்தில் துணை முதல்வராக அரசியல் விஞ்ஞானப் பேராசியரான தமிழர் முனைவர் இராமசாமி பதவி ஏற்றிருக்கிறார்.

இவையெல்லாம் நினைத்துப் பார்த் திராத சம்பவங்கள்.

சில பத்து ஆண்டுகளாக மலேசிய அரசியல் களத்தில் ‘பீப்பிள்ஸ் பவர்’ என்றும் ‘குவாசா ராக்யாட்’(மலாய் மொழி) என்றும் இடதுசாரியினரால் முழக்கப்படுவதுதான் மக்கள் சக்தி என்னும் மந்திரம். இந்தியர்கள் மத்தியில் இச்சொற்றொடரை வழக்கப் படுத்தியவர்கள் இன்ராஃப் அணியினர்தாம்.

பல்லாயிரக்கணக்கில் தமிழ் மக்களை அணி திரட்டித் தங்கள் உரிமைகளுக்காகப் போராடுவதென்பது கற்பனையாயிருந்த சூழலில் செயல்திட்டம் வகுத்துத் தங்கள் மனக்கசப்பை, நிறைவின்மையை ஆள்வோருக்குப் புரிய வைத்ததில் இப்பேரணி தன் இலக்கை எட்டிவிட்டது.

பேரணி உருவாக்கிய எழுச்சி தமிழ்ப் பள்ளிகளில் பிள்ளைகளின் எண்ணிக்கையாகப் பரிணமிக்கிறது.

தேர்தல் காலத்தில் சுழன்றுச்சுழன்று பணி செய்த ‘பாஸ்’ எனக் கூறப்பெறும் பான் இஸ்லாமிக் பார்ட்டியின் மலாய்க்கார முஸ்லிம் முதியோரும் இளையோரும்தான் ‘மக்கள் சக்தி’ என்று தமிழில் விண்ணதிர முழக்கமிட்டவர்கள் என்பதனை சகவாழ்வின் தோழமைக் குறியீடாக நினைவில் கொள்ள வேண்டும்.

ஐவரின் விடுதலை பற்றி ஓய்வு கொடுக்கப்பட்ட சாமிவேலு பேசுகிறாரே என்கிறீர்களா?

வெளிநாட்டில் இருக்கும் இன்ராஃப் தலைவர் வேதமூர்த்தி தன் பத்திரிக்கை குறிப்பில் சொல்கிறார்: ‘‘சாமிவேலுவின் தயவில் சிறை மீள்வதை உதயகுமார் விரும்ப மாட்டார்.’’

இன்ராஃப் முன்னணியினரோடு இணைந்திருந்த சிலரும் நாடாளுமன்ற, சட்ட மன்ற உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதால் ஐவரும் சிறிது காலத்துக்குப் பின்னாவது விடுதலையடைவார்கள் என்பது திண்ணம்.

‘‘கலகம் ஒப்புக்கொள்ளப்படும்போது அதுவே புரட்சியாகப் போற்றப்படுகிறது. புரட்சி தோற்கும்போது கலகமாக ஒடுக்கப் படுகிறது,’’ என்பது சமூகச் சிந்தனையாளரின் புலப்பாடு நிறைந்த வரிகள்.

நவம்பர் 25 பேரணியைப் புரட்சியாகவோ கலகமாகவோ பார்ப்பதை விட விழிப்புற்ற சமூகத்தின் புத்தெழுச்சியாகப் போற்றிக் கொள்வது பொருத்தமானது.

●

# தலித் கருத்தியல்

சு.அம்பேத்கார்
புதுவைப் பல்கலைக் கழகம்

தலித் இலக்கியம் என்பது அம்பேத்கர் நூற்றாண்டு தந்த புதிய வகை இலக்கிய வடிவம் ஆகும். நீக்ரோவியம் என்றும், கறுப்பு இலக்கியம் என்றும் அறியப்பட்ட உலக இலக்கிய வகையில் இந்தியச் சமூகத்திற்குள் தலித் இலக்கியம் ஒரு முக்கிய வகை இனமாக அறியப்படுகிறது.

'தலித்' என்கிற சொல் சுட்டுகிற விரிந்த பொருளில் 'தல்' என்கிற சொல் 'மண்' என்கிற பொருளைக் குறிக்கிறது. 'தலித்' என்றால் மண்ணின் மைந்தன் என்று பொருள். சாதி அமைப்புக்கு எதிரான, சாதி அமைப்புக்கு வெளியே இருக்கிற சாதி ஒழிக்கப்பட வேண்டும் என்ற கருத்தியலைத் தலித் படைப்பாளிகள் கொண்டிருக்கின்றனர். சாதி அமைப்பால் தாங்கள் பட்ட இன்னல்களை, வலிகளை, வதைகளை எழுத்து வடிவில் பதிவு செய்கிற முறை 90களில் தமிழகம் முழுமையும் வடிவெடுத்தன.

மராட்டியத்திலும், கன்னடத்திலும், ஆந்திராவிலும் இன்ன பிற பகுதிகளிலும் அதற்கு முன்பாகவே இந்த தலித் இலக்கிய வரவு தீயென பற்றிக்கொண்டது. தமிழிலும் அதற்கான விதைகள் ஊன்றப்பட்டன. அதில் ராஜ்கௌதமன், ரவிக்குமார், சுப்பையா, ராஜமுருகு பாண்டியன், உஞ்சை அரசன், பாப்லோ அறிவுக்குயில், சிவகாமி, பாமா, அழகிய பெரியவன், பிரதீபா ஜெயச்சந்திரன், கே.ஏ. குணசேகரன், விழி. பா. இதயவேந்தன் போன்றவர்கள் தலித் இலக்கியத்தை முன்னோடியாக எடுத்துச் சென்றனர். தொடர்ந்து என்.டி. ராஜ்குமார், ம. மதிவண்ணன், கோமேத. சாமிநாதன், அன்பாதவன், அபிமானி, அரங்க. மல்லிகா, சுகிர்தராணி, ஆதவன் தீட்சண்யா, பாரதி நிவேதன், ஏ.பி. வள்ளிநாயகம், பூவிழியன், யாழன்ஆதி போன்ற தலித் படைப்பாளிகள் தலித் இலக்கியத்தையும், தலித் திறனாய்வுகளையும், தலித் பண்பாட்டையும், தலித் அரசியலையும் செழுமைப்படுத்தி வருகிறார்கள். இந்த ஒட்டு மொத்த வெளிப்பாட்டின் இலக்காக தலித் விடுதலை என்பது உள்ளீடாக வைக்கப்படுகிறது. இதற்கான அடிப்படை தத்துவத்தை வழங்குவது அம்பேத்கரியம் என்னும் கருத்தியல் ஆகும். இதற்கு மேலும் துணைபுரிவது பெரியாரியம் மற்றும் மார்க்சியம் ஆகும்.



தமிழில் சாதி எதிர்ப்பு இலக்கியம் என்பது இன்றோ, நேற்றோ தோன்றியது அல்ல. சாதி தோன்றிய நாளிலிருந்தே அதற்கான எதிர்ப்பும் தோன்றிவிட்டது எனலாம். ஔவையார், வள்ளுவர், சித்தர்கள், உத்திர கோசமங்கை, அயோத்திதாசப் பண்டிதர், இன்ன பிற தலித் படைப்பாளிகள் சாதியை மிகத் தீவிரமாக எதிர்த்து, சமத்துவ நெறியை உருவாக்குவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வந்துள்ளனர்.

ஆனால், சாதியைத் தாங்கி நிற்கிற கருத்தியல்களான பார்ப்பனியம் (அ) இந்துசமயம் (அ) இவற்றை நியாயப்படுத்தக்கூடிய வேத, இதிகாச, புராணங்கள் மற்றும் பகவத்கீதை, மனுநீதி உள்ளிட்ட அனைத்தையும் அம்பேத்க ர் கேள்விக்கு உட்படுத்துகிறார். எனவே, சாதி ஒழிப்பை மையமாகக் கொண்டு சாதி ஆதிக்க வன்முறைகளைப் பதிவு செய்கிற தலித் இலக்கியம் அம்பேத்கரியத்தின் விளைவாகும்.

அம்பேத்கரியத்தை உள்வாங்கிக் கொள்ளாத, சாதி அமைப்பை கேள்விக்கு உட்படுத்தாத, பார்ப்பனியக் கருத்தியலை மனதில் கொண்டு எழுதுகிற எதுவும் தலித் இலக்கியம் ஆகாது. பிறப்பால் ஒருவர் தலித்தாக இருப்பது மட்டுமே தலித் இலக்கியப் படைப்பாளியின் தகுதி ஆகாது. ஒருவர் உணர்வால் தலித்தாகவும், சிந்தனை முறையால் சாதி அமைப்பை எதிர்க்கிறவராகவும் இருப்பவரே தலித் படைப்பாளி ஆவர்.

தலித் இலக்கியத்திற்கான வகைமை, அழகியல் (அ) வடிவம் போன்ற கோட்பாடுகளைத் தாங்கி வருவது அல்ல. எழுத்துமுறையை, தனக்கான இலக்கிய மதிப்பை, சிந்தனையைத் தலித் இலக்கியம் தன்னுள் தானே உருவாக்கிக் கொள்கிறது. அது நாவலாகவோ, சிறுகதையாகவோ, கவிதையாகவோ, நாடகமாகவோ, கட்டுரையாகவோ அல்லது நடவுப் பாடல்களாகவோ கூட இருக்கலாம்.

யாருடைய அங்கீகாரத்திற்காகவும் எழுதப்படுவது அல்ல தலித் இலக்கியம். யார் சொல்லியும் தலித் இலக்கியம் தேங்கி விடுகிற பலவீனமான எழுத்தாகவும் இல்லை. மேலும் மேலும் தலித் இலக்கியம் தன்னை செழுமைப்படுத்திக்கொண்டு வளர்ந்து வருவது சிலருக்கு இடையூறாக இருக்கிறது. இதைச் சகித்துக்கொள்ள முடியாதவர்கள்தான் தலித் இலக்கியத்தின் மீதான காழ்ப்பை அவ்வப்போது வெளியிட்டு வருகிறார்கள். தலித்களைப் பற்றி எழுதுவதால் மட்டமே அது தலித் இலக்கியம் ஆகிவிடாது. மாறாக தலித் விடுதலையை எவன் முன்னெடுக்கிறானோ, அவனே சிறந்த தலித் படைப்பாளியாகத் திகழ்கிறான்.

தமிழ் இலக்கியம் என்பது பார்ப்பன, வெள்ளாள இலக்கியப் பதிவுதான் என்பதை யாரும் மறுக்க முடியுமா? தலித்களையோ, பெண்களையோ இழிவாகச் சித்தரிக்காத எந்த இலக்கியமாவது தமிழில் உண்டா? ஒவ்வொரு இலக்கிய வகையின் உள்ளேயும் ஊடுருவிப் பார்த்தால் சாதி நாற்றமெடுத்துக் கிடப்பதை அறியலாம்.

ஏராளமான தலித் இதழ்கள், புதிய தலித் படைப்பாளிகளை உருவாக்கிக் கொண்டுதான் இருக்கின்றன. அவ்வகையில் புதிய கோடாங்கி, தலித்முரசு, தலித், கவிதாசரண், தமிழ்மண் போன்றவைகள் தமிழ்ச் சூழலில் ஆற்றி வருகிற பங்களிப்பை அவ்வளவு எளிதாகப் புறக்கணித்துவிட முடியாது.

தற்போதைய சூழலில் தலித் அரசியல் கூர்மைப் படுத்தப்பட்டு வருகிறது. தலித் விடுதலையை நோக்கிய நகர்வாக அதிகப்படியான தலித் இலக்கியங் கள் சாதி ஒழிப்பை மையமாக வைத்து இயங்கி வருவதைத் தமிழக அரசியல் சூழலில் நாம் காணலாம்.

பெண்ணியத்தின் ஒரு பகுதியாக இன்றைக்கு தலித் பெண்ணியம் முன்வைக்கப்பட்டுள்ளது. இதற்கான ஒரு விரிவான கருத்தரங்கையும், கருத்தியல் வடிவத் தையும் உள்ளடக்கிய 'தலித் பெண்ணியம்' என்கிற நூலை மதுரையில் இயங்கி வருகிற தலித் ஆதார மையம் வெளியிட்டு இருக்கிறது. அம்பேத்கர் பிறந்த மாதமான ஏப்ரல் மாதத்தை தலித் வரலாற்று மாதமாகக் கொண்டா டத் தொடங்கியுள்ளனர். அயோத்திதாசரின் சிந்தனைகள் பல்வேறு கோணங்களில் ஆய்வுக்கு உட்படுத்துகின்ற போக்கு தற்போது இருந்து வருகிறது. இவையெல்லாம் தலித் இலக்கியம், தலித் அரசியல் வளர்ச்சிக்கான உந்துதல் ஆகும்.

தலித் தலைமை என்பதுகூட தலித் கருத்தியலை உள்வாங்கிக் கொண்ட தலைமையாகவும், அதிலும் குறிப்பாக ஆகக் கடைசியில் ஒடுக்கப் பட்டிருக்கிற தலித் பெண் தலைமையே இந்திய மானுடத்தை விடுதலை செய்யக்கூடிய ஆற்றல் மிக்கதாக அமையும் என்பதும் காலத்தின் தேவையாக இருக்கிறது.

எனவே வருங்காலம் என்பது தலித்கள் அதிகாரத்தினை நோக்கி நகர்வதற்கான காலமாகவும், தலித் அதிகாரம் என்பது சாதி ஒழிந்த சமத்துவ உலகத்திற்கான அதிகாரமாகவும் அமையும் என்பதும் குறிப்பிடத் தக்கது.

வெண்மணியாயினும், விழுப்புரம் ஆயினும், மேலவளவு ஆயினும், கொடியங்குளமாயினும், திண்ணியமாயினும், கயர்லாஞ்சியாயினும், இது போன்று கனன்று கனிந்த தலித்களின் வலியை தலித் அல்லாத யாராலும் உணர முடியாது. மேலும் சாதிய வன்கொடுமைகள் நிறுத்தப்படுகின்றவரை தலித் இலக்கியத்தின் தேவையை யாரும் நிறுத்த முடியாது. இது காலத்தின் கட்டாயம்.

மார்க்சியக் கருத்தியல் என்பது கார்ல் மார்க்ஸ் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு இயங்குகிறது. உளவியல் கருத்தியல் என்பது ஃபிராய்ட் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு இயங்குகிறது. அதேபோல் தலித்தியக் கருத்தியல் என்பது அம்பேத்கரின் கோட்பாட்டை, சிந்தனையை அடி ஒட்டியே அமைய முடியும்.

●



# சேது சமுத்திரத் திட்டமும் இராமேசுவரம் தீவு மக்களும்– சில குறிப்புகள்

**குமரன்தாஸ்**

சேது சமுத்திரத் திட்டம், இன்றைக்கு பாரதிய ஜனதா கட்சி மற்றும் இந்து மதவெறி அமைப்புகளாலும், தமிழகத்தில் அ.தி.மு.க. தலைவி ஜெயலலிதா மற்றும் வட மாநிலத்து இந்துக்களாலும் எதிர்க்கப்பட்டு, அவ்வெதிர்ப்பின் வலிமைக்கு காங்கிரசு கட்சி பயந்துபோனதன் காரணமாக கிடப்பில் போடப்படும் நிலைக்கு வந்துவிட்டது எனலாம்.

சேது சமுத்திரத் திட்டத்தைப் பொறுத்தவரை பா.ஜ. கட்சி மற்றும் அ.தி.மு.க.விற்கு இருக்கும் எதிர்ப்பு அரசியல் உள்நோக்கம் கொண்டதாகும். இவர்களே முன்பு பல்வேறு சந்தர்ப்பங்களில் (தேர்தல் அறிக்கையில் இத்திட்டத்தை நிறைவேற்றுவதாக உறுதியளித்துள்ளனர்.) இத்திட்டத்திற்கு ஆதரவாக நின்றுள்ளனர். எனவே தற்போதைய எதிர்ப்பு என்பது உள்நோக்கம் கொண்டதே தவிர உண்மையானது அல்ல. இது தமிழக மக்கள் அனைவருக்கும் தெரிந்ததுதான்.

இவ்வெதிர்ப்புக்கான காரணங்களாக, தி.மு.க. + காங்கிரஸ் கூட்டணி, இத்திட்டத்தை நிறைவேற்றிப் புகழ் பெற்றுவிடுவர் என்ற பொறாமைதான் எனச் சிலர் கூறுகின்றனர். மற்றொரு காரணமாக, சிங்கள அரசுக்கு (இலங்கை) ஏற்படும் அந்நியச் செலாவணி இழப்பைத் தடுக்கும் கைக்கூலிகளாக இவர்கள் இருக்கிறார்கள் என்று வேறு சிலர் கூறுகிறார்கள்.

நமக்கு இந்தக் கூற்றுகளை மறுத்துச் சொல்ல ஏதும் இல்லை. அதே சமயம் எதிர்க்கின்ற பிரபலங்கள் பலரும் பார்ப்பனர்களாக (வாஜ்பாய், வேதாந்தி, இல.கணேசன், எச்.ராஜா, ஜெயலலிதா, சோ, சுப்ரமணிய சுவாமி, மாலன், வாசந்தி போன்றோர்) அல்லது பார்ப்பனிய தாசர்களாக (வைகோ, விஜயகாந்த், சரத்குமார், ரஜினிகாந்த்) இருப்பதன் காரணம்தான் என்ன? என்பதும், ஆதரிப்போர் பலரும் திராவிட இயக்கத்தவராகவோ நாத்திகராகவோ அல்லது பொதுவுடைமை இயக்கத்தினராகவோ இருப்பதன் பின்னணி என்ன? என்பதும் சிந்திக்கத்தக்கதாகும்.

இக்கட்டுரை, ஆதரிக்கும் அல்லது எதிர்க்கும் பிரபலங்கள் பற்றியதல்ல. மாறாக, பா.ஜ.க., ஆர்.எஸ்.எஸ். போன்ற மதவெறி அமைப்புகளின் பின்னால் திரண்ட சாதாரண மக்கள், சாதுக்கள், இந்துக்கள் போன்றோரது உணர்வுக்கு 'இராமர் பாலம்' என்று இன்று சொல்லப்படக்கூடிய ஆதம்பாலம் என்ற மணல்திட்டு அமைந்திருக்கக் கூடிய இராமேசுவரம் பகுதியைச் சேர்ந்த பார்ப்பனர் + தமிழர்களின் கடந்தகாலப் பங்கு எவ்வாறு காரணமாக விளங்குகிறது என்பது பற்றியதாகும்.

இதனைப் புரிந்து கொள்வதற்கு இராமேசுவரம் தீவு குறித்தும் அங்கு வாழும் மக்களது நிலை குறித்தும் மிகச் சுருக்கமாகவாவது தெரிந்து கொள்வது அவசியம்.

சுற்றிலும் கடலால் சூழப்பட்ட இராமேசுவரம் தீவு 61.08 ச.கி.மீ பரப்பளவு கொண்டது. 1989 வரை வெளியுலகத் தொடர்பு என்பது புகைவண்டி மற்றும் நீர்வழிப்படகு, லாஞ்ச் என்று சொல்லப்படும் விசைப்படகு மூலமாகத்தான்.

1989இல் 'இந்திரா காந்தி பாலம்' என்ற தரைப் பாலம் திறக்கப்பட்ட பிறகு பேருந்து மற்றும் இதர வாகனங்களின் போக்குவரத்து துவங்கியது.

இராமேசுவரம் தீவின் ஓரங்களில் 20க்கும் மேற்பட்ட மீனவக் கிராமங்கள் உள்ளன. (அவை பாம்பன், குந்துகால், அக்காமடம், தங்கச்சிமடம், வடகாடு பர்வதம், மாங்காடு, சம்பை, ஓலைக்குடா, பிசாசுமுனை, கரையூர், புதுரோடு, அரியான்குண்டு, தண்ணீர் ஊற்று, தனுஷ்கோடி, மெய்யம்புலி, சுடுகாட்டம்பட்டி, ஏரகாடு, நரிக்குழி, சங்குமால், சேராங்கோட்டை, நாலுபனை, முகுந்தூராயர் சத்திரம் ஆகியவை.) இக்கிராமங்களில் முத்தரையர் (வலையர்) கோனார், கரையாளர், பட்டங்கட்டியர் (கடையர்) பரதவர் போன்றவர்கள் வாழ்கின்றனர். கடையர் (கிறிஸ்தவர்), பரதவர் (கிறிஸ்தவர்) இவர்களில் கடையர் கரை ஓரங்களிலும் பரதவர் ஆழ் கடலிலும் மீன்பிடிக்கும் சாதிகளாவர். மேற்காணும் அனைவரும் உழைக்கும் சாதிகளாவர்.

தீவின் மையத்தில் கோவிலைச் (அகில இந்தியப் புகழ்பெற்ற 'இராமநாதசுவாமி' -ராமன் வழிபட்ட சிவன் கோவில்) சுற்றி முதல்வட்டத்தில் (1ஆவது வார்டு) பார்ப்பனர்கள் சூழ்ந்துள்ளனர். இதில் மகாராஷ்டிரப் பார்ப்பனர், தமிழ்ப் பார்ப்பனர் என்ற இருபெரும் பிரிவுகள் உண்டு. இவர்கள் தவிர உடுப்பி பிராமணர், கொங்கனி பார்ப்பனர் போன்றோரும் உள்ளனர். விங்காயத்துக் குடும்பமும் அவர்களுக்கான மடமும் இருக்கின்றன. சரியாகச் சொல்வதானால் ஒவ்வொரு மாநிலத்தைச் சேர்ந்தோருக்கும் இராமேசுவரத்தில் பூசை, காரியங்கள் செய்து வைக்கத் தனித்தனிப் பார்ப்பனர்களும் மடங்களும் உள்ளன.

இவை தவிர 1989க்குப் பிறகு புதிதாக பல டிரஸ்ட்களும், பிற மாநிலத்தவர்களுக்கான லாட்ஜ்களும் பெருகியுள்ளன. அதுபோலவே 1989க்கு முன் ஒரே ஒரு கடையாக இருந்த 'பாம்பே மீல்ஸ்' இன்று பலவாகப் பெருகிவிட்டது.

இவ்வாறு ஹோட்டல் நடத்த வந்த ராஜஸ்தானி மார்வாரிகள் இன்று இடமும் (முக்கிய வீதிகளில்) கடையும் வாங்கி மொத்த வியாபாரிகளாக மாறியது தனிக்கதை. ஒரே ஒரு செய்தி மட்டும், இவர்கள் முதலில் ஹோட்டல் வைத்திருந்த போது இடைநிலைச் சாதியினர் பிற மாநில யாத்ரீகர்களை இவர்களது கடைகளில் சாப்பிட விட்டு கமிசனும் வாங்கி, ஓசியில் சப்பாத்தியும் சாப்பிட்டு வந்தனர். பிறகு இவர்களுக்கு (மார்வாரிகளுக்கு)ப் பாதுகாவலர்களாகவும், இடம் வாங்கிக்கொடுப்பதில் புரோக்கர்களாகவும், இன்று இவர்களது ஹோல்சேல் கடைகளில் யாத்ரீகர்களைக் கொண்டுவிட்டு கமிசன் வாங்குபவர்களாகவும் விளங்குகின்றனர். இந்தக் கமிசன் வாங்குவதில் சாதி பலம், அதிகாரம், அராஜகம் எல்லாமும் உண்டு.

இந்த விதமான வெளி மாநில மடங்கள், டிரஸ்ட்கள், மார்வாரிகள் எல்லோரும் தீவில் வளரும் R.S.S., இந்து முன்னணி, பா.ஜ.க போன்ற

அமைப்புகளுக்கு உரமாக விளங்குகின்றனர்.

இவையெல்லாம் கோவிலைச் சுற்றிய முதல் வட்டத்திலே அமைந்துள்ளன. அடுத்த வட்டத்தில் பிள்ளைமார் (வெள்ளாளர்), கோமுட்டிச் செட்டியார், மஞ்சப்புதூர் செட்டியார், அகமுடையார், (முக்குலத்தோரில் ஒரு பிரிவினர் - சேர்வை) மறவர், நாடார், இசுலாமியர் வாழ்கின்றனர். அடுத்து சேவைச் சாதியினரான வண்ணார் தெரு, மருத்துவர் (அம்பட்டர்) தெரு என இன்றும் ஒவ்வொரு சாதியினரும் தனித்தனிப் பகுதிகளில் குழுமி வாழ்கின்றனர். தீவில் விவசாய நிலம் இல்லாத காரணத்தால் விவசாயக் குடிகளான தேவேந்திரர் (பள்ளர்), ஆதிதிராவிடர் (பறையர்) இருவரும் கிடையாது. துப்புரவுப் பணி நிமித்தம் அருந்ததியர் மட்டுமே கணிசமான எண்ணிக்கையில் தனியே ஊரின் எல்லைகளில் காலனிகளில் வாழ்கின்றனர். 1989க்குப் பிறகு மீன்பிடித் தொழில் சார்ந்து தேவேந்திரரும் ஆதிதிராவிடரும் குறைந்த எண்ணிக்கையில் குடியேறி உள்ளனர்.

அதுபோல இசுலாமியத் தெருவும் பள்ளியும் ஒரு குறிப்பிட்ட பகுதியில் அமைந்துள்ளன. இசுலாமியரில் மரைக்காயர் (மரக்கல ராயர்) என்போர் வசதியான பிரிவினராக உள்ளனர். பிறர் கறிக்கடை, சங்கு குளிப்பது, சுத்தம் செய்வது, புரோட்டாக் கடை எனப் பல்வேறு வேலைகளைச் செய்து வருகின்றனர். முன்பு இசுலாமியரில் பெரும் வணிகர்கள் இராமநாதபுரம் பகுதியை ஆட்சி செய்த பாளையக்காரரான சேதுபதிகளோடு நெருக்கமாக இருந்ததின் காரணமாக இராமநாத சுவாமி கோவில் அறங்காவலர் குழுவில் இருந்ததாகவெல்லாம் செய்திகள் உண்டு.

இன்று இராமநாதசுவாமி கோவில் கருவறைக்குள் சென்று பூசை செய்விக்கும் உரிமை- அதிகாரம் மகாராஷ்டிரப் பார்ப்பனர்களுக்கு மட்டுமே உள்ளது. தமிழ்ப் பார்ப்பனர்களுக்குக் கிடையாது. (விதிவிலக்காக நேப்பாள மன்னர் குடும்பத்தினர் மட்டும் கருவறைக்குள் செல்லலாம் என்று சொல்லப்படுகிறது.) இந்த மகாராஷ்டிர பிராமணர்கள் சேதுபதிகளால் அழைத்து வரப்பட்டு இவ்வாறு அதிகாரம் கொடுக்கப்பட்டவர்கள். அதற்கு முன்பு வரை பண்டார சன்னதிகள் என்று சொல்லப்படுகின்ற வீரசைவர்கள்தான் கோவில் (இராமநாத சுவாமி) சிவனுக்குப் பூசை செய்தார்களாம். தற்போது இவர்கள் பூக்கடை வைத்து நடத்திக் கொண்டிருக்கும் மிக நசிந்த சிறுபான்மைச் சாதியினர்.

தமிழ்ப் பார்ப்பனர்கள் மகாராஷ்டிரப் பார்ப்பனர்களுக்கு உதவியாளர்களாகப் பணி செய்கின்றனர். மேலும் உப தெய்வங்களான பிள்ளையார், முருகன், அனுமார் கோவில் பூசாரிகளாக இருக்கின்றனர். மடப்பள்ளிகளில் சமையல்காரர்களாக இருக்கின்றனர்.

மகாராஷ்டிரா பார்ப்பனக் குடும்பங்களுக்குப் பின்னே சூடத்தட்டை தூக்கிக்கொண்டு சுவாமி வீதிவுலாவின்போது செல்பவர்களாகவும், சிவிகை என்று சொல்லப்படக்கூடிய சிறிய பல்லக்கை (கனம் குறைவானது) உலக்கை போன்ற கம்பு கொண்டு தோளில் தூக்கிச் செல்வது போன்ற வேலைகளைச் செய்கின்றனர். மிகக் கனமான பெரிய கேடகங்களை, வாகனங்களை, பல்லக்குகளை ரதவீதிகளில் தோள் கடுக்கத் தூக்கிச் சுமப்பவர்கள் முத்தரையர்களும் அகமுடையாரில் ஒரு பிரிவினரும் (பல்லக்குத் தூக்கிச் சேர்வை) ஆவர்.

சுவாமி, அம்பாள் சன்னதிகளில் குருக்களாக இருக்கும் மகாராட்டியப் பார்ப்பனர்களுக்கு, துணைத்தெய்வங்களின் பூசாரிகளான தமிழ்ப் பார்ப்பனர்களை விட வருமானம் அதிகம். உண்டியலில் விழும் காணிக்கைகள் இந்து அறநிலையத் துறைக்குப் போகும். தட்டில் (தீபாரதனைத் தட்டில்) விழும் காணிக்கை பார்ப்பனருக்குச் சேரும். இவ்வாறு தட்டில் விழும் காணிக்கைகளை உண்டியலில் எடுத்துப் போடுவதற்கு என்றே பாராக்காரர்களை (காவலர்கள்) நியமித்துள்ளது தேவஸ்தான நிர்வாகம். ஆனால் உண்டியலில் எடுத்துப்போடாமல் ஐயரை எடுத்துக் கொள்ள விட்டு அதில் பங்கு (கமிசன்) வாங்கிக் கொள்வர் பாராக்காரர்கள். பாராக்காரர்களும் முத்தரையர் மற்றும் அகமுடையார், பிள்ளைமார் சாதிகளைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வாரிசு அடிப்படையில், பல்லக்குத் தூக்கிகளைப் போலவே தொடர்ந்து வருகின்றனர்.

இவ்வாறு அதிக வருமானம் கிடைக்கக்கூடிய குருக்கள் பணிக்குத் தமிழ்ப் பார்ப்பனர் வரமுடியாதவாறு சாதி தடையாக உள்ளது. மகாராட்டிரப் பார்ப்பனரில் சிருங்கேரி சங்கராச்சாரியிடம் தகுதிச்சான்றிதழ் பெற்று வருபவர் மட்டுமே குருக்களாவர். தமிழ்ப் பார்ப்பனர்களுக்கு குரு காஞ்சி மடாதிபதிகளான ஜெயந்திர, விஜயேந்திர சரஸ்வதிகளாவர். இவர்களை சங்கராச்சாரிகளாகவோ இவர்களது சங்கர மடத்தை சங்கரமட பீடங்களில் ஒன்றாகவோ மகாராஷ்டிரர்கள் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதில்லை.

அடுத்து ராமேசுவரம் கோவில் நந்தவனங்களையும் பசுப்பட்டிகளையும் பராமரிப்பதும் முத்தரையர்கள்தான். இவ்வாறு கோவிலை ஒட்டி கணிசமான எண்ணிக்கையில் நேரடிப் பணியாளர்களும் மறைமுகப் பணியாளர்களாக ஆயிரக்கணக்கானவர்களும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

மறைமுகப் பணியாளர்களிலும் முதலில் பார்ப்பனர்கள் வருகிறார்கள். வெளிமாநிலங்கள், வெளியூர்களில் இருந்து வந்து தம் முன்னோர்களுக்கு இறுதிச் சடங்குகளை (திவசம்) செய்யவிரும்புபவர்களுக்கு அதைச் செய்விப்பதன் மூலம் தினசரி பலநூறு பார்ப்பனர்கள் ஆயிரக்கணக்கில் சம்பாதித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இதில் கைதேர்ந்த பண்டா ஒருவர் தனக்குக் கீழே பல பார்ப்பன(மகாராஷ்டிர)ர்களை வைத்து யாத்ரீகர்களுக்கு சடங்குகளைச் செய்வித்து லட்சக்கணக்கில் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். இச்சடங்கில் தலைக்கணக்கிற்காகக் கலந்துகொள்ளும் பார்ப்பனருக்கு சடங்கொன்றிற்கு ரூ.200உம், வேட்டி, துண்டு, சாப்பாடு எனவும் கிடைக்குமாம். ஒரேநாளில் 2 சடங்குகள் கூட நடைபெறும். அடுத்து இதுபோன்ற யாத்திரீகர்களை அழைத்துவந்து இவர்களிடம் விடும் யாத்திரைப் பணியாளர் (இடைநிலை, ஆதிக்க சாதியினர்) பண்டாவிடம் கமிசன் வாங்குவர். அடுத்து, தங்கும் லாட்ஜ், உண்ணும் உணவகம், பிறகு பொருட்கள் வாங்கும் கடைகள் என எல்லா இடங்களிலும் கமிசன் வாங்கிவிடுவர்.

இந்த யாத்திரைப் பணியாளர் என்போர் சுமார் 500 பேர் நிரந்தரமாக இருக்கின்றனர். இவர்களுக்கென்று ('அகில இந்திய யாத்திரைப் பணியாளர் சங்கம்' எனப்) பதிவு செய்யப்பட்ட சங்கம் இருக்கிறது. இவர்களில் 18 உட்பிரிவுகள் உண்டு. வடநாட்டு (இந்துஸ்தானி) யாத்திரீகர்களுக்கு வழிகாட்டி, பார்ப்பனர் உதவியோடு பூசை செய்து வைப்போர், ஆலய வழிகாட்டிகள் - இப்படி பிரிவுகள். இவர்களில் கீழ்மட்டத்தில் இருப்போர் வருகின்ற யாத்ரீகர்களுக்கு 22 கிணறுகளில் (தீர்த்தம்) இருந்து தண்ணீர் இறைத்து ஊற்றும் (உழைப்பாளிகள்) பிரிவு.

இராமேசுவரம் கோவிலுக்குள் பல்வேறு இடங்களில் குளங்களும் கிணறுகளும் இருக்கின்றன. இவற்றையே 22 தீர்த்தங்கள், இவற்றில் குளித்தால் புண்ணியம் என்று இந்தியா முழுதும் இருந்து வரும் பிற மாநில மற்றும் தமிழ்நாட்டு மக்கள் நம்பி, அன்றாடம் குளித்துக்கொண்டிருக்கின்றனர். இதற்கு தேவஸ்தானத்திற்கு கட்டணம் (டிக்கட்) செலுத்த வேண்டும். இதில் யாத்திரைப் பணியாளருக்குப் பங்குண்டு. இறைத்து ஊற்றுகின்றவருக்கு, உணவகங்களில் 'டிப்ஸ் (சர்வருக்கு) கொடுப்பது மாதிரி கொடுக்கவேண்டும். சர்வர் யாரும் அதிகாரமாகக் கேட்பதில்லை. இவர்கள் அதிகாரமாகவும் கேட்பர்.

இவ்வாறுள்ள இந்த யாத்திரைப் பணியாளர் சங்கத்திலும் சேர்வை, பிள்ளைமார், முத்தரையர் போன்ற சாதியினர் உறுப்பினர்களாக உள்ளனர். தலைவர் எப்போதும் சேர்வைதான். இச்சாதியினர் கட்டுப்பாட்டிலேயே இச்சங்கம் இயங்குகிறது. ஒருகாலத்தில் முத்தரையரைச் சேர்க்க மறுத்ததும் உண்டு. இச்சங்கத்தில் சேர்வதற்குத் தாழ்த்தப்பட்ட மற்றும் பிற சேவைச் சாதியினரான அம்பட்டர், வண்ணார் போன்றோருக்கு அனுமதி இல்லை.

உறுப்பினர்களுக்கு டோக்கன் (மெம்பர் கார்டு) உண்டு. வாரிசுப்படிதான் வரமுடியும். வாரிசு இல்லாதோர் அல்லது பிற காரணங்களால் (கடன் தொல்லை, வட்டித்தொல்லை) இந்த டோக்கனைப் பிறருக்கு (பல லட்ச ரூபாய்க்கு) விற்று விட்டுச் செல்வர். அவ்வாறு வாங்குபவர் யாத்திரைப் பணியாளர் சங்கத்தினருக்கு ஏற்புடையவராக இருக்க வேண்டும். எல்லோரும் வாங்கிவிட முடியாது. குறிப்பாக ஆதிக்கச் சாதி சேர்வைகளைப் பகைத்துக்கொண்டு யாரும் சங்கத்தில் இருக்க முடியாது.

இச்சங்கத்தினரும் பார்ப்பனரும் கூட்டாகச் செயற்பட்டே சம்பாதிக்கின்றனர். இக்கூட்டு கடந்த நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இப்பகுதியில் நிலவுகிறது. கடந்த 100 ஆண்டுகளில் இந்தியாவின் பல்வேறு பிரதேசங்களிலும் இருந்து வந்த இந்துக்களுக்கு அவரவர் மொழியில் பார்ப்பனரும் இவர்களும் சொன்ன கதைகள் மிக முக்கியமானவை. அக்கதையில் ஒன்று ''இராமேசுவரத்தில் உள்ள சிவனை வழிபட்ட பின்புதான் இராமன் அவன் தம்பி லட்சமணனுடன் வானரங்கள் உதவியோடு இங்கிருந்து பாலம் கட்டி இலங்கை சென்று சீதையை மீட்டுவந்தான்'' என்பதாகும். பார்க்கச் சாதாரணமாகக் காணப்படும் படிக்காத யாத்திரைப் பணியாளர்கள் பல மொழிப் பேச்சாளர்களாவர். நேப்பாளி, ஒரியா, பெங்காளி என எல்லா மொழிகளும் பேசுவர். இவ்வாறு பேசிப் பேசியே இவர்கள் இந்தியா முழுதும் உள்ளவர்களுக்குப் பரப்பிய கதைகளும் குருட்டு நம்பிக்கைகளும் அதிகம். எழுத்து, புத்தகங்கள் மூலம் பரவிய கதைகள் குறைவாகத்தான் இருக்கும்.

இவ்விடத்தில் பார்ப்பனர்களுக்கும் இடைநிலைச் சாதியினருக்கும் உள்ள கூட்டு, வருமானத்தில் பங்கு போன்றவை அரசியல் கூட்டாகவும் மாறிப்போயுள்ளதைப் பற்றியும் கூறத்தான் வேண்டும். வடநாட்டினர் தங்கள் இறந்த முன்னோருக்குச் செய்யவேண்டிய கடன்களை தங்கமாகவும், வெள்ளியாகவும் பசு மாடாக (கோதானமாக)வும், துணிமணியாகவும், பண மாகவும் பார்ப்பனர்களுக்கு அள்ளிக் கொடுக் கின்றனர். இதில் பூசை தவிர ஆலயத்தைச் சுற்றிக் காட்டியது, சாப்பிட உணவகங்களுக்கு, தங்கும் லாட்ஜுகளுக்கு அழைத்துச் சென்றது, தீர்த்த மாடியது, பூஜைகளுக்கான சாமான்கள் வாங்கிச் செல்வது என்ற அனைத்து வேலைகளையும் (எடுபிடி) செய்ததற்காகப் பார்ப்பனர் சூத்திரர் களுக்குப் (யா.பணி) பங்கு கொடுத்துவிடுவர். இந்த இருவரது கூட்டுதான் வருமானத்தின் வழி. இந்து மதப் பண்பாடு, இராமநாதசுவாமி கோவில் ஆகிய இரண்டும்தான் வருமானத்தின் அடிப் படை. எனவே இராமேசுவரம் தீவில் கோவிலைச் சுற்றியுள்ள இடைநிலைச்சாதி (சேர்வைகள் உள்ளிட்ட ஆதிக்கச் சாதி) யினருக்குக் கோவிலும் பார்ப்பனர்களும் இரு கண்கள். பார்ப்பனர் களுக்கோ இடை நிலைச்சாதியினர் காவல் அரண். இவர்களை மீறி பார்ப்பனரை யாரும் தொட்டுவிட முடியாது. இராமேசுவரத்தில் ஒருமுறை (1980 வாக்கில்) திராவிடர் கழகம் நடத்திய மாநாட்டிற் குப் பார்ப்பனரும் யாத்திரைப் பணியாளரும் கடும் எதிர்ப்பைத் தெரிவித்தனர். யாத்திரைப் பணி யாளர் சங்கத் தலைவர் (சேர்வை) தன் பரிவாரங்களுடன் சென்று மூடநம்பிக்கை ஒழிப்பு பிரச்சாரத்திற்காகச் செய்து வைத்திருந்த 'தேர்' போன்றவற்றை உடைத்துப் போட்டனர். காவல் துறை பாதுகாப்போடே மாநாடு நடத்தப்பட்டது.

இன்றைக்கும் இதுதான் நிலைமை. இராமேசுவரம் நகரத்தில் தி.க. வளர முடியாத நிலை. கம்யூனிஸ்ட் கட்சிகள் (சி.பி.ஐ, சி.பி.எம், ஏன் நக்ஸல்பாரி கட்சி கூட) இருக்க முடியும். பார்ப்பனர்களும் உறுப்பி னர்களாக, பொறுப்பாளர்களாக இருப்பர். ஆனால் தி.க வளர முடியாது. தி.மு.க.வே பலவீனமாகத் தான் இருக்கிறது. தி.மு.க.வை விட அ.தி.மு.க. பலமாக இருக்கும். அ.தி.மு.கவுக்குப் பார்ப்பனர் ஆதரவு உண்டு. தி.மு.க தலைமைப் பொறுப்பு தீவில் ஏதாவது ஒரு மைனாரிட்டி சாதியைச் சார்ந்தவரிடம் இருக்கிறது. அ.தி.மு.க.விற்கு முக்குலத்தோர் தலைமை. பா.ஜ. கட்சிக்குப் பார்ப்பனர் தலைமை. தீவைப் பொறுத்தவரை பார்ப்பனர்கள் கணிசமான எண்ணிக்கையிலும் (1ஆவது வார்டில் வெற்றிபெறுவது எப்போதும் ஆர்.எஸ்.எஸ். பார்ப்பனர்.) பொருளாதார ரீதியில் பலமானவர்களாகவும் இருக்கின்றனர். ஊரின் அதிகாரம் முக்குலத்தோரிடம் (1989 வரை சேர்வைகளிடமும் தற்போது சேர்வை + தேவர் கூட்டு அதிகாரம்) இருந்தாலும் அது பார்ப்பனர் நலனுக்கு விரோதமாகப் போகாது. இதுதான் இராமேசுவரம் நகரின் நிலமை. இந்த ஊருக்கு வரும் யாத்திரீகர்களிடம்தான் கோவிலைச் சுற்றி வாழும் (மத) நம்பிக்கைகளையும், தங்களது வாயையும் மட்டுமே மூலதனமாகக் கொண்டு வாழுபவர்கள் 'சேதுபந்தன்' என்ற ராமர்பாலக் கதையை கடந்த நூறு ஆண்டுகளுக்கும் மேலாகச் சொல்லி வருகின்றனர்.

இக்கதைக்கு வலு சேர்க்கும் மற்றொரு



பிரிவினரைப் பற்றியும் கூறவேண்டும். அவர்கள் ராமேஸ்வரம் கோவிலைச் சார்ந்து தம் பொருளா தாரத்தை வளர்த்துக்கொள்ளும் வணிகர்கள்.

இராமநாத சுவாமி கோவில் மேற்கு கோபுர வாயில் பிரகாரத்தினுள் 40 கடைகள் 100 ஆண்டுகளுக் கும் மேலாக இருந்து வருகின்றன. (இதில் 14 கடைகள் இசுலாமியருடையவை. இதனை ஆர்.எஸ்.எஸ். கும்பல் எதிர்த்து வருகிறது.) இது தவிர கோவில் ரதவீதிகளில் நூற்றுக்கணக்கான பெரிய+சிறிய கடைகள் இருக்கின்றன. இவ்வாறு கடைவைத்து நடத்த வசதியில்லாத ஏழைகள் தங்கள் கைகளில் சுமந்தே (நந்தா திரைப்படத்தில் சூர்யாவின் தாய் செய்வதுபோல) கடல் பாசி மாலைகள், சுவாமி படங்களை விற்றுப் பிழைக் கின்றனர்.

இக்கடைகளில் கடலில் இருந்து கிடைக்கும் சங்குப் பொருட்கள், பாசிப்பவளங்கள், அழகு சாதனப் பொருட்கள் எனப் பலவும் விற்கப் படுகின்றன. (இந்து மத நம்பிக்கை சார்ந்த சங்கு, வலம்புரிச் சங்கு குறித்து பிரிதொரு சமயம் பார்க்கலாம்.) எல்லாக் கடைகளிலும் தவறாமல் விற்கப்படும் ஒன்று இராமேசுவரம் கோவில் சாமி படங்கள், ஸ்தல புராண பட ஆல்பம் போன்றவை. (தற்போது அச்சிடப்பட்ட படங்களுக்கு மாற்றாக C.D வந்துவிட்டது.) இப்படங்களில் ஒன்று, ராமர் பாலம் கட்டி இலங்கை சென்று சீதையை மீட்க மேற்கொண்ட நடவடிக்கையை விளக்கும் படம். இதில் இலங்கையை நோக்கி ராமர் கையை நீட்டிக் கொண்டிருக்க, லட்சுமணன் அருகே நிற்க, வானரப் படைகள் கற்களைச் சுமந்து பாலம் அமைக்க, வானரப்படைகளின் தலைவன் அனுமன் மேற்பார்வை பார்ப்பதுபோல அச்சிடப் பட்டிருக்கும். படத்தில் அணில் ஒன்றும் இருக்கும். இப்படம் பற்றிய தர்க்க ரீதியான கேள்விகளை நாம் இங்கு கேட்கப்போவதில்லை.

நமது கவனமெல்லாம் இப்படம் இதுவரை சுமார் 100 ஆண்டுகளில் எத்தனை கோடி அச்சிடப் பட்டு வடநாட்டவர் வாங்கிச் சென்று தத்தமது வீடுகளில் மாட்டி வைத்திருப்பர் என்பது பற்றியதே.

ஏனென்றால், படிக்காத, கல்வியறிவு குன்றிய, உத்திர பிரதேசம், மத்தியப்பிரதேசம், பீகார் போன்ற மாநிலங்களில் இருந்து ஒரு மாதத்திற்கும் மேலாகப் பயணம் செய்து வரும் ஏழை விவசாயிகள் (மாசி மகாசிவராத்திரிக்கு) கங்கையி லிருந்து கொண்டுவரும் தண்ணீரை (தீர்த்தம்) இராமநாத சுவாமிக்கு அபிசேகம் செய்துவிட்டு இங்கிருந்து 'கோடி' தீர்த்தம் வாங்கிக்கொண்டு செல்வர். இப்பயணத்தில் வழியிலேயே இறந்து விடும் முதியோரும் உண்டு. (ராமேஸ்வரம் தீவில் இப்படிப் பலர் எரிக்கப்பட்டுள்ளனர்.) அவர்களது வாழ்நாள் லட்சியம் இராமேஸ்வரம் வருவது. ஆண்டுதோறும் வருபவர்களும் உண்டு. இவ்வாறு வருபவர்கள் இராமேசுவரத்தில் கிடைக்கும் சங்கு, சோளி, விபூதி, குங்குமம், குங்குலியம், கல்(!) மண்(!) என அனைத்தையும் மதிப்பு மிக்கதாகக் கருதி வாங்கிச் செல்வர். எந்தப் பொருளையும் வாங்காதவர்கள் (மேற்கு வங்க) வங்காளிகள் மட்டும்தான். தீர்த்தமும் ஆட மாட்டார்கள். வங்காளப் பார்ப்பனர் உட்பட தீவுக்கு வரும் அனைவரும் மீன் சாப்பிடுவார்கள். கோவிலைச் சுற்றியுள்ள வியாபாரிகள் சொல்லும் பொருட்களின் விலையை கால்வாசியாகக் குறைத்துக் கேட்பர். (எல்லோரும் வங்காளி களைத் திட்டுவர்.) அவ்வாறு வாங்கிச் செல்லும் பொருட்களில் ஒன்று நாம் மேலே குறிப்பிட்ட சேதுபந்தன் (ராமர் பாலம்) படம். விற்ற எம் தமிழர்களைப் பொறுத்தவரை காசு தரும் 'சரக்கு'. வாங்கிய வடநாட்டவருக்கு?

அடுத்து, கல்லையும் மண்ணையும் வாங்கிச் செல்வதாகக் குறிப்பிட்டேன். அதுவும் உண்மை தான். குறிப்பாக 'கல்'லைப் பற்றிக் கூறவேண்டும்.

தற்போது, கடந்த பத்துப் பதினைந்து ஆண்டு களாக இராமேஸ்வரத்தில் ஒரு மடத்தில் தண்ணீர் தொட்டியில் மிதக்கும் கல்லைக்காட்டி 'ராமர் பால'க்கல் என்று கூறி காணிக்கை பெறுகின்றனர். இது தினசரி பல ஆயிரம் ரூபாய் வரை குவிகின்றது.

முன்பு எங்களது சிறு வயதில் இதுபோன்ற சுண்ணாம்புக் கற்களை (பார்க்கப் பெரியதாக இருக்கும். கையில் எடுத்தால் மிக லேசாக இருக்கும்) சேகரித்து, அடுப்பில் இட்டு சுட்டு, இடித்து, வீடுகளில் கோலப் பொடியாகப் பயன்படுத்துவார்கள்.

இக்கற்களில் காற்றறைகள் மிகுந்திருப்பதால் தண்ணீரில் மிதக்கும் தன்மை உடையதாகும். இக்கற்களைக் காட்டித்தான் தற்போது பணம் பறிக்கின்றனர். சிறுசிறு கற்களை யாத்ரீகர்கள் வாங்கியும் செல்கின்றனர்.

இவ்வாறு இராமேசுவரம் தீவின் கல், மண், தண்ணீர் எல்லாம் புனிதமானவையாக வட நாட்டவரால் கருதப்படுமாறு கதை கற்பிக்கப் பட்டு வந்திருக்கிறது.

இராமேசுவரத்தவர் எந்தப் பொருளையும் விசேச மானது என்று கூறி விற்று விடும் வல்லமை படைத்தவர்கள். இதற்கு ஒருசில உதாரணங்கள் கூறலாம்.

முன்பு களிமண் உருண்டைகள் (விருமண்டக் கட்டி), நாமக்கட்டி போன்றவை அதிக அளவில் விற்றன. இந்தக் களிமண் உருண்டைக் கட்டி களை மருந்துப் பொருட்களாக கருதி வாங்கிச் சென்றனர். நெற்றியில் நாமம் இடுவதற்கான கட்டிகளும் பல வீடுகளில் தயாரிக்கப்பட்டன.

'கனவாய்' என்று ஒரு மீன் வகை உண்டு. அதன் உடலில் ஒரு ஓடு இருக்கும். இதனைக் கழுவி சுத்தம் செய்து 'காணுக்கதவாய்', 'பிச்சுக்கதவாய்' என்று சிறுவர் சிறுமிகள் வடநாட்டு ஏழைகளிடம் விற்பர்.

இக்கனவாய் ஒட்டை உரசி காதுவலிக்கு மருந்தாக ஊற்றலாம் என்று கூறித்தான் விற்கப்பட்டன. (காது என்னத்துக்கு ஆவது? இப்படி விற்ற சிறுவர் கூட்டத்தில் நானும் உண்டு.) இவ்வாறு, தங்களது வாழ்நாள் உழைப்பையெல்லாம் இராமேசுவரத்தில் கொண்டுவந்து கோவில் உண்டியலிலும் கல்லிலும் மண்ணிலும் கொட்டிவிட்டுச் செல்லும் ஏழைகள் நிறைய.

தங்களது தொழில் நிறுவனங்களில் உள்ள உழைப்பாளர்களையெல்லாம் சுரண்டி, அவர்கள் கேட்கும் ஐந்துரூபாய், பத்துரூபாய் கூலி உயர்வையெல்லாம் எதிர்த்து, அவர்களது வயிற்றில் அடிக்கும் குசராத்திகள், மார்வாரி சேட்டுக்கள், கோவை, சென்னை, மும்பை போன்ற பெருநகரங்களில் தொழில் செய்யும் பணியாக்கள் போன்றோர் இராமேசுவரம் வந்து பல பத்துநாட்கள் தங்கி, ராம லீலா, கிருஷ்ண லீலா கதாகாலட்சேபங்கள் நடத்தியும், பார்ப்பனர்களுக்கும் கோவிலுக்கும் பல லட்சங்களை தட்சிணையாகச் செலுத்தியும் வியாபாரிகளது வார்த்தைகளை நம்பி 'வலம்புரிச் சங்கு' போன்றவற்றைப் பல லட்சங்கள் கொடுத்து வாங்கியும் செல்வதும் உண்டு.

இவ்வாறு வந்துபோனவர்கள்தான் இன்று வட நாட்டில் பா.ஜ.க, ஆர்.எஸ்.எஸ். ஆதரவாளர்களாக, அழைப்புக்கு செவி மடுக்கும் திரளினராக இருக்கின்றனர். இந்தத் திரட்சிக்கு இராமேசுவரம் தீவு (கோவிலைச் சுற்றி வாழும்) மக்கள் ஏதோ ஒரு விதத்தில் காரணமாகிவிட்டனர்.

இத்தவற்றில் பார்ப்பனருக்கும் இடைநிலைச் சாதியினருக்கும் பங்குண்டே தவிர உழைக்கும் தாழ்த்தப்பட்ட - மிகப் பிற்படுத்தப்பட்ட மக்களுக்குப் பங்கு இல்லை. தீவு மக்களை இவ்வாறு இருக்கவிட்ட வகையில் தமிழக அரசிற்கும் இது வரை ஆண்டவர்களுக்கும் பங்குண்டு எனலாம்.

இராமநாதபுரம் மாவட்டம் என்பது பின்தங்கிய வறட்சி மாவட்டம். வானம் பார்த்த பூமி. இம்மாவட்டத்தில் தொழிற்சாலையோ, தொழில் பேட்டையோ எதுவும் இல்லை. பண்டைய தமிழ் இலக்கியங்களின் நிலவியல்படி 'நெய்தல் திரிந்து பாலையானது' என்ற வகைப்பாட்டில் அடங்கும் பகுதியாகும் இது. நெய்தலுக்கே உரிய, தங்கள் உயிரைப் பணயம் வைத்து ஆழ்கடலோடி மீனும், சங்கும், முத்தும் கொண்டுவரும் கடும் உழைப்பாளர்களும், பாலைக்குரிய உழைப்பில் ஈடு படாத, பிறர் உழைப்பை, உழைப்பின் பயனை (வழிப்பறி) அபகரிக்கும் கள்வர்களும் வரலாற்று ரீதியாக ஒருங்கே வாழ்ந்துவந்த மாவட்டம் இது.

இந்தப் போக்கு பெரிய அளவில் மாறுபடாமல் இன்றும் தொடரும் பகுதி இது. இறால் ஏற்றுமதியையும் அதனால் வரும் அந்நியச் செலாவணியையும் மையங்கொண்டு லாப நோக்குடன் விசைப்படகு மீனவர் இறால் பிடிப்பிற்கு முக்கியத்துவம் கொடுத்து கொல்லிமடி, (மடி=வலை) இரட்டை மடி போன்றவற்றைப் பயன்படுத்தியதன் காரணமாக இயற்கைவளம் கெட்டு மீன் உற்பத்தி குறைந்து போனதாலும், ஈழ விடுதலைப் போரின் காரணமாக இலங்கை, இந்தியக் கடற்கடையினரால் தாக்கப்படுவதனாலும், மீன்பிடிப்புக்கும் தங்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாத ஆதிக்கச் சாதியினர் விசைப்படகு உரிமையாளராகவும், மீன் வியாபாரிகளாகவும், மீனவர் சங்கத் தலைவர்களாகவும், வட்டிக்குக் கடன் கொடுத்துச் சுரண்டுபவர்களாகவும் கடற்கரையில் நுழைந்ததாலும் இன்று மீன்பிடித் தொழில் கடும் நசிவுக் குள்ளாகிவிட்டது.

இதுவரை தமிழகத்தை ஆட்சி செய்தவர்கள் மீனவர்களது மேம்பாட்டிற்காக உருப்படியாக எதையும் செய்யவில்லை. ஆக, உழைப்பாளர் (மீனவர்) நிலை இப்படிப் போனதால் தீவு இன்று பாலை நிலத்திற்குரிய 'வழிப்பறி'யை மட்டும் தொடர்ந்து செய்து வருகிறது. வழிப்பறியின் வழிமுறை மட்டும் கால மாறுபாட்டுக்கு ஏற்ப மாறியிருக்கிறது. தீவிற்குள் நுழையும் யாத்ரீகர்கள் எவரும், பார்ப்பனர் முதல் இடைநிலைச் சாதியினர் வரையிலான கோவிலை (ராமனை) மூலதனமாகக் கொண்டோருக்கு காணிக்கை/ தட்சணை கொடுக்காமல் தப்பமுடியாது.

இன்று சேது சமுத்திரத் திட்டம் கிடப்பில் போடப்படுவதற்கான மறைமுகக் காரணமாக விளங்கிய இக்கூட்டணி (பார்ப்பனர் + இடை நிலைச்சாதி)யினர் நாளை தமிழக அரசு இக் கோவில் தொடர்பான முற்போக்கான, நவீன மாறுதலைச் செய்தால்கூட அதையும் நேரிடையாக எதிர்ப்பவர்களாக நிற்பர்.

ஏன், அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராகலாம் என்ற அரசின் அறிவிப்பைக்கூட இராமேசுவரத்தில் இராமநாதசுவாமி கோவிலில் நடைமுறைப்படுத்த முடியுமா? என்பதை யோசித்துப் பாருங்கள்.

ஆட்சியாளர்களுக்கும்கூட சரியான கண்ணோட்டம் இல்லையோ என்றே தோன்றுகிறது. சேது சமுத்திரத்திட்டம் வந்தால் தென்மாவட்ட மக்களுக்கு வேலைவாய்ப்பு கிட்டும், மாவட்டம் வளம் பெறும் என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஏற்கனவே தீவைப் பொறுத்தவரை கோவிலைச் சார்ந்திருப்போர் வளமாகத்தான் இருக்கின்றனர். மீனவர்கள்தான் நலிவடைந்து போயிருக்கின்றனர். சேது சமுத்திரத் திட்டத்தை ஒட்டி கிடைக்கக்கூடிய டெண்டர், கண்ட்ராக்ட், அல்லது இன்னும் பிறவற்றை பணபலம் படைத்த நகர்ப்புறத்தைச் சார்ந்தவர்களே அனுபவிக்கவும் தங்கள் பொருளாதாரத்தை மேலும் வளர்த்துக் கொள்ளவும் முடியும்.

சேதுசமுத்திரத்திட்டத்தால் ஏதேனும் பாதிப்பு வருமானால் அது இவர்களைப் பாதிக்காது. ஆனால் மீனவத் தொழிலாளிகளுக்கு, சிறிய மீனவர்களுக்கு என்ன விதமான பாதிப்பு வரும் என்று இன்னும் முழுமையாகத் தெரியவில்லை. தீவு மீனவர்கள் அச்சத்தின் காரணமாகவே இன்று எதிர்த்துக்கொண்டிருக்கிறார்கள். இவர்களது அச்சத்தில் நியாயம் இல்லாமலும் இல்லை. உதாரணமாக ஒவ்வொரு மீனவக் கிராமத்திலும் 'சேதுக்கால்வாய்-மாற்றுத் தொழிற்பயிற்சித் திட்டம்' என்ற பெயரில் மீனவர்களுக்கு இலவசமாக பல்வேறு (மீன்பிடித் தொழிலோடு தொடர்பில்லாத) தொழிற்பயிற்சிகளை அளிக்கத் துவங்கியுள்ளார்கள். இவை உணர்த்துவது என்ன? நாளை ஒருவேளை மீன்பிடித் தொழிலிலிருந்து வெளியேற்றப் படலாம். (நந்திகிராம் போன்ற சிறப்புப் பொருளாதார மண்டலங்களை ஒட்டியும் இது போல் பயிற்சிகள் அளிக்கப்பட்டதாக அறிகிறோம்.

ஏற்கனவே இராமேசுவரம் தீவு பேரூராட்சி (நகரம்-கோயிலும் கோயில் சார்ந்த சுற்றுப்புறமும்) எல்லைக்கு வெளியே உள்ள மீனவக் கிராமங்களது வீடுகளுக்கு நிலையான பட்டா வழங்கப் படவில்லை. அரசு புறம்போக்கு என்றே வைத்துக் கொண்டு வருகின்றனர். வந்தேறிப் பார்ப்பனர்களுக்கு, ஆதிக்க இடைநிலைச் சாதியினருக்கு எல்லாம் பட்டா வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால் மண்ணின் மைந்தர்களான, தீவின் பூர்வ குடி மக்களான மீனவர்களுக்கு (கடையர், வலையர், கரையர், பரதவர்), ஆண்டாண்டு காலமாக உழைத்து இந்திய அரசுக்கு அந்நியச் செலாவணியை அள்ளித்தந்த மக்களுக்கு புறம்போக்குக் குடியிருப்பும் நிலையற்ற வாழ்வும். திருடர்களுக்கும், சுரண்டல்வாதிகளுக்கும், கந்துவட்டிக்காரர்களுக்கும், எத்தர்களுக்கும் உத்திரவாதமான சுகவாழ்வு. இதுதான் இன்றைய நிலமை. இன்று உள்ள அறிகுறிகள் சேதுசமுத்திரத் திட்டம் மீனவர் வாழ்வில் மேலும் பாதிப்புகளை ஏற்படுத்துவதோடு கோவில் சார்ந்த பின்தங்கிய, பிற்போக்குப் பழமைவாத பொருளாதார விஷச் சூழலின் மீது எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தாமல், வருங்கால இளைஞர்களையும் இதற்குள்ளாகவே உழலவிட்டு பார்ப்பனர்களுக்கும் பார்ப்பனியத்திற்கும் அடியாட்களாகவே தொடரும் படிச் செய்துவிடுமோ என்று கவலைப்பட வேண்டி உள்ளது.

'ஒரு வர்க்க சமூகத்தில் அரசு என்பது ஆளும் வர்க்கக் கருவி' என்பது மார்க்சியம் கற்றுத்தரும் பாலபாடம். எனவே அரசு கொண்டுவரும் ஒரு திட்டம் ஆளும் வர்க்கத்தின் நலனுக்கானதாகவே அமையும். ஆனால் அரசும் ஆளுவோரும் இதனை மக்களிடம் வெளிப்படையாகச் சொல்ல முடியாது. வேறுமாதிரியாக, மக்களுக்கு இத்திட்டத்தால் இன்னின்ன பயன்கள் கிட்டும் என்றே கூறுவர். (எ.டு. நந்திகிராம், சிறப்புப் பொருளாதார மண்டலங்கள்.) ஆனால் இந்தியச் சமூகம் வர்க்கச் சமூகமாக மட்டுமில்லாமல் சாதியச் சமூகமாகவும் இருக்கிறது. பார்ப்பனரல்லாதார் ஆர்வத்தோடு கொண்டுவரும் திட்டத்தைப் பார்ப்பன(க்கூட்சியின)ர் எதிர்க்கும்போது நமக்கு ஏன் என்ற கேள்வி வந்துவிடுகிறது.

ஐரோப்பாவில் முதலாளியத்தின் வளர்ச்சிக் கட்டத்தில் (தொழிற்புரட்சிக் காலத்தில்) இது போல் சிறு விவசாயிகளும், கைவினைஞர்களும், சிறுதொழில்களும் அழிவுக்குள்ளாகி உருவான பாட்டாளிவர்க்கம் புதிதாக உருவான தொழிற்சாலைக்கான தொழிலாளர்களாக நகர்ப்புறத்தில் குவிந்தனர்.

இங்கு பாரம்பரிய (சாதி வாரியான) கைவினைத் தொழில்கள் நசிந்து அழிந்து போயின. ஆனால் புதிதாக தொழிற்சாலைகள், உற்பத்தி சார்ந்த தொழில்துறையில் மூலதனம் இடுவது இன்றி சேவைத்துறை வளர்க்கப்படும் (உலகமயச்) சூழலில் சாதாரண, சிறு மீன்பிடியின மக்கள் வேலையிழந்தும் அதேசமயம் ஆலைப் பாட்டாளி வர்க்கமாக மாற முடியாமலும் தெருவில் நிற்கும் நிலை வரலாம் என்றே தோன்றுகிறது.

சேதுசமுத்திரத் திட்டத்தைத் தொடர்ந்து புதிய வேலைவாய்ப்புகள் பெருகும் என்றும், "தென் மாவட்டத் தமிழர்கள் கடலோரத் துறை முகங்களில் டீக்கடை வைத்தாவது பிழைத்துக் கொள்வர்" என்றும் ஆதரவாளர்கள் கூறுகின்றனர்.

சாதாரணத் தமிழர் எப்போதும் டீக்கடை வைத்துத் தான் பிழைக்கவேண்டும். (அதற்குக்கூட இந்த

நாட்டில் சாதிப் பின்புலம் வேண்டும்.) ஆனால் சேது சமுத்திரத்திட்டத்தை எதிர்த்து இன்று தடை பெற்றுள்ள பார்ப்பனச் சக்திகள், மக்கள் நலன்- குறிப்பாக மீனவர் நலன் பாதிக்கப் படும் என்ற கவலையினாலோ, அல்லது ஐயத்தினாலோ அல்லது சுற்றுச்சூழலுக்கு ஏதேனும் கேடு வருமோ என்ற அக்கறையாலோ தடை கோரவில்லை.



மாறாக, இல்லாத ராமனின் பெயரால், இயற்கையான மணல் திட்டை 'பாலம்' என்று கூறி மக்களிடம் ஆண்டாண்டு காலமாகத் தங்கள் நலனுக்காகப் பரப்பி வந்த மூடத் தனத்தையே மூலதனமாக்கித் தடை பெற்று விட்டனர்.

தமிழகத்தின் தொழில் வளர்ச்சி, இராமநாதபுரம் மாவட்டத்தின் வேலைவாய்ப்பு பெருக்கம் என்று சேதுசமுத்திரத் திட்ட ஆதரவாளர்களிடம் நாம் (மீனவர் நலன் மீது அக்கறை கொண்டோர்) விவாதிக்க, வாதாட நியாயம் இருக்கிறது. ஆனால் மக்களைச் சாதியாகவும், மதமாகவும் பிரித்து பழமைப் பற்றிலேயே மூழ்கடித்துக் கொண்டிருக் கும் மதவெறியர்களுடன் உறவாட எவ்விதக் காரணமும் இல்லை.

யதார்த்த நிலவரப்படி தாம் பாதிக்கப்படுவோமோ (ஏற்கனவே பாதிக்கப்பட்டுள்ளனர்) என்ற அச்சத் தில் உள்ள உழைக்கும் மீனவ மக்கள், அவர்கள் சார்பாகப் பேசுபவர்கள்- மதவாதிகள் ஆகியோரது மேடையில் ஏறும் நிலை இருக்கிறது. இது ஆபத்தானது.

கடந்த கால இந்தியச் சமூக வரலாறாக, பிரிட்டிஷ் (ஏகாதிபத்திய) முதலாளியம் தன் நலனுக்காகக் கொண்டு வந்த இரயில்வே, சாலைப் போக்கு வரத்து, இராணுவம், தொழில்துறை போன்றவை தான் (இந்தியாவின்) தமிழகத்தின் நீண்டகாலமாக தேங்கிப்போய்க் கிடந்த, இறுகிக் கட்டி தட்டிப் போய்க்கிடந்த சாதியச் சமூகத்தில் சிறிதளவாவது தளர்வையும், பார்ப்பனியத்திற்கு எதிரான விழிப் புணர்வையும் கொண்டுவந்தன.

முதலில் எதிர்த்த பார்ப்பனியச் சக்திகள் தங்களை விட வளமையானவர்களால் கொண்டுவரப்பட்ட மாறுதலைப் பிறகு ஏற்று, அதற்கேற்றவாறு தங்களை மாற்றிக்கொண்டு வளர்த்துக் கொள்ளவும் செய்தனர்.

அதே நிலைதான் இன்றும். சேதுசமுத்திரத் திட்டத்தை எதிர்க்கும் பார்ப்பனிய சக்திகள் நாளை அதனால் கிடைக்கும் நலன்களைப் பெறுவதில் முன்னணியில் நிற்பர். தீவைப் பொறுத்தவரை பார்ப்பன-ஆதிக்க சாதியினர் (பொருளாதாரத்தை கையில் வைத்திருப்போர்) கழுகாகக் காத்திருக் கின்றனர். 'சீச்சீ, 'இராமர் பாலத்தை' உடைத்து வந்த திட்டம், தங்களது கடவுளையே மீறிவந்த திட்டம், அதன் மூலம் வரும் எந்தப் பயனும் எங்களுக்கு வேண்டாம்' என்று ஒதுங்கிப் போகமாட்டார்கள்.

எனவே, இன்று பழைய மூடத்தனத்திற்கு எதிராக உறுதியோடு சேது சமுத்திரத் திட்டத்தை நிறைவேற்றுவோம் (அது யாருடைய நலனுக் காகத் துவக்கப்பட்டாலும் சரி) என்று கூறும் தி.மு.க அரசு, இந்தச் சமூகத்தை அப்படியே வைத்துக்கொள்ள நினைக்கும் பார்ப்பனியச் சக்திகள் இத்திட்டத்தின் மூலம் பலனை அனுபவித்து விடாதவாறு கண்காணிப்பாக இருப்போம் என்பதற்கான உறுதியளிக்க வேண்டும். இது ஒரு நல்வாய்ப்பு. ஆனால், ஒரு புதிய விஞ்ஞானத்தின்- புதிய கடல் வழித்தடத்தின் குறுக்கே ராமனை, இந்து மதக் குறியீட்டை, திராவிடர்களின் தலைகுனிவுக்கான மூலக்கருவை, 'தமிழர்களின் எதிரி'யைக் கொண்டு வந்து படுக்க வைத்துவிட்டார்கள் மதவெறியர்கள்.

மதச் சார்பற்ற ஆட்சியாளராக/ஆட்சியாக இருக்கிறோம் என்பதை உலகுக்குக் காட்ட நல்வாய்ப்பு. குறுக்கே படுத்திருக்கும் மணல் திட்டை - மூட நம்பிக்கையை - கீறிக் கிழித்துப் பிளந்து முன்னேறிச் செல்ல வேண்டும். சமரசத் திற்கோ (மாற்று வழி), பேச்சவார்த்தைக்கோ இதில் இடமில்லை.

ஆனால் மத்திய அரசின் உறுதியின்மையைப் பார்க்கும்போது, அன்றைய பிரிட்டிஷ் முதலாளி யமும் சரி இன்றைய பன்னாட்டு முதலாளியமும் சரி பழமையை, நிலமானியத்தை, பார்ப்பனியத் தை முற்றிலும் ஒழித்து தம்மை வளர்த்துக் கொள்ளாமல் அதனுடன் சமரசம் செய்துகொண்டு கூட்டுச்சேர்ந்து வளர்வதையே தங்கள் வழிமுறை யாக கொண்டுள்ளனர் என்றே தோன்றுகிறது.

இதுதான் இன்றைய இந்தியாவின்- தமிழகத்தின் பிரச்சினை. உலக முதலாளியத்தின் சுரண்டலுக் கான அடித்தளமாக பார்ப்பனியம் விளங்குகிறது. எளிய மக்கள் இச்சுரண்டலை எதிர்த்து ஒரு பலமான தொழிலாளிவர்க்கமாகத் திரண்டு எழ முடியாமல் பார்ப்பனியச் சாதி முறை தடுத்துக் கொண்டிருக்கிறது. ஒது குறைந்தபட்ச திரட்சிக் குக்கூட வழியில்லாதவாறு பிளவுகள்/சாதிப் பிரிவுகள், மேலும் பிளவுகள்/உட்சாதிப் பிரிவுகள் என்று தொடர்கிறது.

கடந்த 50 ஆண்டுகளில் எந்த அரசும் பார்ப் பனியம் பலவீனப் படும்படியாகத் திட்டமிட்டு உற்பத்தித் துறையில் மாறுதலை ஏற்படுத்தவில்லை.

கடந்த ஆண்டு திருப்பதி கோயில் வருமானம் 1943 கோடியாம். இராமேசுவரம் கோயில்



வருமானம் அந்த அளவிற்கு இருக்காது. ஆனால் பார்ப்பனர் + வியாபாரிகள் + இடைநிலைச் சாதி யாத்திரைப் பணியாளர் + சுற்றியுள்ள மடங்கள், லாட்ஜுகள் என அனைவருக்கும் கிடைத்த வருமானம் கனிசமானதாகத்தான் இருக்கும்.

ஒவ்வொரு மாநில அரசும் இதுபோன்ற கோவில்களையும் அவற்றின் மூலம் கிடைக்கும்வருமானங்களையும்அவற்றைப் பெருக்கும் வழிமுறை களையும் திட்ட மிடுகின்றது. ஏனென்றால் 1943 கோடி என்பது சாதாரணத் தொகையல்ல. ஆனால் கோவிலும், அதில் குவியும் மக்களும் அதனால் ஏற்படும் சமூக விளைவுகளும், கோவிலின் சூழலும் பொருளாதாரமும், அதை நம்பி வாழும் மக்களும், அவர்கள் மேற்கொள்ளும் அரசியல் நிலைப்பாடும் என்ன என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். 'மதச்சார் பற்ற' அரசு என்பதற்கு மாறாக-மதம், கடவுள் நம்பிக்கை என்பது தனிமனிதர் களது சொந்த விருப்பம் என்பதற்கு மாறாக- இவற்றைக் கட்டிக் காக்கும் அரசாக- மேலும் வளர்த்துச் செல்லும் அரசாகச் செயற் பட்டதன் விளைவு இன்று அரசின் 'உற்பத்தித் துறை' சார்ந்த ஒரு திட்டத்தின் மீது மத நம்பிக்கை, கடவுள் நம்பிக்கை குறுக்கிட்டுத் தடுத்து நிறுத்தவும், ஆதிக்கம் செய்யவும் கூடிய நிலை வந்தவிட்டது.

(மதுபானக்கடை நடத்தி அதில் பெறும் வரு மானமும் கோவில் மூலம் வரும் வருமானமும் ஒன்றுதான். இரண்டு போதைகளும் மக்களைச் சீரழிக்கும் என்பதை ஆட்சியாளர் சிந்திக்கவில்லை.)

சாதிய ஆதிக்கவாதிகளின் பிடியில் உள்ள கோவில் உள்ளிட்ட, சாதியத்தைக் கட்டிக் காக்கும் அனைத்து பிற்போக்கு நிறுவனங்களையும் அரசு கண்காணிக்கவும், கட்டுப்படுத்தவும், மாற்றிய மைக்கவும் வேண்டும்.

அதேபோல் இதுபோன்ற பிற்போக்கு நிறுவனங் களைச் சார்ந்து வாழும் பிரிவினரை விடுவித்து விஞ்ஞானப் பூர்வமான தொழிற்துறை வாய்ப்பு களை ஏற்படுத்தி, அதில் உழைத்துப் பிழைக்கு மாறு செய்யவேண்டும். இவர்களது வாழ்வின் ஆதாரமாக கோவில் நிலவும் வரை வெறும் அறிவுப் பிரச்சாரத்தின் மூலம் நாம் எதையும் சாதித்துவிட முடியாது. வயிற்றையும் மனசை (மூளையை)யும் முரணாக நிறுத்த வேண்டாம். உடனடியாக இதைச் செய்தால் இன்னும் ஒரு தலைமுறையில் புதிதாகக் கொண்டுவரப்படும் எந்த ஒரு தொழில்துறைத் திட்டத்திற்கும் கடவுளும் மதமும் பார்ப்பனியமும் தடையாக குறுக்கே வரமுடியாது. மாறாக அத்திட்டத்தின் மூலம் பலன்பெறும் அல்லது பாதிக்கப்படும் மக்கள் அறிவியல் பூர்வமாக விவாதிக்கவும் அல்லது போராடவும் முடியும்.

சேதுக் கால்வாய் குறித்து இவ்வாறான மக்கள் நலன் குறித்த விவாதமோ, போராட்டமோ பெரிய அளவில் நடைபெறவில்லை. அந்த இடத்தை ராமனும் மதவாதிகளும் பறித்துக்கொண்டு விட்டனர். அடுத்த முறை மக்கள் இவர்களிடம் இருந்து இழந்த உரிமையை மீட்டுக் கொள்ளு வதற்கான பூர்வாங்க நடவடிக்கைகளை 'பகுத்தறி வாளர் - கலைஞர்' மேற்கொள்வாரா?

●

# தெ.வெற்றிச்செல்வனின் படைப்புலகம் – ஒரு கோட்பாட்டு மதிப்பீடு

*அரச முருகுபாண்டியன்*

## தெ.வெற்றிச்செல்வன் (1969)

தமிழ் இலக்கிய உலகம் நன்கு அறிந்த கவிஞர், ஆய்வாளர். 'மற்றவை நேரில்' (1993), 'புத்தகமல்ல' (1996), 'மனத்தடி நீர்' (2003), 'உப்புச் சிற்பங்கள்' (2007) ஆகிய கவிதைத் தொகுதிகளையும், 'தைரியமாகச் சொல்' (1997) என்கிற சிறுகதைத் தொகுதியையும், 'சொற்களின் ஒளிச்சேர்க்கை' (2006), 'நகரும் திணைகள்' (2007) என்கிற கட்டுரைத் தொகுதிகளையும், 'மெய்யாக வாழ்ந்தகதை' (2007) என்கிற தனது தந்தை குறித்த நினைவலைகளுடனான சிறு தன்வரலாற்றுக் குறிப்பையும், 'திசை எல்லாம் தமிழ்க்கவிதை' (2006) என்கிற தன்னுடைய முனைவர் பட்ட ஆய்வேட்டை நூலாக ஆக்கியும் என மொத்தம் ஒன்பது நூல்களின் ஆசிரியர்.

நாகை மாவட்டம் வேளாங்கண்ணிக்கு அருகிலிருக்கிற பெரியத்தும்பூர் என்கிற சிறிய கிராமத்தில் ப.தெட்சணாமூர்த்தி என்கிற ஆசிரியருக்கும் செல்லம்மாள் என்கிற தாயாருக்கும் அய்ந்தாவது மகனாகப் பிறந்தவர். ஒரு சகோதரரும் (பாவல் சூரியன்), மூன்று சகோதரிகளும் இவரது உடன் பிறப்புகள். பயிற்சி முடித்த ஆசிரியராகப் பல காலம் பணியாற்றிவிட்டுத் தமிழ் இலக்கியத்தில் முனைவர் பட்டம் பெற்று இன்று தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின், அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித் துறையில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

1991ஆம் ஆண்டு கிராமத்துமேட்டில் நடந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், புரட்சியாளர் அம்பேத்கர் நூற்றாண்டு விழாவில் கவிஞர் முருகுசுந்தரம், கவிஞர் கோவை இளஞ்சேரன், கவிஞர் பாலா, கவிஞர் பஞ்சாங்கம், கவிஞர் யுகசிற்பி போன்றவர்களோடு தனது முதற் கவிதையை அரங்கேற்றினார் வெற்றிச்செல்வன். பாரதிதாசன் பற்றி அவர் பாடிய அந்தக் கவிதை எழுச்சி மிகுந்ததாய் அரங்கத்திலிருந்தோரின் பாராட்டைப் பெற்றது. தொடர்ந்து கவியரங்குகளிலும் இதழ்களிலும் தனது படைப்புக் களை அரங்கேற்றினார்.

வெற்றிச்செல்வனின் குடும்பப் பின்புலமும் சமூகப் பின்புலமும் திராவிட இயக்கத்தோடு இடதுசாரி இயக்கமம் சார்ந்தவை. எளிய மனிதர்கள்– குறிப்பாக வேளாண் கூலிகள் படுகிற துன்பங்கள், வறுமை, கல்வியறிவின்மை, சாதிய ஏற்றத்தாழ்வுகள் போன்றவையே வெற்றிச்செல்வனின் சூழல்கள். குறிப்பாக தலித்துகளோடு வாழ நேர்ந்த வாழ்க்கை அவரை ஒரு கூர்மையான படைப்பாளியாகப் புடம் போட்டது.

கவிதை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான முகத்தைக் காட்டுகிறது. சிலருக்கு நிலவைப் போல குளிர்ச்சியானதாய், அழகானதாய், ஒளிபொருந்தியதாய் இருக்கிறது. ரோஜாவைப் போல் மென்மையானதாய், தண்ணீரைப் போல் இதமானதாய், கனவுகளைப்போல சுகமானதாய் இருக்கிறது. வாழ்க்கையின் அழகியலை மேவி, தேன் குடித்து மயக்க முறும் வண்டைப்போலக் கவிஞர்கள் தங்களை மறந்து திளைக்கிறார்கள்.

இன்னொரு சாராருக்குக் கவிதை என்பது போர் முழக்கமாய், அக்கினிக் குழம்பாய், வெடி மருந்தாய், எதிரிகளை நோக்கி வீசுகிற ஆயுதமாய், கோபம் கொப்பளிக்கும் வார்த்தை எரிமலையாய், அசிங்கங்களுக்கெதிராய், ஆபாசங்களுக்கெதிராய், அடிமைத் தனத்திற்கெதிராய்ப் போராடுகிற, சொற்களே ஆயுதமாகி அணி வகுக்கிற போர்க் கருவியாக இருக்கிறது.

எழுதுகிறவன் கையில் இருக்கிறது எழுத்துக்கான நியாயம். இங்கே வெற்றிச்செல்வனின் எழுத்துகள் ஒடுக்கப்பட்டோரின் ஓங்காரக் குரலாக ஒலிக்கிறது. 'மற்றவை நேரில்' தொகுதியில் சைவம் என்கிற தலைப்பில்,

ஆட்டுக்கறி கோழிக்கறி
அறவே தொடமாட்டான்
மீன்கறி சமைத்தாலோ
முட்டையை அவனுக்கெதிரில்
சாப்பிட்டாலோ
முகஞ்சுளித்து
அப்பால் நகர்ந்து கொள்வான்.
சுத்த சைவம்
என்று சொல்லிக்கொண்டு
எப்படி முடிகிறது அவனால்
மனுஷக் கறியை மட்டும்
சுவைத்துச் சாப்பிட?

இந்தக் கவிதைக்குள் பல நூற்றாண்டுகளாக சைவம் என்கிற பெயரில் நடந்திருக்கிற வன் கொடுமைகள் உள்ளீடாகப் பதிவு செய்யப் பட்டிருக்கிறது. இந்திய வரலாறு என்பதே பௌத்தத் திற்கும் பார்ப்பனியத்திற்குமான போராட்டம்தான் என்கிறார் அண்ணல் அம்பேத்கர்; தமிழக வரலாறு என்பதும் அப்படித்தான். சமணர்களைக் கழுவிலேற்றி, பௌத்தர்களைக் கொன்று குவித்து, வருணாசிரம தர்மத்தை நிலை நிறுத்தத் தோன்றியது தான் 'சைவம்' என்கிற கோட்பாடு. பார்ப்பனியத்தின் தமிழ் வடிவம்தான் சைவம். ஒவ்வொரு சாதிக்குமான தர்மங்கள் நிலைநிறுத்தப் பட வேண்டியும், அந்தந்த சாதியினர் தம் முடைய சாதி தர்மங்களை மீறாதவாறும் பார்த்துக்கொள்ள எழுதப்பட்டதே பெரிய புராணம் போன்ற கட்டுக்கதைகள். பொ.வேல் சாமியின் வார்த்தைகளில் கூறுவதென்றால் பார்ப்பன–வெள்ளாளர்களின் கூட்டுதான் 'சைவம்' என்கிற கோட்பாடு. இதைத்தான் கவித்துவமாக 'அவனால் எப்படி முடிகிறது, மனுஷக் கறியை மட்டும் சுவைத்துச் சாப்பிட' என்று வெற்றிச்செல்வன் கேள்வியெழுப்புகிறார். சாதி வெறியர்கள் தமிழ் என்ற போர்வையில் அடைக்கலமாகிற இடமாகச் சைவ மடங்கள் திகழ்வதைக் காணமுடியும்.

இந்தத் தொகுதியில் மிகவும் முக்கியமானது 'நெருப்பில் குளித்த காற்று' என்ற குறுங் காவியம். பாலமுருகனின் 'சோளகர் தொட்டி' நாவல் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானது இக்குறுங்காவியம். தொண்ணூறுகளிலேயே வெற்றிச்செல்வன் இதை எழுதியது மிகவும் வியப்பானது. வாச்சாத்தி சம்பவத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட இக் குறுங்காவியம் வாச்சாத்தி மலையின மக்களின் எழுச்சி, மலையின மக்கள்மீது அதிகாரிகளாலும் காவல் துறையினராலும் நடத்தப் பட்ட கொடூரம், பாலியல் வன்முறைகள் என அரச பயங்கரவாதத்தின் அத்தனை கொடுமைகளையும் நம் கண்முன்னே நிறுத்துகிறது. இதை வாசித்து முடிக்கிற எவருக்கும் கண்கள் சிவக்கும்.

மரண ஓலமிடும்
அரைகுறைப் பிணங்களை
மிதித்தபடி ஓடும்
கால்களின் பயணம்
கால்கள் கால்கள்
தொடர்ந்து
அதிகாரமணிந்த கால்கள்

தொடர்ந்து 'புதிய தேசீயகீதம்' என்னும் கவிதையில் வன்முறை இல்லாத சூழலில் தேசீய கீதம் பாடுவோம் என்கிறார். இரவீந்திர நாத் தாகூர் இந்தியாவிற்கு வந்த இங்கிலாந்து அரசரை வரவேற்றுப் பாடிய வாழ்த்துப் பாடல்தான் இன்றும் நாம் பாடிக்கொண்டிருக்கிற தேசீய கீதம் என்னும் ஜனகனமன பாடல். இதில் குறிப்பிடுகிற பல பகுதிகள் இன்றைய பாகிஸ்தானில் இருக்கின்றன. ஆனாலும் மிக்க மரியாதையாக அசையாமல் நின்று அனைவரும் பாடிக்கொண்டிருக்கிறோம். ஏற்றத்தாழ்வற்ற சமூகம் உருவாக நாம் புதிய நாட்டுப் பண்ணை இசைக்க வேண்டும்.

'புத்தகமல்ல' வெற்றிச்செல்வனின் இரண்டாவது படைப்பு. இந்தத் தொகுதியிலும் வெற்றிச் செல்வன் தனக்கான தனித்துவத்தை என்பிக் கிறார். வாழ்வின் வெப்பச் சூட்டால் பிறந்த கவிதைகள் தொகுதி முழுக்கப் பூத்திருக் கின்றன. உதாரணத்திற்கு ஒரு கவிதை:

### பரிணாமம்

அவர்களுக்கு வசதியாக
மூன்று குரங்குகள் இருந்தன

ஒடுக்குமுறைகளைக் காணாது
கண்களை மூடிக்கொண்டது ஒன்று
சுரண்டல்களைப் பற்றிப் பேசாது
வாயைப் பொத்திக்கொண்டது மற்றது
நெருக்கடிகள் குறித்த செய்திகளுக்கு
செவி சாய்க்காமல் பார்த்துக்கொண்டது
இன்னொன்று
மூன்று குரங்குகளும்
ஒன்றை ஒன்று புணர்ந்தன

ஆடம்பரமற்ற, கவிதைக் குறியீடுகள் ஏதுமற்ற உவமை, உவமானம், இருண்மைகள், படிமம் என்கிற எந்தப் பூச்சும் இல்லாமல் மிக எதார்த்தமாக, எளிமையாகப் பேசும் இக் கவிதை ஒடுக்குமுறைகளுக்கு எதிரான செய்தி யைப் பதிவு செய்கிறது. காந்தியின் மூன்று குரங்குகளும் இங்கே கேள்விக்குள்ளாக்கப் படுகின்றன. அதாவது காந்தியம் அங்கதச் சுவையோடு கேள்விக்குள்ளாகிறது. காந்தியம் மறுவாசிப்பு செய்யப்பட்டு காந்தியத்தில் சோசலிசத்தைத் தேடிக்கொண்டிருக்கிறார் கள் நமது பின்நவீனத்துவப் பேராசிரியப் பெருமக்கள். காந்தியம் என்பது பார்ப்பனியம் தான்; ஆனால் இனிப்பு தடவிய பார்ப்பனியம். காந்தியம் முதலாளியம் தான்; ஆனால் நயவஞ்சகமான முதலாளியம். அது உழைப் பவர் நலனைப் பேசுவதைப் போல அவர்கள் கழுத்தில் கத்தி வைக்கிறது. அதனால்தான் உழைக்கும் மக்கள், ஒடுக்கப்பட்ட மக்கள், பெண்கள் சார்பாக சிந்தித்த, எழுதிய, போராடிய மாபெரும் சிந்தனையாளர்களாகிய தந்தை பெரியாரும் அண்ணல் அம்பேத்கரும் காந்தி யையும் அவரது கோட்பாட்டையும் மறுத்தார் கள். காந்தியை முழுமையாகப் புரிந்து கொள்ள அண்ணல் அம்பேத்கர் எழுதிய 'காந்தியும் காங்கிரசும் தீண்டத்தகாத மக்களுக் குச் செய்தது என்ன?' என்கிற நூலை வாசிக்க வேண்டும். என் உயிரைக் கொடுத்தாவது இந்து மதத்தைக் காப்பாற்றுவேன் என்று இரட்டை வாக்குரிமைக்கு எதிராகப் போராடிய காந்தியின் நவீன வடிவம்தான் நரேந்திர மோடி என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். இந்துத்துவம் ஒரு அரசியல் வடிவமாக உரு வெடுத்ததற்கு அன்றைக்கே விதை போட்ட வர் காந்திதான். அவரது மத சகிப்புத்தன்மை என்பதுகூட இந்துக்களுக்கு ஆபத்து நேர்ந்து விடக்கூடாது என்ற அக்கறையில் உருவானது தான். இதைத்தான் வெற்றிச்செல்வன் காந்தி யின் குரங்கை மையமாக வைத்துக் கவி பாடுகிறார்.

'மனத்தடிநீர்' வெற்றிச்செல்வனின் மூன்றாவது தொகுதி. தலைப்பிலேயே கவித்துவத்தை வெளிப் படுத்துகிறார். புதுக் கவிதையை நவீனத்தன்மை நோக்கி நகர்த்தியிருக்கிறது இந்தத் தொகுதி. நவீன கவிதை என்கிற பெயரில் அகமன ஓட்டங்கள் மட்டுமே வார்த்தை வடிவம் எடுக் கிற இன்றைய சூழலில் எளிய வார்த்தைகளில் வெற்றி இங்கே சமூகம் பற்றியே பேசுகிறார். இந்தத் தொகுதியில் எனக்கு மிகவும் பிடித்த கவிதை இது:

வைகையாற்றில்
கள்ளழகர்
காவிரியாற்றில்
அரங்கநாதர்
திருவையாற்றில்
பஞ்சநதீஸ்வரர்
நட்டாற்றில்
ஜனங்கள்

கோயில்கள், திருவிழாக்கள், அவற்றுக்காக இறைக்கப்படுகிற கோடிக்கணக்கான தொகை என எல்லா நடவடிக்கைகளிலும் பார்ப்பனர் களின் தொந்திதான் பெருக்கிறது; உழைக்கிற மக்கள் ஓட்டாண்டிகளாகத்தான் தேய்கிறார்கள். அதைத்தான் நட்டாற்றில் ஜனங்கள் என்கிற தொடர் சுட்டுகிறது. இல்லாத கடவுளுக்குத் தான் இங்கே மரியாதை. இருக்கிற மக்களுக்கோ அவமரியாதைதான்.

வெற்றியின் நான்காவது தொகுதி 'உப்புச் சிற்பங்கள்.' இத் தொகுதியில் உள்ள கவிதை களும் மற்றைய தொகுதிகளைப் போலவே நமது கவனத்தை ஈர்க்கின்றன. பெரும் பாலானவை அரசியல் சார்ந்த கவிதைகள். உதாரணம், "வறட்சி நிவாரணத் திற்கும்/ வெள்ள நிவாரணத்திற்கும்/ இடை நசுங்கி/ மாண்டவை போக/ மீந்த எனதிந்த/ கடை மடைச் சொற்கள்." அதுபோலவே "கடன் நிவர்த்திஸ்தலத்திற்கு/ ஏழை, எளிய பக்தர்கள்/ வாராவாரம் போகிறார்கள்/ கடன் வாங்கிக் கொண்டு." மக்களின் மூட நம்பிக்கை எவ்வளவு தூரம் அவர்களது வாழ்வையே சூறையாடுகிறது என்பதற்கு இக்கவிதை ஒரு உதாரணம். இந்தத் தொகுதியின் மிக முக்கிய மான கவிதை 'எழுதுவதென்றால்' என்கிற இந்தக் கவிதைதான். முலைகள், யோனிகள் என்று பெண்கள் தங்கள் உடல் மொழியை மையமாக வைத்துக் கவிதை எழுதுகிறார்கள்.

"உடல்மொழி நுகர்வு கலாச்சாரச் சந்தையைக் கவர்ந்திழுக்க வலியெடுக்க வலியெடுக்க கூர்மை காட்டும் நடிகையின் சிலிக்கன் முலைகள் பற்றி, முலைவரி கட்ட கட்டாயப் படுத்தியபோது முலை அறுத்து வாழை யிலையில் கொடுத்த முலைச்சிப் பரம்புப் பற்றி, வரப்பில் தூளியாடும் குழந்தை விழித்துப் பாலுக்கழ நடவு வயலிலிருந்து கறையேறி குழந்தைக்குப் பால்கொடுத்ததால் வேலைநேரம் கெட்ட தாகக் காரணம் காட்டி நடவுப் பெண்ணின் முலையறுத்த தஞ்சை நெற்களஞ்சியம் பற்றி, பிறப்புறுப்பில் கிரானைட் வைத்து வெடிக்கச் செய்து கொல்லப்பட்ட ஈழத்துக் கோனேஸ்வரி பற்றி, பிறப்புறுப்பில் குச்சிக்கட்டைகள் திணித்து குதறப்பட்ட கயர் லாஞ்சி பிரியங்கா பற்றியெல் லாம் எழுதுவது, பெண்ணிய எழுத்தாக இருப்பதும், வெறும் அதிர்ச்சி மதிப்புக்காக பெண்ணுறுப்புகளைச் சிலாகிப்பது, பெண் எழுத்தேயாயினும் ஆணா திக்கப் பாலியல் நுகர்வுக்கு வழிகோலும் கூறாகிவிடும் ஆபத்து இருக்கிறது என்பது கவிதையில் பெறப்படும் ஆதங்கமாக இருக்கிறது. 'எழுதுவதென்றால்' கவிதையின் கரு, அதிர்ச்சி மதிப்புக்காக பாலுறுப்பு பற்றி எழுதுவதல் லாமல் முலைகள் பற்றியும், யோனி பற்றியும் எழுதுவதென்றால் உண்மையான பொறுப் புணர்ச்சியோடு எழுதுவதும், துயர வரலாற்றைப் பதிவு செய்வதுமாகத்தானே இருக்க முடியும் என்கிற நியாயாவேசம் கொண்டதாக இருக்கிறது வெற்றிச் செல்வனின் கவிதை.

1999இல் வெளியான 'தைரியமாகச் சொல்' சிறுகதைத் தொகுதி கடைமடைப் பாசனப் பகுதி மண் மணத்தோடு வறட்சிக் கருவேல முள் கிழித்த வாழ்க்கைப் பொத்தல்களைத் தைக்கும் கவனத்துடன் படைப்பியல் நகர் கிறது. கவர்ச்சிகளுக்காகத் தங்களின் சுய மிழக்கும் கிராமியக் கலைஞர் வாழ்வியல், வெண்மணி நெருப்பின் வெக்கை, கொடூரத் தாலும், பருவந்தப்பிய மழையாலும் வெள்ளத் தில் மூழ்கடிக்கப்பட்ட நடவுப்பாடல் களின் துயரம், போலிமை உறவுகள் கொண்டாடும் பொறாமைத் திருவிழாவில் காணாமல்போகும் மனிதம், அதைத் தேடும் மனிதர்கள், நவகாலனி யத்துக்குக் கடல்வழி கண்டுபிடிக்கும் புதிய கொலம்பஸ், இப்படிப் பல பொருண்மை களில் கதைகளைச் சலிப்பின்றிக் காட்சிப் படுத்துவதைக் குறிப்பிடவேண்டும்.

இதன் வளர்ச்சியாகவே அச்சு ஊடகப் படைப் பாக்கத்திலிருந்து நகர்ந்து திரை ஊடகப் படைப் பாளியாக 'தரிசு' குறும்பட நடிப்பு/ இயக்கத் தின் மூலம் பரிணமித்திருப்பதையும் பதிவு செய்ய வேண்டியதிருக்கிறது. 'தரிசு' கடைமடை நிலங்கள் பண்ணை யார்கள் ஆதிக்கத்தி லிருந்து இன்று இரால் பண்ணையார்களின் ஆதிக்கத்தை நோக்கிப் போயிருப்பதை, அதன் காரணமாக கிராமம் பெயர்ந்து நகர்நோக்கி ஓடுவதும், நகர எந்திரப் பற்சக்கரங்களில் சிக்கிவிடப் பயந்து கிராமம் நோக்கி மீள்வதும், அல்லது எங்கே போவது என திகைக்கும் தவிப்புமாகக் காட்சிப்படுத்தப்படுகிறது.

இவர் தொகுத்த 'ஏழாம்திணை' சிறப்பு மலர், ஆஸ்திரேலியக் கவிஞர் நட்சத்திரன் செவ் விந்தியன் நேர்காணல், 'அமெரிக்கா' சிறுகதைத் தொகுப்பு (ஆசிரியர் வ.நா. கிரிதரன், அமெரிக்கா) பற்றிய விரிவான பார்வை, சேரன் (கனடா) கவிதைகள் குறித்த அரசியல் அழகியல் பார்வைப் பதிவுகள், பிரதீபா தில்லை நாதன் (கனடா) கவிதைகள், சுரேஷ் கனக ராஜா (லண்டன்) கட்டுரை மொழியாக்கம், அகிலனின் ஆங்கிலக் கவிதை மொழி பெயர்ப்பு (யுகசிற்பி) இப்படி பன்மணித் திரளாக விளங்குகிறது.

இவர் நடத்திவரும் 'களரி' என்கிற இணைய இதழும் அந்த வகையில் குறிப்பிடத்தக்கதே. சேது சமுத்திரம் குறித்த ஆழ்ந்தகன்ற ஆய்வு மற்றும் பல்வேறு படைப்புகள் என வளர்ச்சி குறித்து நம்பிக்கையளிக்கும் ஊடகச் செயல் பாட்டைப் புலப்படுத்துகிறது. பழந்தமிழ்ப் புலவர் செம்புலப்பெயல்நீரார் போல நவீன கால 'கரும்புலப்பெயல்நீரார்' இவர். இது தெ.வெற்றிச்செல்வனின் புனைபெயர். இந்தப் பெயரில் இவரது நையாண்டி கொப்பளிக்கும் கவிதைகள் சமூகக் குணக்கேட்டை அங்கத மாக்குகின்றன.

'சொற்களின் ஒளிச்சேர்க்கை' தமிழகத் தமிழ்க் கலை இலக்கியப் பன்மைத் தன்மை குறித்த விரிவான ஆய்வுக்களப் பதிவு எனலாம். புதினவியல், சிறுகதை இயல், ஓவியவியல், அரசியல், பழந் தமிழியல், நாட்டாரியல் என ஒவ்வொரு துறை சார்ந்தும் நாலாசிரியரின் அறிவுத் தேட்டமும், செரித்துக் கொண்ட செய்திகளின் களஞ்சியமும் நுண்மாண் நுழைபுலத்

தோடு கட்டுரைக்கப் பட்டிருக்கும் பாங்கு ஈர்ப்பானது. பாழ்மண்டபத்திலிருந்து விட்டு விடுதலையாவதில் தொடங்கி தீண்டாத வசந்தத்தின் இடி முழக்கம் கேட்பது வரை 'சொற்களின் ஒளிச்சேர்க்கை' வீரியமாய் நிகழ்ந்திருக்கிறது.

'சொற்களின் ஒளிச்சேர்க்கை', தமிழகக் கலை இலக்கியப் பன்மையை ஆய்வு செய்கிற தென்றால், 'நகரும் திணைகள்' – அயலக தமிழ் இலக்கியப் பன்மை குறித்து ஆய்வுத் தடத்தை பதித்திருக்கிறது எனலாம். 'வெள்ளாவியில் வெந்தும் வெளியேறாத கறுப்புக் கறைகள்', 'அகதிமயமாக்கல்', 'சுருங்கிய உலகும் விரியும் இலக்கியமும்' என முளைக்க மண் தேடி அலையும் விதைகளை நூலின் ஒவ்வொரு வரியிலும் அடையாளங் காண முடிகிறது.

'மெய்யாக வாழ்ந்த கதை' வெற்றிச் செல்வனின் முக்கியமான படைப்பு. தனது தந்தை குறித்த வாழ்வியல் பதிவு. வெற்றிச் செல்வனின் தந்தை ப.தெட்சணாமூர்த்தி ஆசிரியர். திராவிட இயக்கங்களின்பால் ஈடுபாடு கொண்டு தனது பெயரைத் தென்னவன் என்று சூட்டிக் கொண்டவர். பெரியார் மேல் ஆழ்ந்த பற்று காரணமாக பகுத்தறிவு சார்ந்த வாழ்க்கை முறையைத் தனதாக்கிக்கொண்டவர். கருப்புத் துண்டு எப்போதும் தோளில் கிடக்கும். பகுத்தறிவுக் கொள்கைகளைப் பிரச்சாரமாக மேற் கொண்டவர். திராவிட இயக்கச் செயல் பாடுகளுக்கு உறுதுணையாக நின்றவர். திராவிட முன்னேற்றக் கழகம் உள்ளூரில் அமைய முன்னோடியாய் இருந்தவர். ஆசிரியர் இயக்கங்களில் தீவிரமாகப் போராடிச் சிறை சென்றவர். அவரது கடிதங்களும் உயிலும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை.

இவரது தந்தை குறித்து தமிழ்ப் படைப்புலகில் வெவ்வேறு வாய்ப்புகளில் என்னால், கவிஞர் யுகபாரதியால் மற்றும் சிலரால் எழுதப்பட்ட தோடு கவிஞர் ஈரோடு தமிழன்பன் தமிழ்ப் பல்கலைக்கழக துணைவேந்தர் முனைவர் சி.சுப்பிரமணியம் போன்றவர்களால் பல்வேறு அரங்குகளில் பேசப்பட்டிருக்கிறது.

அவரது 'உயில்' தமிழிலக்கிய உலகில் ஒரு தனித்த இலக்கிய ஆவணம். உயில் என்பது 'சொத்துக் கைமாற்றம்' என்ற பிம்பத்தைத் தகர்த்தவர் ப.தெட்சிணாமூர்த்தி (எ) தென்னவன். "உயிருடன் இருந்தவரை தொழிற்சங்கப் போராட்டங்களில் ஒப்பளிக்கப் பட்ட இந்த உடலை நான் இறந்த பிறகு தொழிற்சங்கக் காரர்களிடமே ஒப்படைத்துவிடுவது எனவும், இறப்புச் செலவுக்குப் பணம் ரூ.500 வைத்திருப்பது பற்றி, இறப்பு என்பது இயற்கை நிகழ்வு என்ற உணர்வோடு அழுது அரற்றாமல் வந்தவர்களுக்கு குளிர்நீர், தேநீர் கொடுத்து உபசரிப்பது குறித்து, தன் இறுதி ஊர்வலத்தில் 'கோவிந்தா கோவிந்தா' எனக் கோஷமிடாமல் 'தமிழ் வாழ்க! தமிழ்நாடு தன்னாட்சி பெறுக!' என முழக்கமிட வேண்டும் என்பது பற்றி, காலம்பூராவும் வறுமையிலும் செம்மையாகத் தான் வாழ்ந்தது பற்றி, மகன்கள் வரதட்சனை வாங்காமல் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற விழைவு பற்றி, இறுதிவரை பகுத்தறிவாளனாய், சமூக அக்கறையாளனாய், போராளியாய் வாழ்ந்தது பற்றி வெடிப்புறப் பேசும் ஒரு தனியான இலக்கிய ஆவணம் வெற்றிச்செல்வனின் தந்தையார் எழுதிய உயில் எனலாம்." இவையெல்லாம் அவரது 'மெய்யாக வாழ்ந்த கதை'யில் அழகியலோடு பதிவாகியிருக்கின்றன.

'திசையெல்லாம் தமிழ்க் கவிதை' என்கிற நூல் வெற்றிச் செல்வனின் முனைவர் பட்ட ஆய்வு நூல். "தமிழ்க் கவிதை வளர்ச்சிக்குப் புகலிடக் கவிதைகளின் பங்களிப்பு" என்பது அரவது ஆய்வுத் தலைப்பு. ஆய்வுப் புலத்தில் மிகவும் குறிப்பிடத்தக்க ஆய்வு. சோதனை முயற்சியாக வெற்றிச்செல்வன் பெரும் வெற்றி கண்டிருக்கிறார். பல்கலைக் கழகங்களின் தமிழ்த்துறைகளில் மேற்கொள்ளப்படுகிற ஆய்வுகளையும் அவற்றுக்காக வழங்கப்படுகிற முனைவர் பட்டங்களையும் மதிப்பீடு செய்தால் தொண்ணூறு விழுக்காடு குப்பைகள்தாம். பல ஆய்வுகள் ஒன்றின் பிரதியாகவே மற்றொன்றும் அமைவதைக் காண இயலும். வெற்றிச் செல்வன் மேற்கொண்ட ஆய்வு அதை நிகழ்த்த அவர் எடுத்துக்கொண்ட உழைப்பு, தரவுகளைத் திரட்டவும், நேர்காணல்களுக்காகவும் அவர் மேற்கொண்ட அலைச்சல், திரட்டிய தரவுகளை வடிவ ஒழுங்கிற்குள் பொருத்த அவர் மேற் கொண்ட முயற்சிகள் என, கிட்டத்தட்ட ஏழு ஆண்டுகள் அவர் மேற்கொண்ட பேருழைப்பின் வெளிப்பாடாய் வந்துள்ளது. தமிழ் இலக்கியத்தின் அடர்த்தியை அறிந்த வெற்றிச்செல்வன் தன் ஆய்வையும் அதற்குரிய நேர்த்தியோடு வழங்கியிருக்கிறார்.

புகலிடத்தில்அகதிகள் பற்றிய வரையறைகள், அவர்கள் படுகிற துன்பங்கள், வேதனைகள், மன அழுத்தங்கள், புலம்பெயர்வதால் எதிர் கொள்கிற அறைகூவல்கள், மனித உரிமைகளுக்கான அவர்களது போராட்டங்கள், ஒவ்வொரு நாடும், அரசும் அதன் சட்ட திட்டங்களும் அவர்களை நடத்துகிற விதங்கள், குறிப்பாகத் தமிழ் மக்கள் உலகம் பூராவும் அனுபவிக்கிற வலிகள் ஆகியவை இந்த ஆய்வின் முதற்பகுதியில் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன. இதை வாசிக்கிறவர்கள் மனிதர்களாக இருக்கிற பட்சத்தில் அழாமல் இருக்க முடியாது. பெரும்பாலும் ஈழம் சார்ந்த படைப்புகளே இதில் கவனப்படுத்தப்படுகின்றன.

அடுத்த பகுதியில் தங்குமிடம், கல்வி, மொழி, வேலைவாய்ப்பு, சாதி மற்றும் பிற வேற்றுமைகளால் வரும் இடர்ப்பாடுகள், பால் வேறுபாடுகளால் அமையும் துன்பங்கள் போன்றவை பதிவு செய்யப்பட்டுள்ளன. அதற்கென பொருத்தப்பாடுடைய கவிதை கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விவரிக்கப்படுகின்றன. புகலிட மனிதர்களின் அவலத்தைச் சுட்டும் ஒரு கவிதை,

> ஒரு பிராங்கெனினும்
> என் ஊதியம் பெருக்க
> முதலாளி குண்டியைக்கூட
> துடைக்கத் தயார் - (தேவி கணேசன்)

என அவலத்தைப் பதிந்து செல்கிறது. தமிழ்க் கவிதையின் உத்திகளாக உவமைகள், உருவகங்கள், அங்கதம், படிமம், முரண் போன்ற உத்திகளையும் அதற்குப் பொருத்த மான கவிதைகளையும் கொண்டிருக்கிறது இந்த இயல்.

அடுத்த இயல் புகலிடக் கவிதைகளின் உளவியல் பற்றிப் பேசுகிறது. "தம் தாயக நினைவு வலைப் பின்னலுக்குள் அவர்கள் சுய அடையாளங்களைப் பேணி வந்தபோதும் அவர்கள் புகலிடத்தில் எதிர்கொள்ளும் கலாச்சார அதிர்ச்சி அல்லது முறிவு, மற்றும் இங்கு வந்துவிட்டபோதும், அவர்களுக்குத் தாயத்தில் போர்ச் சூழலில் நேர்ந்த துன்ப. துயரங்கள், அவை தந்த மன அதிர்ச்சிகள், இழப்புகள், வடுக்கள் மற்றும் அகதி முறைமை கோரிய முயற்சிகள், போராட்டங்கள், பயண முகவர்களின் ஏமாற்றுத் தந்திர மாய்மாலங்கள், நாஜிகளின், நிற வெறியர்களின் தாக்குதல்கள், மொழி மற்றும் காலநிலை இடர்ப்பாடுகள், பணிச் சூழலில் நெருக்கடிகள், போர்க் களத்தில் இராணுவத்தினரின் புகலிடத்தில் – பயண முகவர்களின் நாஜி களின் பாலியல் வல்லுறவுகள் என்று தொடர்ந்து உளவியல் ரீதியான பாதிப்புக்குள்ளாகின்றனர்."

> நகரில் எல்லாக் கடைகளும்
> பூட்டப்பட்டாலும்
> சவப்பெட்டிக் கடைக்காரன் மட்டும்
> நம்பிக்கையோடு திறந்து
> வைத்திருக்கிறான் - (சேரன்)

இதில் யுத்தச் சூழலை நம் கண்முன் நிறுத்துகிறார்.

இறுதியாக, தமிழ்க் கவிதை வளர்ச்சி நோக்கில் புகலிடக் கவிதை ஒப்பீட்டியல்: இந்த இயலில் தமிழ்க் கவிதை மரபில் உள்ள கவிதைகளோடு இன்றைய அகதி வாழ்வை ஒப்பிட்டுப் பேசும் கவிதைகள் இடம் பெறுகின்றன. சிவசேகரத்தின் ஒரு கவிதையை இங்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

> நாராய் நாராய் செங்கால் நாராய்
> பழம்படு பனையின் கிழங்கு பிளந்து
> பயன்மிகு அரிந்த பனைசெறி நாட்டார்
> வழிபல சென்றே பலதிசைப் பறந்தார்
> வருகுவதெந்நாள் அறிவையோ நாராய்
> … பெருங்குளிர்… கூறாய்

அகதிமையோடு தமிழ்ச் சமூகம் உள்ளாகியிருக்கிற நெருக்கடிகளை இதில் காணலாம்.

இவ்வாய்வில் வெற்றிச்செல்வன் எடுத்துக் கொண்ட முயற்சியும் உழைப்பும் இளம் ஆய்வாளர்கள் கவனத்தில் கொள்ள வேண்டியன. இருபதுக்கும் மேற்பட்ட பன்னாட்டுத் தமிழறிஞர்களை நேர்கண்டு திரட்டிய செய்திகள், இருநூற்றுக்கும் மேற்பட்ட நூல்களின் வாசிப்பு, ஆய்வுக்குரிய தகவல்களைப் பல இடங்களில் அலைந்து திரிந்து திரட்டியது, ஒப்புக்காக இன்றி உணர்வோடும் உண்மையோடும் தனக்கேயுரிய தனி மொழியோடும் அளவோடும் இவ்வாய்வைத் தமிழ் மக்கள் முன் வைத்திருக்கிறார். மனிதர் படும் இன்னல்களைச் சகித்துக் கொள்ள இயலாததன் வெளிப்பாடாக இவ்வாய்வு வந்துள்ளது.

சில ஆண்டுகளுக்குமுன் வெற்றிச்செல்வனிடம் ஒரு வேண்டுகோள் வைத்தேன். வெண்மணி

பற்றி இந்திரா பார்த்தசாரதி எழுதியுள்ளார். நீங்கள் தலித்திய கண்ணோட்டத்தில் ஒரு நாவல் எழுதுங்கள் என்றேன். அதை அவர் எழுதாமல் வேறொரு நபரிடம் சொல்ல வெண்மணி பற்றிச் சில 'போலி' தலித் நாவல்கள் உருவாயின. விரைவில் அந்தப் பணியை மேற் கொண்டு ஓர் அசல் நாவலை வழங்கு வார் என்று நாம் நம்பலாம்.

இடதுசாரி இயக்கங்கள், மற்றும் தலித் இயக்கங்களின் கலை இலக்கிய அமைப்புகள், ஆசிரியர்களின் சங்கங்கள், மனித உரிமை அமைப்புகள், சிற்றிதழ்கள், பல்கலைக்கழகக் கருத்தரங்குகள் என்று விரிந்து பரந்து தனது சொற்களை வலிமிகுந்த மனிதர்களின் வாழ்க்கை மேம்படத் துடுப்பாக வலிக்கிறார்.

பிற்போக்குத்தனங்களோடு ஒருபோதும் சமரசம் செய்து கொள்ளாத கவிஞர். தன் திருமணத்தைத் தமிழ்ச் சான்றோர் அறிஞர் அருளி (பேராசிரியர்-தமிழ்ப் பல்கலைக் கழகம்) அவர்களின் தலைமையில் சுயமரியாதைத் திருமணமாகத்தான் நடத்தவேண்டும் என்று பிடிவாதம் காட்டி நிறைவேற்றிக் கொண்டவர். குடும்பத்தினரையும் சனநாயகப் பண்புகளோடு சடங்குகள் தவிர்த்த நடவடிக்கைகளோடு பழக்கி வருபவர். தனது ஆண் குழந்தைக்கு பகத்சிங் என்றும் பெண் மகவுக்குத் தமிழிசை என்றும் பெயர் வைத்து மகிழ்ந்திருக்கிறார். அவ்வகையில் வெற்றிச்செல்வனின் வாழ்க்கை ஒரு முன்மாதிரியானது.

ஒரு சிலை தன்னைத்தானே செதுக்கிக் கொண்டதைப் போல வெற்றிச் செல்வன் தன் வாழ்வைத் தானே செதுக்கிக் கொண்டவர். இளமையிலிருந்து அவர்பட்ட உளியின் காயங்கள், வறுமையால் கருகிவிடாமல் அவற்றையே பதிவுகளாகக் கொண்டு எழுந்து நிற்கும் இன்றைய நிலை, இளைஞர்களை வசியப் படுத்தி வழிநடத்தும் ஆற்றல் கொண்டவை.

அவரது ஒவ்வொரு படைப்பினூடாகவும் வெளிப்படுவது வாழ்வின் பதிவுதான். தமிழகம் முழுவதும் தோழமை உறவுகளை வளர்த்து வைத்திருக்கும் வெற்றி, பழகுவதற்கும் குழந்தையைப் போலவே இனிமையானவர். அவரது எழுத்துகளுக்கும் அப்படி ஒரு வசீகரத் தன்மை உள்ளது.

வெற்றிச் செல்வனின் இலக்கு இது தான்: எல்லா மனிதர்களும் சம உரிமையோடு வாழும் வாழ்க்கைக் கான போராட்டம்தான் அவரின் எழுத்து. ●

# அமெரிக்கத் தொல்பொருள் இணையதளத்தில் தமிழ் மொழியும் கலாச்சாரமும்

'ஊர்'- தமிழ் பற்றிய ஒரு வீடியோ கட்டுரை, பாகம்-1- 26 நி. இப்பொழுது அமெரிக்காவில் யூஜீன், ஒரிகான் மாநிலத்தில் உள்ள லாப நோக்கம் அற்ற ஒரு தொல்பொருள் ஆராய்ச்சி நிறுவனம் 'ஆர்க்கியாலஜிகல் லெகசி இன்ஸ்டிடியூட்' செயலாக்கும் 'ஆர்க்கியாலஜி சேனல்' (www.archaeology channal.org) எனும் இணைதளத்தில் காணப்படுகிறது.

எம்.வி. பாஸ்கர் தயாரித்து, கே.டி.காந்திராஜனுடன் இணையாக இயக்கிய 'ஊர்' வீடியோவை முதல் நாள் (ஜூலை 19, 2006) 8639 பேரும், இரண்டாம் நாள் 9942 பேரும் கண்டதாக சேனலின் நிறுவனர் டாக்டர் ரிச்சார்ட் பெட்டிக்ரூ கூறுகிறார். ''தினசரி சுமார் பத்தாயிரம் பேர் வருகையாளர் பதிவில் இந்தியா 10ஆம் இடத்தில் பின் தங்கியுள்ளது ஏன்?'' என்ற கேள்வியையும் எழுப்பியுள்ளார் பேராசிரியர் பெட்டிக்ரூ.

ஜூலை 18 வரை இந்த வீடியோவை ஆர்க்கியாலஜி சேனலின் முன்பக்கத்திலும், அதன் பிறகு இணைதளத்தின் உள் பக்கத்திலும் (http://www.archaeologychannal.org/content/vedio/ur.html) காணலாம். இந்தப் பக்கத்திற்கு இந்தியாவின் ஐ.டி. நிறுவனமான ஹெச்.சி.எல் (HCL) நிதி உதவி அளித்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இது போன்ற ஒரு வீடியோவை உருவாக்க வேண்டும் என்ற அவசியத்தை டாக்டர் ஈ.அண்ணாமலை (முன்னாள் இயக்குனர், சென்ட்ரல் இன்ஸ்டிடியூட் ஆஃப் இந்தியன் லேங்குவேஜஸ், தற்கால விசிடிங் புரொஃபசர், எமெரிடஸ், யேல் யுனிவர்சிடி, அமெரிக்கா) எடுத்துக் கூறியதின் மூலம் தயாரிக்கப்பட்டது ஊர்.

இயல், இசை, நாடகம், மேலும் தொல்பொருளியல் மற்றும் இலக்கிய வரலாற்று அம்சங்களை உட்கொண்டு, தமிழின் அறிந்த சரித்திரத்தை, அதன் மூலம் 800 வருடங்களை, அறிமுக பூர்வமாக வர்ணிக்கிறது ஊர்.

செம்முதாய் - தென் ராமநாதபுரத்தின் தேரிக்காட்டு செம்மணற் குவியல்களுக்கு இடையில், டாக்டர் முருகபூபதியும் அவரது மணல் மகுடி நாடகக் குழுவினரும் அரங்கேற்றிய ஒரு நாடகம் - இந்தக் கட்டுரையின் முன் உரை, முதல் ஓசை.

இழந்த கண்டம், அழிந்த நகரம், இவை தாண்டிய பண்டைத் தமிழகம், திணைக் கோட்பாடு, இலக்கிய சகாப்தங்கள், தமிழ் பிராமி, அசோக் பிராமி, வட்டெழுத்து, கிரந்தம், நவீன லிபி, சிந்து லிபி, சமணத் தொடர்பு மற்றும் இந்துத்துவத்தின் தொடக்க காலம், இந்த வீடியோவின் சில அம்சங்கள்.

காவேரி சங்கமத்தில் பூம்புகார் செல்லக்குஞ்சு அம்பா முறையில் பாடியிருக்கும் சிலப்பதிகாரம், இப்பெருங்காப்பியத்தை பரத நாட்டிய பாணியில் வழங்கும் ஸ்ரீலதா வினோத், மேல் சித்தாமூர் ஜீனாலயத்தில் சமணத்தாய்களின் கணிதம் தோய்ந்த நாமாவளி வழிபாடு, திருப்பனந்தாள் தியாகராஜ ஓதுவாரின் திருமுறை, கரிக்கியூர் இருளரின் புகிரி மற்றும் குவாள் இசை - இவை, இந்த வீடியோவின் மற்ற பகுதிகள் இல்லாவிட்டாலும்கூட, தனித்து ரசிக்கக் கூடியவை.

''சொல்லிலும் உணர்விலும் ஆழ்ந்த கருத்துகளை, இசை மற்றும் பிம்ப வடிவங்களில் ஈர்க்கும் வகையில் பதிவாக்குகிறது ஊர்'' என்கிறார், பேராசிரியர் அண்ணாமலை. ''அருமையான தயாரிப்பு. இது உலக அளவில் குறிப்பாக மேல் நாடுகளில், பெரும்பாலோர் அறியாத விஷயம் என்ற காரணத்தால், இந்த வீடியோவின் மதிப்பு மேலும் அதிகம். நான் திராவிட இயல் நிபுணர் இல்லை, ஆனாலும் இதன் பின்னணி ஆராய்ச்சியின் ஆழ்மையை உணர முடிகிறது,'' என்று எடுத்துச் சொல்லியுள்ளார் டாக்டர் பெட்டிக்ரூ.

ஆகஸ்ட் மாதத் தொடக்கத்தில் ஊர் வீடியோவின் டிவிடி (DVD) நகல், கல்வி மற்றும் கலாச்சார சம்மந்த உபயோகங்களுக்கு (கருத்தரங்கக் காட்சிகள், பள்ளி மற்றும் கல்லூரி நூலகங்கள், அரசு இலாக்கா ஆவணங்கள், தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், ஆகியவைக்கு) தமிழிலும் ஆங்கிலத்திலும், அணுகுவோர்க்கு, இயன்ற வரை விநியோகம் செய்யப்படும்.

**எம்.வி.பாஸ்கர்,**
**91 - 44 - 2445 1594. 093805 - 60921,**
**contact@hathway.com, mvbhaskar@mac.com**

# தேசியம், மார்க்சியம், தணிகையியம்...

**('தேசியமும் மார்க்சியமும்' என்கிற தணிகைச் செல்வன் நூல் குறித்த விவாதம் மிகுந்த விமர்சனம்)**

**மகிழரசன்**

*(மொழியினூடாக விரியும் மண்ணுக்கும் மக்களுக்குமான இயங்கு வெளியைத் தர்க்கங்களாலும் மேற்கோள்களாலும் வரையறை செய்ய முடியாமல் போயினும் அதன் நியாயங்கள் மௌனப்படுவதில்லை என்பதன் வெளிப்பாடே இக்கட்டுரைக்கு அப்பாலான நடைமுறைப் புலப்பாடுகள். – **இதழாசிரியர்**)*

**'இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்டால் நாட்டில் வன்முறை இருக்காது, அரிஜனங்கள் தளைகளிலிருந்து விடுவிக்கப்பட்டு விடுவார்கள், மனிதன் பிறப்பிலிருந்தே சமமாக நடத்தப்படுவான், சுரண்டல் தவிர்க்கப்பட்டுவிடும், மனிதாபிமான அடிப்படையில் மத ஒற்றுமையும் தேச ஒற்றுமையும் நிலவும் என்றெல்லாம் மகாத்மா காந்தி, நேரு போன்ற தலைவர்கள் நம்பினால் அது தவறு.'**

இந்தக் கருத்து காணப்படும் நூல் *'The menace of Hindu Imperialism.'* இது 1941இல் வெளியானது. (தமிழில் சாளரம் வெளியீடாக தவத்திரு தர்மதீர்த்த அடிகளாரின் 'இந்துமதக் கொடுங் கோன்மையின் வரலாறு.') இது எதைக் காட்டுகிறது? இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்தால் அனைத்துப் பிரச்சனைகளும் தீர்ந்துபோகும் என்று சொல்லி 'இந்திய தேசம்' கட்டி அமைக்கப் பட்டு உருவாக்கப்பட்டது. சுதந்திரம்அடைந்து 60 ஆண்டுகள் ஆகியும் மேற்கண்ட பிரச்சினைகள் ஒழிந்துவிட்டனவா? இதே அடிப்படையில் இன்றைக்கு தமிழ்த்தேசியம் தீவிரமாக முன் வைக்கப்படுகிறது. முன்னாள் மார்க்சியர்கள், வேறு இயக்கங் களில் பொறுப்பு கிடைக்காதவர்கள், மண்ணின் மைந்தர் கொள்கையால் ஈர்க்கப்பட்டவர்கள் எனப் பலரும் தமிழ்த்தேச இயக்கங்களின் கொள்கை கோட்பாடுகளை முன்வைக்கத் தொடங்கி விட்டனர். இத்தகைய சூழலில், 'தேசியமும் மார்க்சியமும்' என்ற நூல் வெளியாகியுள்ளது.

அந்த நூலில் தணிகை 'தேசியத்தை' ஏற்கிற– மறுக்கிற இயக்கங்களை அவற்றின் கொள்கை- திட்டங்கள் அடிப்படையில் (கிடைக்காத இயக்கங்களுக்குத் தேர்தல் அறிக்கைகள்) ஆய்வு செய்து, நிறைவாகத் தன்னுடைய கொள்கை அறிக்கையை முன்வைத்துள்ளார். அது இதுதான்.

**பொதுவுடமைத் தமிழ்க் குடியரசு என்பதைக் குறிக்கோளாக ஏற்றுக்கொண்டு...**

- **பெரியாரியத்தை உள்ளீடாகக் கொண்ட தமிழியத்தையும்,**
- **அயோத்தியார் – அம்பேத்கர் சிந்தனைகளை உள்வாங்கிய தலித்தியத்தையும்,**
- **செரித்து செறிவேறிய மார்க்சியமே தமிழ்மண்ணின் மார்க்சிய மாக இருக்கும் – உழைக்கும் தமிழ் மக்களுக்கான அந்தப் புரட்சிகரத் தத்துவத்தின் மீது கட்டப்படும் ஒரு பொதுவுடமைக் கட்சியே பொதுவுடமைத் தமிழ்க் குடியரசை எய்துவதற்கான அரசியல் அமைப்பாக இருக்க முடியும். அதுவே இன்றைய தேவையாகும்.**

*'தேசியமும் மார்க்சியமும்' பக்கம் 346*

மேலோட்டமாகப் பார்க்கப்போனால் மிகவும் புரட்சிகரத் திட்டம்போலக் காணப்பட்டாலும், இதனுள் புதைந்து கிடக்கும் அரசியல், மொழிச் சிறுபான்மையினருக்கும், துணை தேசியத்தைச் சார்ந்தவர்களுக்கும், தலித்துகளுக்கும் மிகவும் ஆபத்தானதாகும்.

## தமிழியம்

தமிழியம் என்பதற்கு 'தணிகை' இந்த நூலில் விளக்கம் தரவில்லை. இவருடைய முந்தைய நூலான 'தலித்தியம், தமிழியம், இந்தியம்' என்ற நூலில் பக்கம் 1இல்

**''தமிழ்த்தேசம் – மொழி, இனம் இவற்றின் உரிமைக் கோட்பாட்டைத் 'தமிழியம்' என்ற சொல் உணர்த்தி நிற்கிறது''**

என விளக்கமளித்துள்ளார்.

இந்த வரையறையில் எழும் சிக்கல்களைக் கூர்மையாக ஆராய வேண்டியுள்ளது. 'தமிழ்மொழி' என்பது எது?

இங்கு 'ஒற்றைத் தமிழ்தான்' நிலவுகிறதா? ஆராயப் புகுந்தால் எண்ணற்ற தமிழ்கள் நிலவுவதைக் காணலாம். ஜாதிப்பிரிவினை அடிப்படையில் பார்ப்பனத்தமிழ், வெள்ளாளத்தமிழ், தலித்து களின்தமிழ் மட்டுமல்லாது, நில அடிப்படையில் மதுரைத்தமிழ், கொங்குத் தமிழ், குமரித்தமிழ், சென்னைத்தமிழ் என ஏராளமான தமிழ்கள். இங்கு வெகுகாலமாகவே ஒற்றைத்தமிழ் நிலவவில்லை. 'தமிழ்த்தேசம்' அமைகிறபோது 'பொதுத்தமிழ்' ஒன்றை பயன் பாட்டுக்குத் தெரிவுசெய்ய வேண்டும். தமிழகப் பகுதி எங்கும் ஒரே மாதிரி பேசப்படும் தமிழ் 'பிராமணத் தமிழ்தான்.' அதைத்தான் பொது மொழியாக்கவேண்டும். அதைத்தான் தலித் மக்களும் முன்னெடுக்க வேண்டுமா? 'சோறா?' 'சாதமா?' இந்தச் சொல்முரணின் அரசியல் பலரும் அறிந்ததுதான்.

பேச்சுத்தமிழைப் புறக்கணித்துவிட்டு எழுத்துத்தமிழ்தான் அனைவருக்கும் – பொது என்று முன்வைத்தால் அது இன்னொரு ஆபத்து நிறைந்தது. எழுத்துத்தமிழ் வேளாளத் தமிழாக, சமயத் தமிழாகத்தானே இருக்கின்றது. ஒட்டுமொத்தத் தமிழர்களின் தமிழாக அது இல்லையே!

'தலித்'தான் முன்னெடுக்கப்பட வேண்டும் என்று சொல்பவர்கள் 'சேரித்தமிழை' ஆட்சித்தமிழாக அறிவிக்க சம்மதிப்பார்களா? அதை கொடுந்தமிழ் என புறக்கணிக்கிறார்களே! சேரிகள் மட்டும் புறக்கணிக்கப்படவில்லை, 'சேரித்தமிழும்' அல்லவா புறக்கணிக் கப்படுகிறது? 'செம்மைத்தமிழ்' என இவர்கள் கூறுவதெல்லாம் வேளாள, பார்ப்பனச் சாதியும் சமயமும் கலந்த தமிழல்லவா?

நல்ல தமிழ் எழுத முயல வேண்டும் என்று வகுப்பெடுப்பவர்கள் பெரும்பாலும் உயர்குடி இந்துக்களாக இருப்பதைப் பாருங்கள்.

**''ஒரு குறிப்பிட்ட சமூகப் பிரிவினரின் பேச்சு மொழியை வடிவமைப்பதில் சமூக, வரலாற்றுக் காரணிகள் மட்டுமன்றி புவியியல், தொழில்நுட்பம் ஆகியனவும் வர்க்க வேறுபாடு களும் பங்கு பெறுகின்றன''**

*('சிந்திக்கும் நாணல்' எஸ்.வி.ஆர், பக்–168)*

என்ற கூற்று இங்கு மொழியில் ஏற்றத்தாழ்வு, புவியியல், பிறவி, சாதி, பொருளாதாரம் என்ற காரணிகளால் ஏற்பட்டிருப்பதைத் தெரிவிக்கிறது. இந்த நிலையில் பொதுமொழி என்பது ஆதிக்கச் சக்திகளின் மொழியாகவே அமையும்.

பாசிச சக்திகள், ஒரே பிரிவின்கீழ் செயல்படாமல் இரண்டு மூன்று பிரிவுகளாகப் பிரிந்து கருத்துகளைக் கூறிக்கொண்டிருக் கும். தமிழ்த் தேசத்தின் ஒரு இயக்கம் 'தூயதமிழே' சரி எனப் பேசுகிறது. வடமொழி கலந்தாலும் பரவாயில்லை, ஆங்கிலம் கூடாது என்கிறது ஒன்று.

ஒரு இயக்கம் முன் வைக்கும் சிந்தனையைப் பாருங்கள்:

**''தமிழ்மொழி மூவகைப்பட்டு வழக்கில் நிலவுவதாகக் கொள்ளலாம்.**

1. தூய தமிழ் பேசுகிறேன் என்பதான போக்கில் வெளிப்படும் பண்டிதத் தமிழ், 2. தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்கள் பற்றிக் கவலைப்படாமல் அதுபற்றிய உணர்வே இல்லாமல் சரளமாகப் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்திப் பேசும் 'பாமரத்தமிழ்', 3. இரண்டிற்கும் இடைப்பட்ட, அதாவது தூய்மை பேணி அந்நியப்பட்டுப் போகாமலும் சரளமாய்ப் பிறமொழி கலந்து மலிவுபட்டுப் போகாமலும் முடிந்த மட்டிலும் எல்லோருக்கும் புரியும் வண்ணமுமான ஒரு நிலைத் தமிழைக் கையாளும் 'பகல்மொழி'. பகல் என்பதற்கு நடுவுநிலை, இடைப் பட்ட நிலை என்று ஒரு பொருள் உண்டு. பண்டிதத்தனமும் அல்லாமல், பாமரத்தனமும் அல்லாமல் இரண்டிற்கும் இடைப் பட்ட நிலையைக் கொள்ள இப்பெயர் பொருத்தமாயிருப் பதாகப்படவும், மூன்று பெயர்களுக்கும் மோனை ஒன்றி வருவதன் பொருட்டும் இப்பெயர் சூட்டப்படுகிறது. அதாவது 'பண்டிதமொழி' 'பாமர மொழி' இவ்விரண்டிற்கும் இடைப் பட்ட 'பகல்மொழி.' இதில் முதலிரண்டை விலக்கி மூன்றா வதைக் கைக்கொண்டு ஒரு மக்கள் தமிழை உருவாக்க வேண்டும்.''

*(பரிமுதல்வன், மண்மொழி வெளியீடு 20, தி.ஆ 2038 நளி 2007 நவ.-டிச.)*

*இருக்கிற தமிழ் போதாதென்று இதுவும் ஒன்று. பொதுமொழிச் சிக்கலுக்குத் தீர்வு சொல்கிறேன் என்று பகடி செய்யும் குரல் இது.*

*தமிழ்த்தேச இயக்கங்களின் மையம் தமிழை வைத்து மக்கள் திரளை ஈர்க்க நினைப்பதுதான். தமிழ்மூலம் சமத்துவ, ஒடுக்கமற்ற, சாதிகள் நீங்கிய, சமதர்ம சமுதாயம் என்பதெல்லாம் வெறும் பசப்பு வார்த்தைகள்தாம்.*

## தமிழினமும் தமிழ்த் தேசியமும்:

*தமிழ்த்தேசிய இனத்தை அவ்வளவு எளிதில் சிக்கல்கள் ஏதுமின்றி அடையாளப்படுத்த முடியாது. இது கி.பி. ஆறாம் நூற்றாண்டில் இருந்து விவாதத்திற்குரியதாக இருந்து வருகிறது. கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைவ சமயப் பெரியவரான திருநாவுக் கரசர்*

***ஆரியன் கண்டாய்; தமிழன் கண்டாய்***

*(தேவாரம் 237:5)*

*என்று குறிப்பிட்டு, தமிழகத்தில் குடியேறிய ஆரியப் பார்ப்பனர் களை வேறுபடுத்தித் தமிழர் இனத்தைக் குறிப்பிடுகிறார். அதே நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் வைணவரான பூதத்தாழ்வார்,*

***இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்***
***பெருந்தமிழன் நல்லேன் பெரியது***

*(நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் 2255)*

*பார்ப்பனச் சமூகத்தைச் சார்ந்த இவர் தன்னைத் தமிழனாக அடையாளப்படுத்திக்கொள்கிறார்.*

*இந்த சர்ச்சை ஓய்வின்றித் தொடர்ந்து தமிழகத்தில் விவாதிக்கப் பட்டு வருகிறது.*

*வெள்ளக்கால் ப.சுப்பிரமணியம் தனது நூலில் இசுலாமியரைத் தவிர்த்து தமிழகத்தில் உள்ள தெலுங்கர், மலையாளிகள், கன்னடர் ஆகியோரை இணைத்து அவர்கள் அனைவரும் தமிழர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். மா.பொ.சிவஞானம் அவர்கள் தனது நூலில் தமிழகத்தில் உள்ள தெலுங்கர், கன்னடர், மலையாளி மற்றும் பிறமொழி பேசுபவர்களையும் விலக்கி தமிழ்மொழி பேசும் பார்ப் பனர்களைச் சேர்த்து தமிழர் என அடையாளப்படுத்தியுள்ளார்.*

*இப்படி தேசிய இன அடையாளச் சிக்கல் சர்ச்சைக்குரியதாக இப்போதும் தொடர்கிறது. எனவேதான் ஆய்வியல் அறிஞர் முனைவர் கோ.கேசவன் தனது 'தமிழ் மொழி-இனம்-நாடு' என்ற நூலில் இவ்வாறு தெரிவிக்கிறார்:*

''இங்கு குறிப்பாகக் கவனிக்க வேண்டிய அம்சம் என்ன வெனில், இந்தியாவின் எந்த ஒரு மாநிலத்திலும் அத்தேசிய இனத்தின் அடையாளம் குறித்த சிக்கலோ விவாதமோ இல்லை. அத்தகைய தேவையும் இல்லை. எடுத்துக்காட்டாக, கேரளா வில் மலையாள தேசிய இனம் குறித்து எவ்வித சர்ச்சைகளும் எழுந்ததாக நாமறிய இயலவில்லை. ஆனால் தமிழகத்தில் அப்படி எழுவதை நாம் அறிந்து கொண்டிருக்கிறோம். இது தமிழகத்தின் தனித் தன்மைகளுள் ஒன்றாகவும் உள்ளது.'' (பக்-39)

*இந்தச் சிக்கலான பிரச்சினையைத் தீர்க்க தோழர் தணிகை ஒரு தீர்க்கமான வரைவிலக்கணம் தந்துள்ளார். அது இதுதான்:*

''நவீன காலத் தேசிய இனம் என்ற வரைவிலக்கணப்படி தமிழ் மொழியைப் பேசும் தமிழ் தேசத்துத் தமிழர்கள்தாம் தமிழ்த் தேசிய இனம்.''

*(தலித்தியம் தமிழியம் இந்தியம்-தணிகைச் செல்வன் பக்- 43)*

*மேலோட்டமாகப் பார்த்தால் மிகச் சரியான வரையறைபோலத் தெரியும் இது, புதிதாக எதையும் சொல்லாமல், இருக்கிற திராவிடத் தேசியத்தையே மீண்டும் சொல்கிறது.*

*தமிழ் மொழியைப் பேசுகிறவர் என்றால் இந்தத் தமிழ்த் தேசத்தில் (தமிழகப்பகுதியில்)*

*1. தமிழர்கள், 2. மார்வாரிகள், 3. குஜராத்திகள், 4. மலையாளிகள், 5. கன்னடர்கள், 6. தெலுங்கர்கள், 7. பார்ப்பனர்கள் ஆகிய இவர்கள் அனைவரும் தமிழ் பேசுகிறார்கள்.*

*தமிழர்கள் என்பவர்கள் யார்? என்றால் பெரியார் வரையறைபடி*

**''தமிழ்நாட்டில் உள்ள பிராமணர், பிராமணர் அல்லாதார், திராவிடர், ஆதிதிராவிடர், இந்துக்கள், முசுலீம்கள், கிறித்துவர்கள், பௌத்தர் கள், சமணர்கள் முதலிய எல்லோரும் தமிழரே ஆவர்''**

*(தமிழர் மாநாட்டில் பெரியார் 1929)*

''திரவிட மொழிகளை முறையாக முதன்முதலில் ஒப்பிட்டு நோக்கிய இராபர்ட் கால்டுவெல், த்ரமிட, த்ரமிள, தமிலோ, தமுலுக்க, தமிரிஸ், துமிரிக்கி, திமிரிக்க, திமில, திமர முதலிய பெயர்கள், தமிழ் மொழிக்கு முன்னர் சூட்டப்பட்டு இருந்த பெயர்கள் என்று [A comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages (1975) ல்,10] குறிப்பிடுகிறார்.

மேற்குறித்த பெயர்கள் எல்லாம், தமிழ் என்னும் பெயரின் திரிபுகள் என்பதை ஏற்றிட மறுக்கின்ற இராபர்ட் கால்டுவெல், 'திரவிட' என்னும் சொல்லின் வளர்ச்சிதான் 'தமிழ்' என்னும் சொல் என்ற அவரது கூற்றில் உறுதியாக நிற்கிறார். திரவிட என்னும் சொல்லும் ஒரு தமிழ்ச் சொல்தான் என்பது அவர் கருத்து ('த்ர' என்பது திரவிடியம் அல்ல; 'திர் என்றுதான் தமிழில் இது வழங்கும். மேலது பக்கம் 9-10)*

*(திராவிடர் வரலாறு, சோதிப் பிரகாசம், பக்கம் 151)*

*மேற்கண்ட கருத்துகளில் 'தமிழும்' 'திராவிடமும்' வேறல்ல என் பதை உணரலாம். இப்போது தணிகை அவர்களின் வரைவிலக் கணத்தைப் பாருங்கள்.*

---

*கட்டுரையாளர் கால்டுவெல் நூல் பக்கம் 10இல் குறிப்பிடப் பட்டுள்ளதாக மேற்கோள் காட்டும் இரு பகுதிகளையும் சோதிப் பிரகாசத்தின் 'திராவிடர் வரலாறு' என்னும் நூலிலிருந்து எடுத்தாள்கிறார். கால்டுவெல் தன் நூலில் (1875) அறிமுகப் பகுதியை 1 முதல் 154 பக்கங்கள் வரை எண் இடுகிறார். பின்னர் இலக்கணப் பகுதியையும் 1 முதல் 640 முடிய எண் இடுகிறார். இவ்விரு எண்ணிடல்களிலும் 9, 10, 11 பக்கங்களில் தமிழ் பற்றிய இப்படியான பல்திரிபு வியாக்கியானங்களைக் கால்டுவெல் அளிக்க வில்லை. இது மறைந்த ஆய்வாளர் சோதிப் பிரகாசத்தின் அதிரடி கண்டு பிடிப்புகளாக இருக்க வேண்டும். - இதழாசிரியர்.

"தமிழ் மொழியைப் பேசும் தமிழ் தேசத்துத் தமிழர்கள்தாம் தமிழ்த் தேசிய இனம்." அதாவது தமிழகப் பகுதியில் வாழ்ந்துவரும் தமிழ் பேசுகிற அனைத்து திராவிடர்களும் தமிழ்த்தேசிய இனம் தான். ஐயா, இதைத்தானே ஒரு நூற்றாண்டாக திராவிடர் இயக்கங்கள் கூறிக்கொண்டிருக்கின்றன!

வரைவிலக்கணம் என்பது தெளிவாகப் புரிவதற்கு மட்டுமல்ல, அது ஒரு விதத்தில் இந்த இலக்கணத்துக்கு பொருந்தாதவை களைப் புறக்கணித்து, அவற்றின் இருப்பை மறுதலித்து ஒதுக்கு கிறது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்த வரைவிலக்கணம் சொல்ல வருகிற விஷயம் (விஷமம்) முக்கியமானது. தமிழனுக்குப் பிறந்தவர்களே தமிழர்கள் என்பது தாம். இதை இப்படி வெளிப்படையாகச் சொல்ல முடியாததற்கு காரணம், ஏகப்பட்ட தமிழ்மொழி ஆர்வம் கொண்ட மொழிச்சிறு பான்மையினரின் ஆதரவை இழக்க வேண்டிவருமே, அதனால்தான்.

இந்த வரைவிலக்கணம் தந்தவரே அதே புத்தகத்தில் கூறுவதைப் பாருங்கள்:

> **... தமிழ்த் தேசிய இன உருவாக்கத்தில் வீட்டு மொழித் தடைகள் வரப்புகளாக இருக்குமே ஒழிய, மதில்சுவர்களாக நின்று தடுக்க வாய்ப்பில்லை. இந்த வகையில் தமிழ்நாட்டில் உட்பகுதியில் வாழ்கின்ற தெலுங்கர்கள், கன்னடர்கள், மலையாளிகள், சவுராஷ் டிரர்கள், உருது பேசும் இஸ்லாமியர்கள் போன்றோரில் இன்று தமிழ் மொழிக்காகவும் தமிழர் உரிமைக்காகவும் போராடும் அயிரக்கணக்கான தமிழ் மக்களை நாமறிவோம். எனவே இவர்கள் வேற்றினமல்ல; தமிழினமே!**

*(தலித்தியம்-தமிழியம்-இந்தியம்) தணிகைச்செல்வன், பக்- 15)*

வீட்டில் மட்டுமே வேறுமொழி பேசுகிற, ஆனால் தமிழ் படித்துப் பேசுகிற உட்பகுதிப் பிற மொழியினரைத் தமிழராகச் சேர்க்கலாம். ஆனால் தமிழராகத்தான் சேர்க்க முடியும் என்பது அவர்களின் தாய்மொழியை மறுப்பதும் இன உரிமையை மறுப்பதும் ஆகிறது. இது பச்சையான பாசிசம் இல்லையா? தமிழனுக்குத் தாய்மொழிப் பாசம் வளர வேண்டும், வரவேண்டும். மாற்றானுக்கு வரக்கூடாது என்பதில் நியாயம் ஏதேனும் இருக்கிறதா?

பிறமொழியினர் தங்கள் தாய்மொழியைப் பேச மட்டுமே செய்கிறார்கள். ஆனால் அந்த மொழியில் எழுதவோ படிக்கவோ தெரியாது என்பதால் தங்களை அண்டி அடிமைகளாகக் கிடக்கவேண்டும் என்பதற்காகத் தமிழ்த் தேசியத்தில் சேர்ப்பது என்பது ஒடுக்குமுறை கலந்த ஆதிக்க ஆண்டை மனமன்றி வேறில்லை.

மக்களைத் திரட்டுவதற்காகப் பிறமொழியினரைச் சேர்ப்பவர்கள் வைக்கும் முழக்கங்கள் யாருக்கு எதிராக அமையும் என்பதைப் பாருங்கள்:

> **''தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கு மட்டுமே இடஒதுக்கீடு, வேலைவாய்ப்பு, வணிகம், தொழில் நடத்த உரிமை அளித்தல்.''**
>
> **''தமிழ்நாட்டிலே தமிழரல்லாதார், நிலம் மற்றும் அசையாச் சொத்துகளை வாங்குவதற்குத் தடைவிதித்தல்.'**

*(2-10-2000இல் நடந்த தமிழர் தேசிய இயக்க 5ஆவது மாநில மாநாட்டில் திரு. பழ.நெடுமாறன் ஆற்றிய தலைமையுரை)*

பிறமொழியினர் இங்கு வசிக்கலாம், கல்வி, வேலைவாய்ப்பு, தொழில், சொத்து வாங்குதல் எதிலும் உரிமை கிடையாது. சுருக்கமாகச் சொன்னால் அடிமைகளாக இருக்கலாம்.

இதை மறுக்கிறவர்கள் இனப்பகைவர்கள், மொழித் துரோகிகள் என முத்திரை குத்தப்படுவர். இந்தக் கொள்கைகளை இவர்கள் வைத்திருக்கும்வரை தமிழ்த்தேசத்தில் மொழிச் சிறுபான்மை யினருக்கும் சிறுபான்மை தேசிய இன மக்களுக்கும் என்றைக்கும் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து இருந்துகொண்டே இருக்கும்.

இந்தத் தமிழகப் பகுதியில் ஏறக்குறைய 30% சதவீதம் பேர் தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்களே கலந்து வாழ்கிறார்கள். இவர்கள் 'தமிழ்த் தேசியம்' அமைந்தால் தமிழைப் பொது மொழியாக ஏற்கவேண்டும் என்று சொல்பவர்கள், இந்தியை இன்றுவரை பொதுமொழியாக ஏற்காதவர்கள், தமிழ்மொழி அல்லாத எந்த மொழியும் தங்களை ஒடுக்கும் என்பவர்கள் பிறர்மீது தம் மொழியைத் திணிப்பதை ஒடுக்குமுறையாக நினைக்க மறக்கிறார்கள் அல்லது மறுக்கிறார்கள்.

இந்தப் பாசிசவாதிகள் மறுபுறம் தமிழரல்லாதவர்களை 'வெளியாரை வெளியேற்றுவோம்' எனும் முழக்கத்தை முன்வைத்து, இனக் களை எடுப்பு நடத்திக்கொண்டு வருவதைக் குறித்து மார்க்சியம் பேசுகிற தமிழ்த் தேசியர்கள் வாயைத் திறப்பதில்லை என்பதையும் கவனிக்க வேண்டும்.

தமிழ்நாட்டில் தமிழ் பேசுகிற இனமாக இருந்தாலும், 'பார்ப்பனர் கள்' தமிழின் பகைவர்கள் என்கிறார் தணிகை.

> **தமிழ்நாட்டில் தமிழ்ப்பகைவர்கள் இருக்கிறார்களா? இருக் கிறார்கள்.**
>
> **... வீட்டிலும் வெளியிலும் தமிழே பேசினாலும் சிலருக்கு சமஸ்கிருதமே பூர்வ மொழி; சமஸ்கிருதமே வேத மொழி; வேதமே தம் சமூக வாழ்வின் இதயத் துடிப்பு; அது மறைந்து போனால் பிறவியின் நோக்கமே பிணமாகிப் போனதாகும் என்று இன்றும் உணர்வு பூர்வமான நம்பிக்கை இருக்கிறது. உதிரத்தில் ஊட்டப்பட்ட இந்த நம்பிக்கைதான் பிராமணர்கள் தமிழைத் தாய்மொழியாக அரவணைக்கத் தடையாகி நிற்கிறது. தமிழைவிடவும் இந்தியே சமஸ்கிருதத்துக்கு உறவு மொழியில் நெருக்கமான மொழியாகத் தெரிவதால் அதை இந்தியத் தேசிய மொழியாக ஏற்கச் சம்மதிக்கிறார்கள்.''**

*'தலித்தியம் தமிழியம் இந்தியம்'*
*தணிகைச் செல்வன், பக். 77.*

பார்ப்பனர்கள் தமிழின் பகைவர்கள். எனவே இவர்களை 'தமிழ்த்தேசியத்தில்' ஏற்க மறுக்க வேண்டும் என்கிற தணிகை, இவரே புகழ்கிற தமிழ்த்தேசத் தலைவர்களில் முக்கியமானவரான பழ.நெடுமாறன் அவர்கள் பார்ப்பனர்களைத் தமிழர்களாக ஏற்கிறார். அவருக்கு ஒரு மறுப்புரையை எங்காவது எழுதியிருக் கிறாரா தணிகை? தோழர் பெ.மணியரசன் போன்ற தமிழ்த் தேசியர்களின் இயக்கங்களில் பார்ப்பனர்கள் முக்கிய பங்கேற் கின்றனரே, அது குறித்து விவாதம் நடத்தியிருக்கிறாரா? தெரிய வில்லை.

பார்ப்பனர்களைச் சேர்க்கவில்லையெனில் அவர்கள் கேட்கிற கேள்விக்கு பதில் சொல்லவேண்டி இருக்கிறது. தமிழ் இலக்கியச் செல்வங்களை எல்லாம் தேடிப் பதிப்பித்த உ.வே.சா. ஒரு பார்ப்பனர். தமிழ் இலக்கியங்களைப் படைத்த ஏராளமானோர் பார்ப்பனர்கள். இவர்களின் பங்களிப்பு மட்டும் தமிழுக்கு வேண்டும், இவர்கள் வேண்டாமா என்பதே அது. இதற்குத் தணிகையின் பதில்:

> **''தமிழ்ப்பற்று, தமிழினப்பற்று, வர்ணாசிரம தர்மம் ஒழிப்பு ஆகிய கோட்பாடுகளை ஏற்றுக்கொள்ளும் பார்ப்பனர்கள் தமிழ்த் தேசிய நீரோட்டத்தில் பங்குபெறத் தகுதி பெற்றவர்களாவார் கள். முதலாளித்துவக் குடும்பத்திலிருந்து வந்த ஏங்கல்ஸ் மார்க்ஸிஸ்ட் ஆனதுபோல பார்ப்பனக் குடும்பத்திலிருந்தும் பார்ப்பனிய எதிரிகள் வரக்கூடும். அவர்களை வரவேற்கிறோம்.**

*(தலித்தியம் தமிழியம் இந்தியம், தணிகைச் செல்வன் 65)*

ஒவ்வொரு பார்ப்பனருக்கும் 'தேர்வு' வைத்து தமிழ்ப்பற்று ஏற்கிறீர்களா? 'ஆம்,' 'இல்லை' என்பதை 'டிக்' செய்யவும் என்ற வகையில், அதில் தெரிவு செய்யப்படுபவர்கள் மட்டுமே சேர்க்கப்படுவார்களா? என்னவொரு வினோதமான நிபந்தனை! இவர்களைச் சேர்ப்பதற்கான அங்கீகாரம் வழங்கப்போவது யார்? யதார்த்தத்தோடு எந்த உறவும் இல்லாமல் படைப்பாளியாக மட்டுமே இருக்கிற எவருமே இப்படித்தான் பயனற்றுச் சிந்திப்பார்கள்.

இன்றைக்கு மாற்றுத் தத்துவம், கோட்பாடு என எதையாவது

அறிவாளர்கள் முன்வைக்கலாம். கோட்பாட்டை உருவாக்குகிற யாரும் நடைமுறைக்குப் பொறுப்பேற்க முடியாது. மேலும் வெகுஜன இயக்கமாக மாறும்போது இவர்கள் சொல்லும் திசையில்தான் செல்லும் என உறுதியாகக் கூற முடியாது. 'பற்று'ஆகத் தொடங்குவது பாசிச வெறியாக மாற அநேக சந்தர்ப்பங்கள் உண்டு என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

'தூய தேசிய வாதம்' ஒரு புறம் ஒலித்துக்கொண்டு இருக்கிறது. மெல்லிய ஓசையாய் இருக்கும் அது பெருத்த முழக்கமாய் ஒலிக்கும்போது ஏகப்பட்ட கலவரங்கள் ஏற்படும். அப்படியே தமிழர்கள் மட்டுமே இந்த மண்ணில் இருக்க வேண்டும் என்ற நிலை வந்தால், தமிழ்ப் பார்ப்பனர்களும் உயர்சாதி இந்துக் களும்தான் அதிகாரத்தில் இருப்பார்கள். மீண்டும் சமூகம் பழமைக்குள் சென்றுவிடும்.

மொழி என்பது வெறும் ஊடகமில்லை என்று கருதுபவர்கள் தமிழ்த்தேசியர்கள். அது ரத்தமும் சதையுமாக உருவானது என்று கருதுபவர்கள். இது தமிழுக்கு மட்டும்தானா? பிறமொழி பேசுபவர்களுக்கு இது பொருந்தும் என்பதை ஏன் மறக்கிறார்கள்?

மொழி என்பது ஒரு விதத்தில் சமூக உளவியல் வகுப்புகளையும் வெறுப்புகளையும் வெளிப்படுத்தும் கருவியாக உள்ளது என்பவர் கள் ஒன்றைக் கவனிக்க வேண்டும். ஒரே மொழி பேசும் மக்கள் குறிப்பாக பிறமொழி பேசுபவர்கள் அருகில் இருக்கும்பொழுது, தம் உணர்வுகளையும் கருத்துகளையும் பறிமாறிக்கொள்ளத் தமது தாய்மொழியில் உரையாடுவதில் பெருமிதம் சார்ந்த உளவியல் மகிழ்வு கொள்கின்றனர். இந்த உள்ளார்ந்த மனநிறைவு 'தமிழ்த் தேசம்' அமையும்பொழுது மொழித் துரோகிகளாகச் சித்தரிக்கும் சந்தர்பம் கண்டிப்பாக அமையும் என்பதையும் உணரவேண்டும்.

உட்புறப்பகுதியில் அமைந்துள்ள தெலுங்கு இனமக்கள் இயல்பான அவர்களின் கலாச்சாரத்தால் முதலாளியக்கூறு அமையப் பெற்றிருக்கிறார்கள். 'தலித்துகள்' தமிழ்த்தேச விடுதலையை முன்னெடுக்கும்போது தலித்துகளில் உள்ள தெலுங்கு மொழியினர் இனப்போரை முன்னிலைப்படுத்துவதா அல்லது மொழிப்போரா என்னும் சிக்கல் வந்து சிக்குவார்கள். தலித்தியத்தில் உள்ள தெலுங்கு பேசுவோருக்கும் தெலுங்கு சிறுபான்மையினருக்கும் இணக்கம் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. இந்தச் சூழ்நிலைகள் அவர்களை துரோகிகளாக்கும் என்பதையும் உணர வேண்டும்.

தமிழினம், தமிழ்த்தேசம் போன்ற கருத்துருவாக்கங்களை ஆராய் வதில் தன் வாழ்நாளில் பெரும்பகுதியைச் செலவிட்ட ஆய்வாளர் முனைவர் கோ.கேசவன் குறிப்பிடுவதைப் பாருங்கள்:

> **''இவ்வாறு ஒடுக்கப்படும் சக்திகளின் கண்ணோட்டத்தி லிருந்து சிக்கல்களை அணுகும்போது தமிழ்த்தேசிய இனம் தன்னை ஒற்றைத் தொகுப்பாக அடைகாத்துக் கொண்டிருக்க வியலாது. தமிழ்த் தேசிய இனத்தில் சாதிய அளவிலும் வர்க்க அளவிலும் ஒடுக்கும் சக்திகளும் ஒடுக்கப்படும் சக்திகளும் உள்ளன. இவற்றில் ஒடுக்கப்படும் சக்திகளின் கண்ணோட்டத் தில் தேசிய இனச்சிக்கலை அணுகும்போது தமிழ்த்தேசிய இனம் சாதி அளவிலும் வர்க்க அளவிலும் பகுக்கப்பட்டாக வேண்டும். உயர்சாதியக் கண்ணோட்டத்திலும் ஆதிக்க வர்க்கக் கண்ணோட்டத்திலும் தேசிய இனச் சிக்கல்கள் அணுகப்படு மானால் அவை அனைவருக்கும் சனநாயகத்தை வழங்க இயலாது. அவை உயர்சாதிக்கானதும் ஆதிக்க வர்க்கத்துக் கானதும் ஆன தேசியமாக மட்டுமே சுருங்கிவிடும். ஒடுக்கப் படும் தமிழ்த்தேசிய இனத் தத்துவத் தலைமையின் கீழ் தமிழ்த்தேசிய இனத்தில் ஆகப் பெரும்பான்மை மக்களின் எந்தவொரு சிக்கலையும் தீர்த்து வைக்க முயற்சிக்கும்.**
>
> **இன்னொன்று, இன்றைய சாதிய வர்க்க முரண்கள் கூர்மை யடைந்துள்ள சமூகத்தில் இத்தகைய வேறுபாடுகளைக் கடந்த முழுமையான தமிழ்த் தேசிய திரட்சி சாத்தியமுமில்லை. தமிழ் உயர்சாதியினரும் ஆதிக்க வர்க்கத்தினரும், தத்தம் சாதிய, வர்க்க, ஆதிக்கக் கருத்துகளையும் நடைமுறைகளை யும் விடுத்து சனநாயக சமத்துவ கருத்துகளையும் நடைமுறை களையும் ஏற்கும்பொழுது அவர்கள் ஒடுக்கப்படும் சக்தி களின் கண்ணோட்டத்திற்கு வந்தடைய முடியும். அத்தகைய சாத்தியம் முழுமையடையாத சூழலில், முழுமையான தமிழ்த் தேசிய திரட்சி சாத்தியம் இல்லை. ஒடுக்கும் தமிழ்த்தேசிய இனத்தில் பிறந்துவிட்ட சனநாயக சக்திகள் மட்டுமே இத்த கைய கண்ணோட்டத்தைப் பெற இயலும்.**
>
> *(தமிழ்: மொழி-இனம்-நாடு, கோ.கேசவன் பக். 63-64)*

இந்தியாவின் எந்தப்பகுதிக்கும் இல்லாத அளவில் தமிழகத்தில் தேசிய இனச்சிக்கல் உள்ளது. தமிழகத்தின் தனித் தன்மையை நோக்கும்பொழுது தமிழ்த்தேசிய இனம், சிறுபான்மை தேசிய இனங்கள், மொழிச் சிறுபான்மையோர் வாழ்கின்றனர். இவர்கள் தமிழைப் பொதுமொழியாக விரும்பி ஏற்காத வரையிலும், பொதுப்பண்பாட்டில் பொதுமனப்பாங்கு ஏற்படாதவரையும் தமிழ்தேசம் கட்டுவது சாத்தியமில்லை; மீறிச் செய்வது தேசிய வெறித்தனத்துக்கும் பாசிசத்துக்கும் இட்டுச்செல்லும் என்பது உண்மை.

## தலித்தியமும் தமிழ்த்தேசமும்

தமிழ்த்தேசிய தன்னுரிமைப் போரில் தலித்துகள் முன்னெடுத்து செல்லப்பட வேண்டும் என்கிற 'தணிகையின் கோட்பாடு' பல சிக்கல்களையும் முரண்பாடுகளையும் கொண்டுள்ளன.

'தலித்துகளை யாராக இவ்வளவு காலம் வைத்திருந்தனர்? இப்போது தலித்துகளை தலைமையேற்க ஏன் அழைக்க வேண்டும்?' என்ற வினாக்கள் இயல்பாக ஒவ்வொரு தலித்துக்கும் எழத்தான் செய்யும்.

தலித்துகள் தமிழர்களா? இல்லையா? என்பது குறித்து விவாதம் இன்னும் தொடர்கிறது.

> **18-19ஆம் நூற்றாண்டில் மட்டுமல்ல, 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும்கூட 'தமிழர்கள்' என்ற பிரிவின் உள்ளடக் கமாகத் தாழ்த்தப்பட்ட மக்கள் கருதப்படவில்லை. பார்ப்பனர் களும் பறையர்களும் தமிழர்கள் என்ற வரையறைக்குள் சேர்க்கப்படவில்லை**

என்று எம்.ஏ.ஷெர்பிங் தனது *Hindu Tribes and Castes* (இந்து மதப் பழங்குடிகளும் சாதிகளும்) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

தமிழறிஞர் வையாபுரிப்பிள்ளையால் தொகுக்கப்பட்ட சென்னை பல்கலைக்கழகம் வெளியிட்ட *(Tamil Lexicon)* அகராதியில்

> **தமிழன் என்ற சொல்லுக்கு 'பறையனொழிந்த தமிழ்ச் சாதியான்' என்று வரையறை செய்யப்பட்டிருந்தது**

என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

1921இல் சென்னை பக்கிங்காம் & கர்னாடிக் ஆலைத் தொழிலா ளர்க்கிடையே நிகழ்ந்த வன்முறை குறித்து நவசக்தி இதழில் திரு.வி.க. தாழ்த்தப்பட்டவரை 'பறையர்' என்றும் ஏனையோரை 'தமிழர்' என்றும் குறித்து எழுதியதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இப்படிப்பட்ட சூழலில் 1882ஆம் ஆண்டு தாழ்த்தப்பட்ட மக்களைப் பூர்வத் தமிழர் என்று அடையாளப்படுத்தக் கூறி அயோத்திசாதப் பண்டிதர்தான் தீர்மானம் இயற்றினார்.

ஆனால், தலித்துள் தமிழர்களே என்று கூறியவர் பெரியார்தான் என்றும் அதற்கு ஆதாரமாக 25-8-1940இல் குடியரசில் அவர் எழுதிய கட்டுரையின் ஒரு பகுதியை கூறுகின்றனர் சில தமிழ்த் தேசியர்கள்.

> **''... ஆதித்திராவிடர் என்ற பெயர் மாற்றப்பட்டு இருவரும் திராவிடர்கள் அல்லது தமிழர்கள் என்கிற பெயராலேயே வழங்க பட வேண்டுமென்பதும், திராவிடருக்கும் ஆதிதிராவிடருக் கும் சமுதாயத் துறையிலுள்ள பேதங்கள் ஒழிந்து, ஒரே சமூகமாக ஆக்கவேண்டும் என்பதும் எனது ஆசை.''**

இதை வைத்து ஆதிதிராவிடர்கள் தமிழர்களுக்குள் ஓர்மை ஏற்படக் காரணமானவர் எனப் புகழும் தமிழ்த் தேசியர்கள் இதை உளப்பூர்வமாகப் பெரியார் செய்தாரா? என்பது குறித்த ஆராய்ச்சியில் ஈடுபடுவதில்லை.

இந்த இடத்தில் ஒன்றைக் குறிப்பிடவேண்டும். பெரியாரை விமர்சிப்பது ஒரு பாவச் செயல் என்பதாகக் கருதுகிற வைதிக மனோபாவம் பகுத்தறிவாளர்களிடம் உள்ளது. எந்த ஒரு தத்துவமும் அதன் எதிர்காலப் பயன்பாட்டில் வைத்து விமர்சிக்கப் படும் போது அதன் வீர்யம் குறைந்து போகவோ பயனற்றுப் போகவோ வாய்ப்புண்டு. அதை வரலாற்றில் வைத்து மட்டும் வாசிப்பது அதன் பயன்பாட்டை நிராகரிப்பதற்குச் சமம்.

பெரியார் ஒரு சமூகப் போராளி. தமிழ்ச் சமூகத்தின் முகத்தையும் முகவரியையும் மாற்றி அமைத்தவர் அவர். ஆனால் அவருடைய போராட்டத்தின் குவிமையம் எது என்பதை விருப்பு வெறுப்பின்றி விமர்சிக்கிறபோது கிடைக்கவரும் உண்மைகளை ஏற்பதுதான் நலம். பெரியாரே இதைத்தான் செய்வார். ஒரு தலித்தாக இருந்து தலித்திய நோக்கில் செய்யப்பட்ட விமர்சனத்தைப் பாருங்கள்:

> **''... பிராமணர்களும் பிராமணர்களின் மேலாண்மையை உறுதி செய்யும் சாதி அடுக்கும்தான் அவர் அடையாளப்படுத்திய எதிரிகள். மனிதர்களை நான்கு வருணங்களாகப் பிரித்து, நாலாவது வர்ணத்தவர்களாகிய சூத்திரர்களை 'அடிமைகள்' என்றும் 'தேவதாசிகளின் பிள்ளைகள்' என்றும் சொன்ன மனு ஸ்மிருதியை நடைமுறை வாழ்க்கையின் வழிகாட்டியாகக் கொண்ட இந்துத்துவம் என்னும் கருத்தியல்தான் அவர் முதன்மை யாகக் குறிவைத்த எதிரி. இந்துத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் இந்து மதம் எதிரியாகின்ற போது அதன் ஆதரவு சக்திகளாக இந்து மதத்தின் கடவுள்கள், அவற்றிற் கான வழிபாடுகள், நம்பிக்கைகள், நம்பிக்கைகளைத் தோற்று விக்கும் சமய நூல்கள் என அனைத்துமே எதிரிகளாகத்தானே நிற்கும். ஈ.வெ.ராமசாமி அப்படித்தான் நிறுத்தினார். அவற்றின் கதைகளையும் உள்நோக்கங்களையும் முன்னோக்கிப் போக விடாமல் பின்னுக்கு இழுக்கும் தந்திரங்களையும் அம்பலப் படுத்தினார். உதிர்க்கப்படும் ஒவ்வொரு வார்த்தையும் வர்க்கச் சார்புடையது என்பதுபோல இந்திய சமுதாயத்தின் ஒவ்வொரு வெளிப்பாட்டிலும் பிராமண மேலாண்மையின் கூறுகள் உள்ளன என்பது அவரது வாதங்கள். வர்ணாசிரமத்தின் பிடிக்குள் வந்து விட்ட இந்திய மொழிகளும் அவற்றில் தோன்றும் கலை, இலக்கியங்களும் பண்பாட்டுக் கூறுகளும் சாதி காப்பவை என்பவை பெரியாரின் கண்டுபிடிப்புகள். அந்தக் கண்டுபிடிப்பு களில் முரட்டுத்தனமும் எல்லாவற்றையும் நிராகரிக்கும் - வரலாற்றின் சேகரங்கள் அனைத்தையும் நிராகரிக்கும் - மனோ பாவமும் இருந்தன என்பது உண்மை. தனிமனிதனின் விருப்பங் களுக்கும் அழகியலுக்கும் ஆன்மீகத்திற்கும்கூட இடமில்லைதான். தாய்மொழி, சொந்தபந்தம், எனது ஊர், எனது துயரம், களி யாட்டம் என்றெல்லாம் பேசுவது கூட அவருக்கு உவப்பானது அல்லதான். அதற்காகவெல்லாம்தான் அவரது எதிரிகள் அவரை விமரிசனம் செய்தார்கள்; செய்கிறார்கள். ஆனால் இன்று தலித் துகள் விமர்சனம் செய்வது இவற்றுக்காக அல்ல என்பது உணரப்பட வேண்டும்.**
>
> **தலித் சிந்தனைகளினூடாக பெரியார் மீது வைக்கப்படும் விமரி சனங்கள் நிகழ்காலத்தின்மீது நின்றுகொண்டு வைக்கப்படும் விமர்சனங்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நிகழ்காலம் அவர் மீது ஐயம் கொள்கிறது என்பதையும் புரிந்து கொள்ள முயலவேண்டும். பிராமணர்களை எதிரிகளாகச் சித்த ரித்த அவரின் போராட்டங்களின் விளைவு பிராமணரல்லா தாரின் விடுதலை. பிராமணியக் கருத்தியலிலிருந்து விடுதலை என்று பேசிய பெரியார் பெற்றுத் தந்தது விடுதலை அல்ல, கூடுதலான உரிமைகளும் சலுகைகளும்தான். இவை ஓரளவு கிடைத்திருக்கின்றன என்பதில் பலருக்கும் மகிழ்ச்சி. குறிப்பாக சூத்திரச் சாதிகள் என மனு ஸ்மிருதியால் வருணிக்கப்பட்ட இடைநிலைச் சாதித் தலைவர்களுக்கும் அறிவாளிகளுக்கும் அதிக மகிழ்ச்சி. தங்கள் மகிழ்ச்சிக்கு காரணமான பெரியாரை அவர்கள் கொண்டாடுகின்றனர். அந்தக் கொண்டாட்டங்கள் அவர்களைப் பொறுத்தவரை நியாயமானதாகக்கூட இருக்கலாம். ஆனால் தலித்துகளும் கொண்டாட வேண்டும் என எதிர்பார்ப்பது தான் ஏனென்று புரியவில்லை.**

அ. ராமசாமி 'நிகழ்காலத்தில் பெரியார்'
புதிய கோடாங்கி 9-10

தலித்திய விடுதலைமீது உண்மையான அக்கறை கொண்டவர்கள் இந்தக் கூற்றின் நியாயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். அப்படி யில்லாமல் தலித் கோயபல்சுகள், பெரியாரைக் கொச்சைப் படுத்தும் துரோகிகள் என்று சொல்வதிலும், இப்படி பெரியாரை தலித்துகள் நிராகரித்தால் அது பார்ப்பனர்களுக்கு ஆதரவாகப் போய்விடுமே என்றெல்லாம் மாற்றுஅணை அமைத்துத் தடுப்ப தால் உண்மையான தலித் விடுதலை சாத்தியமாகாது என்பதை யும் உணர வேண்டும். சரி விஷயத்துக்கு வருவோம். தலித்துகளைப் பற்றிப் பெரியார் என்ன கருத்து கொண்டிருந்தார் என்பதைப் பார்ப்பது நலம்.

காந்திஜி ஒரு சமயம், தாழ்த்தப்பட்ட மக்கள் சூத்திரர் செல்லும் அளவுக்குச் செல்லலாம் என்று கருத்து சொன்னபோது பெரியார் தெரிவித்த கருத்து இதோ...

> **''தீண்டாமை விலக்கு என்பதும் கோவில் பிரவேசம் என்பதும் சூத்திரனைப் பறையனோடு சேர்ப்பதுதானா? பறையன் கீழ்ச் சாதி என்பது மாற்றப்படவில்லையெனில் அதற்காக சூத்திரனைப் பறையனோடு சேர்ப்பதா? இந்த அனுமதியானது இதுவரை நடுசாதியாக இருந்த சூத்திரர் என்பவர்கள் இப்போது கீழ்ச்சாதி யாகவே ஆக்கப்பட்டுவிட்டார்கள் ஆனதால் நாம் அனுமதிக் கக் கூடாது.''**

'வைக்கம் போராட்ட வரலாறு' 'வீரமணி'

1955இல் மத்திய அரசு இந்தியாவை வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்று திசைகளின் அடிப்படையில் நான்கு பெரும் மாகாணங்களாக பிரித்துவிடுவது என்று முடிவெடுத்தது. தெற்கு மாகாணத்திற்கு தட்சிணப்பிரதேசம் என்றும் அழைக்கப் பட்டிருந்தது. அப்போது பெரியார் அது குறித்து தெரிவித்த கருத்து இது:

> **''தட்சிணப் பிரதேசம் வந்தால் தமிழராகிய நமக்குத்தான் ஆபத்து. தமிழ், கன்னடம், மலையாளம் மூன்று நாடுகளும் ஒன்று சேர்ந்தால் பார்ப்பனர்களால் கழித்துவிடப்பட்டு நம்ம வருக்குக் கிடைத்துவரும் உத்தியோகங்கள் எல்லாம் மலையாளி கள் கைக்குத்தான் போய்விடும். நாமெல்லோரும் போலிஸ், கக்கூஸ் எடுத்தல், ரெயில்வே கூலி முதலிய வேலைகளைத் தான் செய்ய வேண்டிய நிலைமை வரும்''.**

(ஈ.வெ.ரா. சிந்தனைகள் வே.ஆனைமுத்து)

தட்சிணப்பிரதேசத்தை எதிர்க்க வந்தவர் 'கக்கூஸ் எடுத்தல்' என்பது கேவலமான வேலை என நினைத்தால் அவர் எந்த வகுப்பினருக்குரியவராகச் சிந்தித்திருக்கிறார் என்பதையும் யோசித்துப் பார்க்க வேண்டும். தாழ்த்தப்பட்டோரைப் பற்றிய உயர்சாதியினரின் எண்ணத்தைத்தானே இது பிரதிபலிக்கிறது?

ஒரு முறை ஈ.வெ.ரா. அவர்கள்,

> **''துணி விலை ஏறிவிட்டதற்குக் காரணம் - இப்போது பறைச்சி களெல்லாம் ரவிக்கை போடுவது தான்! வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிப்பதற்குக் காரணம் - பறையன்களெல்லாம் படித்துவிட்டதுதான்.''**

என்று பேசியதாக 'உணவில் ஒளிந்திருக்கும் சாதி' என்னும் புத்தகம், பக்கம் 176இல் அன்புபொன்னோவியம் பதிவு செய்திருக்கிறார்.

தேர்தலில் காங்கிரசுக்கு ஆதரவாகப் பெரியார் செயல்பட்ட போது பெரியாரின் இப்பேச்சைச் சுட்டிக்காட்டி 1962இல்

முரசொலி பொங்கல் மலரில் கருத்துப்படம் வெளியிடப் பட்டுள்ளது.

தலித்துகளின் பார்வையில் பெரியாரின் கருத்துகளை ஆராய்ந்த டாக்டர் சாமி சண்முகம் முன்வைக்கும் கேள்விகள் சிலவற்றைப் பாருங்கள்:

> ''வைக்கம் போராட்டவீரர் பெரியார் கேரள காங்கிரஸ் முன்னெடுத்த போராட்டத்தில் வென்றார். ஆனால் தமிழகத்தில் தலித் மக்கள் உரிமைக்காக என்னென்ன போராட்டங்கள் நடத்தினார்?
>
> ''இது குறித்து மேடைகளில் பேசியிருக்கலாம். செயல்பாடுகள் என்னென்ன?
>
> ''முதுகுளத்தூர், வெண்மணி போன்ற இடங்களில் தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கொடுமை ஏற்பட்டபோது அதை எதிர்த்துப் பெரியார் ஏதாவது போராட்டங்கள் நடத்தினாரா?
>
> '''தீண்டாமை' என்று கூறிப் பார்ப்பனர்களை மட்டுமே எதிர்த்து வந்த பெரியார் தீண்டாமையை மிகக் கடுமையாகக் கடைப்பிடித்த சாதி இந்துக்களை எதிர்த்து ஏன் போரிடவில்லை? தீண்டாமை தலைவிரித்து ஆடும் பரமக்குடி, முதுகுளத்தூர், மானாமதுரை ஆகிய பிரதேசங்களில் ஆலயப் பிரவேசம் செய்யவில்லை. வைக்கத்தில் நம்பூதிரி பிராமணர்களை எதிர்த்தவர் தமிழ்நாட்டில் முக்குலத்தோரை ஏன் எதிர்க்கவில்லை?
>
> ''பெரியார் நடத்திய இயக்கம் பிராமணர்களின் பூணூலை மட்டுமே அறுத்ததே? பூணூல் அணிந்து பெருமை பேசிய 'செட்டியார்', 'கம்மா', 'பலிகா', 'வள்ளுவர்', 'தச்சர்', 'கொல்லர்', 'ரெட்டியார்'– இவர்களின் பூணூல் ஏன் அறுக்கப் படவேயில்லை?''

இந்தக் கேள்விகள் மட்டுமல்ல, பெரியாரியத்தை நோக்கி மா.வேல்சாமி (புதிய கோடாங்கி மே 2004) வைத்த கேள்விகளும் முக்கியமானவை

- *கூலி உயர்வு கோரியதாக 42 தலித் விவசாயிகளைக் கொன்று எரிக்கும்போது எங்கே போயிருந்தது - பெரியாரியம்*
- *கண்டதேவி கோவில் வடம்பிடிக்கும் உரிமை மறுத்து தேர்வடம் பிடிக்கும் உரிமை எங்களுக்கே உள்ளது என்று தலித்துகளைப் புறக்கணித்தபோதும்*
- *தேர்தல் ஜனநாயக முறையினை அவமதித்து - தலித் பஞ்சாயத்துத் தலைவரை கழுத்தறுத்தபோதும்*
- *சிதம்பரம் - முதுகுளத்தோர் கலவரத்தின் போதும்*
- *திமுக வன்னியர் X அதிமுக தேவர்களை நம்பி தேர்தலை சந்திக்கும்போதும் எங்கே போயின பெரியாரியம் எங்கே போயினர் பெரியாரிஸ்ட்கள்*

பெரியார் தன் வாழ்நாள் முழுவதும் பார்பனர்களை எதிர்த்து போர் நடத்தி பிராமணரல்லாதோர்களை காத்தார். அதில் சிறிது நலம் ஆதிதிராவிடர்களுக்கும் கிடைத்திருக்கலாம். ஆனால் ஆதி திராவிடர்களுக்காகத்தான் தன் வாழ்க்கையை அர்ப்பணித்தார் என்று பேசுவது துளியும் நியாயமில்லை.

தலித்துகளைப் பெரியார் வெறுத்தார் என்பதல்ல இதன் பொருள். அவர்களை மையமாக வைத்துப் போராடியவரல்லர் என்பதே சொல்லவரும் கருத்து. இப்படிப்பட்ட பெரியார் 1940இல் ஆதி திராவிடர்களை ஏன் தமிழர்கள் என்று சேர்த்துக்கொண்டார் என்ற கேள்வியை முன்வைப்பதற்கு முன்பு அன்றைய சூழலைப் பார்த்துவிடுவது நலம்.

11–8–1937இல் இந்தி 6,7,8 ஆகிய வகுப்புகளில் கட்டாயப் பாடமாக்கப்படும் என்ற ஆணையை இராசாசி அரசு வெளியிட்டது. இதைத் தொடர்ந்து இந்திக்கு எதிரான கருத்துகள், போராட்டங்கள் பல இடங்களில் துவங்கின. 1–6–38இல் இராசாசி வீட்டு முன் மறியல் நடந்தது. பல்லடம் பொன்னுசாமி பட்டினிப் போரை துவக்கினார். 3–6–38இல் மறியலில் ஈடுபட்ட சி.டி.நாயகம் சண்முகானந்த அடிகள் பட்டினிப்போரில் இருந்த பொன்னுசாமி ஆகியோர் குற்றவியல் விதித்திருந்த சட்டத்தின் கீழ் கைது செய்யப் பட்டனர். இதைத் தொடர்ந்து மக்கள் இயக்கம் வீறு கொள்கிறது.

இந்தத் தருணத்தில் இராசாசியின் ஆட்சியில் செய்யப்பட்ட சில நடவடிக்கைகள் பெரியாரிடம் கோபத்தை ஏற்படுத்தியிருந்தன. அப்படி என்ன நடவடிக்கைகள் இராசாசி செய்தார்?

> **... மேலும் அவர் (இராசாசி) தலைமையில் அமைச்சர்கள் எட்டு பேர்; சட்டமன்றத் தலைவர், மேலவைத் தலைவர் ஆகிய பத்துப் பதவிகளில், ஆறு இடங்களில் பார்ப்பனரே இருந்தனர். 12 இலட்சம் ரூபாய் செலவில் புதிய வேத பாடசாலை அமைத்து, அதில் பல பார்ப்பன ஆசிரியர்கட்கு வேலையும் அளித்தார் ஆச்சார்யார். மாறாகச் சேலம் மாவட்டத்தில் மதுவிலக்கை அமுல் செய்வதாகவும், அந்த இழப்பினை ஈடுகட்டக் கிராமப் புறங்களில் ஏழை மக்கள் கல்விக்காக நீதிக்கட்சியினரால் துவக்கப்பட்டிருந்த 2200 ஆரம்பப் பள்ளிகளை மூடிவிடுவதாகவும் ஆச்சாரியார் ஆணையிட்டார். பொற்கொல்லர்கள், தம் பெயருடன் ஆச்சாரி என்ற அவர்களது சாதிப்பட்டத்தை இணைப்பதால் தமது சாதிப் பெருமை குறைவதாக எண்ணி அவ்வாறு அவர்கள் குறிப்பிடக்கூடாது எனவும் ஆணையிட்டார் சக்கரவர்த்தி ராஜகோபால ஆச்சாரி!**
>
> *(தந்தை பெரியார் முழு முதல் வாழ்க்கை வரலாறு, கவிஞர் கருணாநந்தம், பக். 126–127)*

இயற்கையிலேயே பார்ப்பனியத்தின் மீது பகை கொண்ட பெரியார் இந்தப் பார்ப்பனியச் செயல்பாடுகளை எதிர்க்கத் தயாராகும்போதுதான் இந்தி எதிர்ப்பு அவருக்கு ஆதரவாக அமைந்தது.

சென்னையில் 26–6–1938இல் 50000 பேர், விருதுநகரில் 10–7–1938இல் 10,000 பேர் என மக்கள் திரண்டனர். புறநகரங்களில் நடந்த 87 பொதுக் கூட்டங்களில் மொத்தம் 5 லட்சம் மக்கள் கலந்து கொண்டதாக ஒரு குறிப்பு உள்ளது. தமிழ்நாட்டின் மையப் பகுதிகளில் இந்தி எதிர்ப்புக் கருத்தைப் பரப்ப திருச்சியிலிருந்து சென்னை வரை நீண்ட பயணம் மேற்கொள்ளப்பட்டது. 42 நாட்கள் நிகழ்ந்த இந்தப் பயணத்தின் போது 234 கிராமங்கள், 60 நகரங்கள் ஆகியவற்றில் பிரச்சாரம் செய்யப்பட்டது.

இதன் தொடர்ச்சியாக இந்தி எதிர்ப்புப் பிரச்சாரம் செய்த பெரியார் மீது குற்றவியல் விதித்திருந்த சட்டத்தின் 7(1) பிரிவின் கீழ் 5–12–1938இல் சென்னையில் வழக்கு தொடரப்பட்டது. தமிழகப் பெண்களைத் தூண்டியதற்காகக் குற்றம் சுமத்தப்பட்டு 167 நாட்கள் சிறையில் இருந்தார்.

1–6–'38 முதல் நாள்தோறும் பேரணி, கண்டனக் கூட்டம், மறியல் எனத் தொடர்ந்து நடந்தன.

> **மறியல் வீரர்கள் இருவர் மருத்துவமனையில் இறந்தது திருப்பு முனையாயிற்று. தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த தாளமுத்து 15-1-1939இல் இறந்தார். நாடார் இனத்தைச் சார்ந்த நடராசன் 11-3-1939இல் இறந்தார். இந்தப் போராட்டத்தில் ஏராளமான அரிசனங்கள் ஈடுபட்டு சிறை சென்றனர்.**
>
> *(திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும் கோ.கேசவன், 62–72.)*

*இந்தத் தகவல் கருணாநந்தம் அவர்கள் எழுதிய தந்தை பெரியார் நூலில் பக்கம் 133இல் இப்படி உள்ளது:*

> 1939 ஜனவரி 15ஆம் நாள் நடராசனும், மார்ச் 13ம் நாள் தாளமுத்துவும் மாண்டனர்.**

*இவற்றையெல்லாம் பார்த்த பெரியார் அரிசன மக்களின் ஆக்ரோஷமான ஈடுபாட்டைத் தன் அரசியலுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டார். அதனால்தான் அதுவரை ஆதி திராவிடர்களைப் பற்றி அவ்வளவாகக் கருத்தில் கொள்ளாம லிருந்த பெரியார் ஆதிதிராவிடர்களை அரசியல் அரங்கில் தமிழர்களாக அங்கீகரித்தார்.*

*இந்த இடத்தில் 'வல்லினம்' இதழில் வெளிவந்த முனைவர் க.பஞ்சாங்கம் அவர்களின் கருத்து குறிப்பிடவேண்டியதாக உள்ளது.*

> ''19ஆம் நூற்றாண்டில் சமூகம் வேகமாக மாறிக் கொண்டி ருந்த போது அந்த மாற்றத்தைப் பயன்படுத்தித் தங்களை முன்னேற்றிக் கொள்ள வேகமாக முயன்ற சாதி 'தலித்' சாதிதான். அவர்கள்தான் தனித்து சங்கங்கள் கட்டுகிறார்கள். 10–15 பத்திரிக்கைகள் நடத்துகிறார்கள். அயோத்திதாசப் பண்டிதர் மாநாடு நடத்துகிறார். தலித் மக்கள் திரளுகிறார்கள். அந்தச் சூழலில் 1916இல் நீதிக்கட்சி 1925இல் சுயமரியாதை இயக்கம், 1944இல் திராவிடர் கழகம், 1949இல் திராவிட முன்னேற்றக் கழகம், இதற்கு நடுவில் 1924இல் கம்யூனிஸ்ட் கட்சி போன்றவைகள் உருவாக உருவாக எழுச்சி பெற்ற தலித் அடையாளங்கள் உள்வாங்கப்பட்டு சிதைக்கப் பட்டன,''

*என்கிறார். ஆக, பெரியார் உட்பட அனைத்து இயக்கத் தவரும் 'தலித்' ஆதரவைத் தங்கள் பக்கம் திரட்டுவதிலேயே குறியாய் இருந்தார்கள் என்பது தெளிவாகிறது.*

*இதே அடிப்படையில்தான் 'தமிழ்த்தேசியம்' என்னும் பெயரில் 'வெள்ளாளத்தேசியம்' தலித் எழுச்சி மீது குறி வைக்கிறது.*

*இங்கு வேளாளர்கள் என்பவர்கள் யார் என்பது முதலில் தெரிய வேண்டும்.*

> ... மேலே குறிப்பிட்ட ஆய்வுகளில், 'வேளாளர்' என்ற சொல்லே நிலவுடைமையை அடிப்படையாகக் கொண்ட வெள்ளாளர், முதலியார், செட்டியார் முதலான சாதிகளைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளது,' என்று ஆ.இரா.வேங்கடாசலபதி தனது 'திராவிட இயக்கமும் வேளாளரும்' என்னும் நூல்-பக்.15இல் தொ.மு.சி.ரகுநாதன், தமிழவன், ஆர்.சீனிவாசன், யூஜின் போன்றவர்களின் ஆய்வைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார்.

*இந்த வேளாளர்கள்தான் தமிழகத்தில் சாதி தோன்றவே காரணம் என்ற குற்றச்சாட்டைத் திரு.அன்பு பொன்னோவியம் வைக்கிறார்.*

> ''ஏறத்தாழ 9ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் கொங்கு நாட்டில் வேளாளர்கள் குடியேறினார்கள். அங்கு ஏற்கனவே வாழும் வேடர் மக்கள் வேளாளரின் குடியேற்றத்தை எதிர்த்தனர். மன்னர் தலையீட்டிற்குப் பிறகும் வேளாளருக்குத் தம் அம்பட்டர்களை தொழில் செய்யாதவாறு வேடர்கள் தடுத்தனர். ஒரு குழுவாக இருந்த வேளாள மக்கள், தங்கள் தேவைக்காகவும் தொழிற்பட்டுத் தீரவேண்டிய சூழ்நிலையிருந்தமை யாலும் வேளாளர் தம் இனத்தவருக்குள்ளே பிரிவுகளை ஏற்படுத்தி அம்பட்டன், வண்ணான், மளிகைக் கடைக்காரன், பறையடிப்போன் எனப் பகுத்துக்கொண்டனர். இவ்வாறாக, வேளாளர், அம்பட்டன், வண்ணான், செட்டி, பறையன் ஆகிய 'பஞ்சசாதி' என்ற ஐந்து வகுப்புகள் அப்பகுதியில் ஏற்பட்டன''.

*(கனகசபை பிள்ளை வருண சிந்தாமணி, பக்கம் 485–6–7).*

> ''இவ்வகுப்புகள் முழுவதுமாக தொழிலையொட்டி ஏற்பட்டதே. வேளாளர் திருமணங்களுக்கு அம்பட்டன் ஆசீர்வாதம் செய்யும் பழக்கமும், மூத்த மகனைப் போன்று மற்ற மக்களின் சவங்களுக்கு பறையர் கொள்ளி போடும் வழக்கமும், வேளாளரும் செட்டியும் உடன் பிறந்தோர் களாக கருதுவதும் (பிள்ளை கே.கே. தென்னிந்திய வரலாறு, பக்.193) அவர்கள் ஒரே இனவழி மக்கள் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இவ்வண்ணம் ஒரே இன மக்கள் தொழிலாலும், பொருளாதாரத்தாலும் பிரிவுற்று வாழவும், அந்நியர் கொள்கை அவர்களை மேலும் பிளவுபடுத்தி அவர்களுக்குள் தாழ்வு கற்பித்து 'சாதிகளாக' மாற்றி பிளவுபடுத்திவிட்டதனாலும் இன்று தமிழகம் தன் உயரிய நிலையை தாழ்த்திக்கொள்ள நேரிட்டது.

*(உணவில் ஒளிந்திருக்கும் சாதி –*
*அன்பு பொன்னோவியம், பக், 195–196.)*

*பிராமண எதிர்ப்பு இயக்கமான 'நீதிக்கட்சியும்' வேளாளர்களின் நலத்தையே நோக்கமாகக் கொண்டெழுந்த இயக்கம்தான். அன்றைய பிராமண எதிர்ப்பு இயக்கத்தின் வெகுஜன ஆதரவு பற்றிய கேள்விக்கு எஸ்.என்.நாகராஜன் அளித்த பதில் இது:*

> ''காரணம் படித்த பார்ப்பனர்கள் எல்லாம் அதிகார தோரணை யோடு நடந்துகிட்டதுதான் என்று நான் நினைக்கிறேன். உதாரண மாக, பிராமணன் எல்லாம் ஒண்ணும் பெரிய பணக்காரன் கிடையாது. ஆனா படிக்கப் போயிட்டான். ஒரு எஸ்.எல்.சி. படிச்சு கிளார்க் ஆகறான். டெபுடி தாசில்தார், தாசில்தார் ஆகறான். அன்னிக்கு சொத்து யாருகிட்ட இருக்குன்னு கேட்டீங்கன்னா, கிராமத்துல கவுண்டன், சைவப்பிள்ளை, முதலியாரு இப்பேர்பட்ட சாதிகிட்டதான் ஆதிக்கத்துக்குரிய சொத்து இருக்கு. எங்க ஊருல ஒரு அஞ்சு பிராமண குடும்பத்து கிட்ட சொத்து இருந்தா ஐம்பது கவுண்டன் குடும்பத்துக்கு சொத்து இருக்கும். அதிகாரம் அவன்கிட்ட இருக்கும். மறந்திர வேண்டாம். அவன் கிட்ட கணக்குப் பிள்ளையா இருப்பான். யாரு? ஒரு ஐயன். அந்த ஐயன் பையன் படிக்கிறதுக்குகூட அவன் குடுத்திருப்பான். அந்தப் பையன் தாசில்தாரா வந்து அதிகாரம் பண்ணின உடனே கவுண்டனால தாங்க முடியாது. அப்ப இந்த பிராமணன் வந்து பணமில்ல, காசில்லாட்டாக்கூட அதிகாரத்துல வந்து உட்கார்ந்த உடனே, தன்னுடைய அதிகாரத்தைக் காட்ட ஆரம்பிச்ச உடனே, வயித்தெரிச்சல்ல என்னடா இது, நேத்து வந்தவன், நான் காசு கொடுத்து படிக்க வச்சேன். என்னையே மிரட்டரான் பாருடா என்று நினைக்கிற போக்கு வந்தது. அப்பதான் நாம்பளும் அதிகாரத்துக்கு வந்தாகணும், இந்த சொத்துமட்டும் பத்தாது. நமக்கு என்ற பிரச்சினை வருது. பிராமணர்களுக்குள்ள வந்த மிகப் பெரும் தப்பு அரசாங்கத் துக்கு உள்ள உக்காண்ட உடனே தங்களுடைய ஆதிக்கத்த காட்டறதுக்கு ஆரம்பிச்சாங்க. துச்சமா மதிக்கிறதுக்கு ஆரம்பிச் சாங்க. இதுல வந்த தகராறுதான். தமிழ் நாட்டுல பிராமண எதிர்ப்பு இயக்கத்திற்கான அடிப்படையே இதுலதான் வருது.''

*காலச்சுவடு இதழ் (10) 1995.*

*ஆக, பிராமண எதிர்ப்பு இயக்கம் கட்டிய வேளாளர்களின் பிராதான நோக்கம் பிராமணர்களால் நிரப்பப்பட்ட அதிகாரத்தை கைப்பற்றுவது. இதற்கு ஆதரவாகத் திரட்டப்பட்டதே மற்ற சமூகத்தாரின் நலன்.*

*இன்றைக்குத் தமிழ் மார்க்சியர்களும், தமிழ்த் தேசியவாதிகளும் முன்வைக்கும் தமிழ்த்தேசிய கருத்தாக்கம் யாருடையது என்ப தையும் பார்த்துவிடலாம்.*

**முதலில் இறந்தவர் நடராசன். அவர் தலித். அடுத்தவர் தாளமுத்து அவர் நாடார். வரிசைப்படி அவர்கள் நடராசன் தாளமுத்து என்றே குறிக்கப்பட வேண்டும். ஆனால் திராவிட இயக்கமும் கட்சிக்காரர்களும் தாளமுத்து-நடராசன் என்று வரிசை மாற்றி, தலித்தைப் பின்னுக்குத் தள்ளியே குறித்து வந்துள்ளனர். இந்தப் பிழையை ரவிக்குமாரும் (இன்றைய சட்டமன்ற உறுப்பினர்) பிறரும் சில ஆண்டுகளுக்கு முன்பே வாசகர் பார்வைக்குக் கொண்டு வந்துவிட்டனர். - இதழாசிரியர்.

**''வெள்ளைக்காரர்களின் வருகைக்குப் பின்பு, பார்ப்பனர் அல்லாதவர்களும் கல்வி கற்கத் தொடங்கியிருந்தனர். அவர் களில் பலர், புதியதாக அச்சில் வெளியிடப்பட்ட சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு முதலான இலக்கியச் செல்வங்களை அறிந்தபோது பெருமிதம் கொண்டனர். நாம் ஒரு தொன்மையான இனத்துக்குச் சொந்தக் காரர்கள் என்றும், நாகரிகம் மிகுந்த, கல்வியிற் சிறந்த முன்னோரின் வழி வந்தவர்கள் என்றும் அறிந்த பிறகு, நாம் ஏன் சூத்திரர்களாக, நாலாம் சாதியினராக அடங்கிக் கிடக்க வேண்டும் என்ற கேள்வி எழுந்தது. அந்த எண்ணமே, எதிர் காலத் தமிழ்த் தேசியத்தின் தொடக்கப்புள்ளியானது.**

**இலக்கிய வளம் மிகுந்த, தொன்மையான திராவிடத்தினர் நாம் என்ற எண்ணத்துடன் தமிழ்த் தேசியத்திற்கு வித்திட்டவர் களுள், பேராசிரியர் பி.சுந்தரம் பிள்ளையே முதன்மையான வர் எனலாம். அவர் ஆலப்புழையில் பிறந்து, திருவனந்த புரத்தில் பல்கலைக் கல்வி பயின்று, தத்துவப் பேராசிரியராகப் பணியாற்றியவர். 'மனோன்மணியம்' என்னும் அரிய தமிழ் நாடக நூல், அவர் வழங்கிய கொடையே ஆகும்.**

**தத்துவப் பேராசிரியர் என்ற வகையில், சைவ சித்தாந்தக் கருத்துகளில் வல்லுநராக அவர் இருந்தார். மேலும், அவர் 'வெள்ளாளர்' சமூகத்தைச் சார்ந்தவராகவும் இருந்ததால், அச்சமூகத்தைச் சேர்ந்த கல்வி கற்றோர் பலரிடமும் அவர் கருத்து விரைந்து பரவிற்று. குறிப்பாக, நெல்லை மாவட்டத் தில், சிவமதம், வெள்ளாளர் சமூகம் இரண்டையும் சேர்ந் தோரின் எண்ணிக்கை கூடுதல் என்பதால், அங்குதான் தமிழ்த் தேசியம் முதலில் காலூன்றியது.**

**... அவ்வுணர்வு, சமய உணர்வுடன் சேர்ந்து, சைவ சித்தாந்தத் தமிழ்த் தேசிய உணர்வாக அரும்பியது.**

**... ஆதலால், உயர்த்தப்பட்ட சாதியினரிடமிருந்து உருவான மத வழிப்பட்ட தேசிய உணர்வே, 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய தமிழ்த்தேசியம் எனலாம்.**

*(பெரியார் இடதுசாரித் தமிழ்த் தேசியம், சுப. வீரபாண்டியன், பக்கம் 26–27)*

*இந்தத் தமிழ்த்தேசக் கருத்துகளின் உள்நலன் பிராமணர்களைத் தவிர்த்த உயர்சாதி இந்துக்களின் சமயத்தை, மொழியை, அதிகாரத்தைக் காப்பாற்றுவதுதான்.*

*தலித்துக்களுக்கு நேரடி விரோதிகள் பார்ப்பனர்கள் மட்டுமல்ல, சாணிப்பால் கொடுத்து, சாட்டையால் அடித்து, இரட்டைக் குவளை கொடுத்து, வாயில் மலத்தைத் திணிக்கும் உயர்சாதி வேளாள இந்துக்களும்தாம். இவர்களின் நலனுக்காக அமைந்த தமிழ்த்தேசியத்திற்கு தலித்துகள் ஏன் முன்னெடுத்துப் போராட வேண்டும்?*

*அப்படியே தமிழ்த்தேசியம் அமைந்துவிட்டால், அங்கு என்ன நடக்கும்? தமிழுக்கு யார் யாரெல்லாம் பங்களிப்பு செய்தார்கள் எனப் பட்டியல் எடுப்பார்கள். தமிழுக்கு வேளாளர்களின் பங்கு, செட்டியார்களின் பங்கு... இப்படி... அந்தப் பட்டியலில் தலித்துகளுக்கு இடம் இருக்காது. 2000 ஆண்டுகளாக கல்வி மறுக்கப்பட்டு மற்ற வர்ணத்தாருக்குப் பணிவிடை செய்வதையே தன் வாழ்வாக அமைத்துக் கொள்ளப் பணிக்கப்பட்டவன் எப்படி இலக்கியம் படிப்பான்? படைப்பான்? இப்படி ஒரு கோணத்தில் தலித்திடமிருந்து அனைத்தும் பிடுங்கப்படும்.*

*ஒரு சில தமிழ்த்தேசியர்கள் இந்தச் சாதிக் கறைபடிந்த தமிழ்த் தேசம் என்ற துணியின் கறை போக்க பெரியாரிய சொட்டு நீலமும், அம்பேத்கரிய டிடர்ஜெண்டும், மார்க்சிய சோப்பும் போட்டுத் துவைத்தெடுக்கிறார்கள். ஆனால் துணி வேளாளரு டைய நலன்களால் நெய்யப்பட்டதல்லவா?*

*தமிழ்த்தேச உணர்வு, தமிழன் என்ற உணர்வு யார் யாரிடமெல்லாம் இருந்து வந்தது என நீண்ட பட்டியல் கொடுத்தபடியே வருகிற சுபவீ. அயோத்திதாசரிடம் வருகிறபோது,*

**''மிக வியப்பாகவும் விதிவிலக்காகவும், பறையர் சமூகத்தைச் சார்ந்த அயோத்திதாசப் பண்டிதரிடம் அந்த உணர்வைப் பார்க்க முடிகிறது,''**

*என்று (பெரியார் இடதுசாரித் தமிழ்த் தேசியம் என்ற நூல், பக்கம் 28இல்) எழுதுவதிலிருந்து 'தலித்துகள்' தமிழர்கள் அல்லர் என்ற புறக் கணிப்பு அவருள்ளும் ஊறியிருக்கிறதோ? என்கிற சந்தேகம் எழுகிறது. இவர் மட்டுமல்ல இன்றைக்குத் தமிழ்த் தேசியம் பேசுகிற மார்க்சிய அறிவாளர்களின் மொழியைக் கீறிப்பார்த்தாலும் இது வெளிப்படலாம்.*

*தமிழ்த் தேசத்திற்கு தலித்துகளை எதற்கு அழைக்கிறார்கள்? அவர்கள் மீதான ஒடுக்குமுறையை ஒழித்து, சாதி இழிவைப் போக்கி, விடுதலை மனிதனாக மாற்றவா? இல்லவே இல்லை! இதுதான் அவர்கள் நோக்கம் எனில் தீண்டாமை வடிவில் சேரியில் இன்னும் உழல வைக்கிற ஆண்டைகளாக உள்ள மேல்சாதி இந்துக்களை எதிர்த்துப் போராடத் திட்டமும் இயக்கமும் நடத்தவில்லையே, அது ஏன்? இவர்களுக்கு வேறு நோக்கம் இருக்கிறது. அது என்ன?*

*குணா எழுதிய தமிழின மீட்சி என்ற நூலில் திராவிடம் பேசியதன் மூலம் தமிழ் மண்ணை எவ்வாறு இழந்தோம் எனப் பட்டியல் இட்டுக்கொண்டே வருபவர் இறுதியாகக் கூறுவதைப் பாருங்கள் (பக். 52):*

**''... போதாமைக்கு அன்றைய தமிழ்த் தலைமை போர்க் குணமே அறியாத சிவனிய வேளாளர்களிடம் கிடந்தமையில், அம் மரக்கறித் தலைமையில் நல்ல தலைமையைத் தர முடிய வில்லை. இதனால் அன்று அரும்பிவிட்ட தமிழ்த்தேசிய ஓர்மை துணிவும் ஆற்றலும் பணவலிமையும், செல்வாக்கும், பேராயக் கட்சி - நயன்மைக் கட்சி அரசியல் பட்டறிவும் பெற்றிருந்த கன்னடரான ஈ.வெ.ராமசாமி நாயக்கரின் அரசியல் தலைமையில் மட்டுமே அன்றெழுந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்துக்கு வெற்றியை ஈட்டித்தர முடியும் என்னும் மாயை அத்தலைமையை ஆள்கிறது,''**

*என்று எழுதி, மரக்கறி உண்கிற வேளாளர்கள் என்கிற சைவர்களால் இதைச் சாதிக்க முடியாது, அதற்குப் போராட்டக் குணமுடையவர்கள் வேண்டும் என்று ஒரு செய்தியைத் தர, அதைப் பிடித்துக்கொண்டனர் மற்ற தமிழ்த் தேசியர்கள்.*

*தணிகையும் இதே வழியைத்தான் பின்பற்றுகிறார். தன்னுடைய முந்திய நூலான தலித்தியம், தமிழியம் இந்தியம் என்ற நூல் பக்கம் 3இல் எழுதுவதைப் பாருங்கள்:*

**''தமிழ் நாட்டிலும் அத்தகைய தலித் வீரியத்தையும் வீச்சையும் கட்டவிழ்த்து வெளிப்படுத்தியதில் வெற்றி கண்டுள்ள டாக்டர் கிருஷ்ண சாமியின் 'புதிய தமிழகம்' தென் தமிழகத்தின் மள்ளர்களை (பள்ளர் கள்) அணி திரட்டுவதில் கணிசமான சாதனைகளைக் கணக்கிலெடுக் கத் தவறக்கூடாது,''**

*என்று குறிப்பிட்டுத் தலித் மக்களின் போராட்ட குணத்தைப் பாராட்டுகிறார் தணிகை. அந்த நூலில் 'விடுதலை சிறுத்தைகள்' அமைப்பைப் பற்றி எந்தச் செய்தியும் காணவில்லை. 1990ஆம் ஆண்டிலேயே இந்த அமைப்பு ஏற் பட்டுவிட்டது.*

*தணிகையின் புதிய புத்தகமான தேசியமும் மார்க்சியமும் நூலில் விடுதலை சிறுத்தைகள் பற்றிக் குறிப்பிடுவதைப் பாருங்கள்:*

**''தமிழியத்துக்காகத் தமிழியக்கங்கள் நடத்திய கருத்துப் போருக்குத் துளியும் மசியாத பார்ப்பனியத் தலைமை, தலித் தியக்கம் நடத்திய தமிழியப் போர் வெறும் கருத்தியல் போராக இல்லாமல் களப்போராக வடிவம் பெற்றபோது இந்துப் பெயர்கள் அழிவதால் இந்து மகா சாம்ராஜியமே இடிந்துவிடுமோ என்றஞ்சியது,''**

*என்று அதன் போர்க்குணத்தை வானளாவப் புகழ்கிறார். இதிலிருந்து தணிகையின் நோக்கம் தலித்திய விடுதலை அல்ல,*

*தலித் மக்களின் போர்க்குணத்தை மூலதனமாக்கி அதன்மூலம் 'தமிழ்த்தேசம்' அடைய முனைகிறதோ என்ற ஐயத்தை ஏற்படுத்துகிறது.*

*தமிழ்த் தேசியர்களின் அடுத்த இலக்காகத் தலித் ஒற்றுமையைப் பிளவுபடுத்துவதாக உள்ளது. தமிழர்களாகப் பிறந்த தலித்துகள் மட்டுமே தமிழ்த்தேசியத்தை முன்னெடுக்க வேண்டும் என்பது ஒடுக்கப்பட்ட 'தலித்' மக்களிடையே மொழிவழிப் பிரிவினையை உண்டுபண்ணும். உள் ஒதுக்கீடு என்ற வடிவிலே இப்போது அது புகைந்து கொண்டிருக்கிறது.*

*சமீபத்தில் தமிழ்த்தேசியத்தைப் பற்றி எழுதுகிற தமிழ்த் தேசியர்கள் மறக்காமல் அயோத்திதாசர் பற்றி குறிப்பிடுகின்றனர். இது வரவேற்கத்தக்கதே. ஆனால் விமர்சனம் என்ற பெயரில் விஷமத்தனமும் இருக்கிறது என்பதைப் பதிவு செய்ய விரும்புகிறேன்.*

*அயோத்திதாசரின் தேசியத்தைப் பற்றி எழுதும் தணிகை இப்படி எழுதுகிறார்:*

> **''அவர் அருந்ததியர்களைப் பறையர்களுக்குக் கீழானவர்களாகப் பார்த்தார் என்றும், பறையர்களுக்குள்ளேயே மேல்-கீழ் பார்த்தார் என்றெல்லாம் வைக்கப்படும் விமர்சனங்களால் தாழ்த்தப்பட்டவர் தளைகளை அறுத்தெறிய அவர் அச்சமூகத்துக்குக் கையளித்துள்ள தத்துவப் போராயுதங்களின் கூர்மை மழுங்கிப் போகவிடக் கூடாது. மூல முரணோடு மோதும் போரில் இந்தச் சின்னச் சின்ன தன்முரண்கள் சமரசத்துக்குட்பட வேண்டுமே ஒழிய சமருக்குரியனவாகக் கருதக்கூடாது.''**

*(தேசியமும் மார்க்சியமும் தணிகைச் செல்வன் பக். 147)*

*அவரைப் புகழ்வதுபோல எழுதப்பட்ட இந்த வாசகங்களின் உள்ளர்த்தம் என்ன? அயோதித்தாசர் அருந்ததியர்களை ஏற்கவில்லை, அதாவது தமிழ் தலித்துகளைத்தவிர வேறு எவரும் பகைவரே என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தார் என்பதை 'நைச்சியமாக'ப் பதிவு செய்கிறார். அது நோக்கமில்லை எனில் தந்தை பெரியாரும் தன் முரண்களை கொண்டிருந்தாரே அது பற்றிய விமர்சனம் ஏன் இங்கு இல்லை? அது மட்டுமல்ல, மேற்கண்ட வரிகளில் ஒரு நாட்டாண்மைத்தனம் தெரிவதைப் பாருங்கள். 'இதெல்லாம் பெரிசா எடுத்துக்காத. போய் வேலையைப் பாரு,' என்கிற ஆண்டை மனோபாவம். இதுதான் வேளாள அரசியல் யுக்தி. இதை அவர் திட்டமிட்டுச் செய்யவில்லை என்றாலும் அது அப்படித்தான் வெளிப்படும்.*

*இன்னும் சில தமிழ்த் தேசியர்கள் இலங்கைத் தமிழ்த்தேசியம் உன்னதமான சமூகமாக அமைந்துள்ளது எனவும், அங்கு சமூக ஏற்றத்தாழ்வு ஒழிந்து ஒரே சமூகமாக உள்ளது எனவும் கதைத்துக் கொண்டிருக்கிறார்கள். அங்குள்ள நிலையையும் பார்த்துவிடுவோம்:*

> **''1984இல் 'கொடிகாமம்' என்னுமிடத்தில் 22 வயது தலித் இளைஞர் ஒருவர் ஒரு வேளாளத் தமிழரை கைநீட்டி அடித்ததற்காக பட்டப்பகலில் சந்தைக்குள் வைத்து 50 பேர்களால் துண்டு துண்டுகளாக்கி வெட்டிக் கொலை செய்யப்பட்டார். இலங்கை நாட்டில் இதுவரை எந்தச் சிங்களனும் தமிழனை இத்தனை துண்டுகளாக வெட்டியதில்லை. தமிழர்களால்தான் இந்தச் சாதனையைச் செய்து காட்ட முடிந்திருக்கிறது,''**

*என்று கே.டேனியல் தன்னுடைய கடிதங்களில் குறிப்பிடுகிறார். (பக்.12.)*

*இன்னொரு கடிதத்தில் அவர் குறிப்பிடுவதைப் பாருங்கள்:*

> **''எழுத்து மட்டுவாள்' என்ற இடத்தில் பள்ளிக்கூடம் போன தாழ்ந்த சாதிப் பிள்ளைகளின் புத்தகங்களைப் பிடுங்கி, கிழித்து, குவித்து எரித்திருக்கிறார்கள் உயர்சாதி வகுப்பு வெறியர்கள். யாழ்ப்பாணம் நூல் நிலையத்தைச் சிங்கள இனவெறியர்கள் கொளுத்துவதற்குக் காட்டுகிற நியாயம் - தமிழர்கள் படித்து முன்னேறி சிங்களர்களுக்கு மேலாக வந்துவிடுவார்கள் என்பது. தாழ்ந்த சாதி மக்கள் படித்து முன்னேறி உயர்ந்த சாதியினருக்கு மேலாக வருவதைத் தடுப்பதற்காக அவர்களது புத்தகங்களைப் பிடுங்கிக் கொளுத்துவது நியாயம் என்றால், யாழ்ப்பாணம் நூல்நிலையத்தைக் கொளுத்திய கொடுமையும் நியாயம் தானே,'' எனக் கேட்கிறார்**

*(டானியல் கடிதங்கள், பக்.175.)*

*இதெல்லாம் பழைய கதை, இப்போது இல்லை என்பவர்கள் இதைப் பாருங்கள்:*

> **''யாழ்ப்பாணத்தில் இன்றுவரை இந்த முப்பது வருட யுத்த அனர்த்தங்களுக்குப் பின்பும் நூற்று ஐம்பது இந்துக் கோயில்கள் தலித்துகளுக்காக மூடப்பட்டே இருக்கின்றன,''**

*என்று ஷோபாசக்தி ஜூலை 2004 தீராநதி பேட்டியில் கூறியிருக்கிறார்.*

*தமிழ் ஈழத்தில் சாதி ஒழிப்பு பற்றிய விவரங்களையும் படியுங்கள்:*

> **''தொண்ணூறுகளிற்குப் பின்பு ஈழத்தில் தமது தனி ஆதிக்கத்தை நிறுவிய விடுதலைப் புலிகள் சாதியத்தை எவ்வாறு எதிர் கொள்கிறது என்பதையும் சுருக்கமாகப் பார்த்து விடுவோம். தங்களின் தொடக்க காலத்தில் புலிகளும் சாதி, வர்க்க ஒடுக்கு முறையற்ற சோசலிசத் தமிழீழம் என்றுதான் வாயடித்தார்கள். புலிகள் பேசிய சோசலிசத்தின் பின்னாலிருந்த அடேல் பால சிங்கம் யாழ்பாணத்துச் சமூக அமைப்பைக் குறித்து எழுதும் போது இவ்வாறு விளக்குகிறார். ''உயர்ஜாதி வேளாளர் என அழைக்கப்படும் நடுத்தரவர்க்கமே அங்கே மேலோங்கி நிற் கின்றது. மேலும் யாழ்ப்பாணத் தமிழரைப் பொறுத்தவரையில் அவர்களுக்கென்று நம்பிக்கை முறைகளும் அரசியல் உள்ளு ணர்வுகளுமுண்டு. எவ்வளவு தத்துவப் பகுப்பாய்வுகளை முன் வைத்தாலும் அல்லது வலியுறுத்திக் கூறினாலும் அவர்களு டைய சிந்தனைப் போக்கை அவை இலகுவில் மாற்றப் போவதில்லை. ஆயுதப் போராட்டமானது சுயநிர்ணய உரிமைக் கான அரசியல் போராட்டம் என்பதை நியாயப்படுத்துவதற் காகவே விடுதலைப்புலிகள் தங்களது ஆரம்பகால வரலாற்று வளர்ச்சிக் கட்டத்தில் மார்க்சிய லெனிய தத்துவங்களைப் பயன்படுத்தினார்கள் (சுதந்திர வேட்கை பக்கம் 58). இதன் சுருக்கம் புலிகள் யாழ்ப்பாணச் சமூகக் கட்டமைப்பைப் புரட்டுவதற்குப் பதிலாக யாழ்ப்பாணச் சமூகத்தின் நம்பிக்கை முறைகளுக்கு ஊறு செய்யாமல் ஒதுங்கிக் கொண்டார்கள் என்பதேயாகும். இங்கு யாழ்ப்பாணச் சமூகத்தின் நம்பிக்கை கள் என்று அடேஸ் குறிப்பிடுவது சாதி நம்பிக்கைகளைத் தவிர வேறெதுவாக இருக்க முடியும்? சாதியத்தைத் தவிர்த்து யாழ்ப்பாணச் சமூகத்திற்கு வேறெதுவும் தனித்துவமான நம்பிக்கையோ அரசியல் உணர்வோ கிடையவே கிடையாது. விடுதலைப்புலிகள் தங்கள் யாழ்ப்பாண மரபுகளைப் பேணு வதாகச் சொல்லிக்கொள்வதில் பெருமையடைபவர்கள். புலி களின் தலைவரே வைதிக முறைப்படிதான் திருப்போரூர் கோயிலில் தனது துணைவியாருக்குத் தாலி கட்டினார். புலி கள் உலகின் பல பாகங்களிலும் சனாதன இந்துக் கோயில்களை நிறுவி நடத்தி வருகிறார்கள். விடுதலைப்புலிகளின் அரசியல் வேலைத் திட்டங்களிலும் சாதிய ஒடுக்குமுறைகள் குறித்த எந்தக் கவனமும் காணப்படுவதில்லை. அவர்களின் மாவீரர் நினைவுதின உரைகளிலோ அரசியல் அறிக்கைகளிலோ தீர்வுத் திட்டங்களிலோ கலை இலக்கிய வெளிப்பாடுகளிலோ அவர்கள் சாதியக் கொடுமைகளைக் குறித்து எதுவும் பேசுவதில்லை. மறுதலையாக அவர்கள் அங்கெல்லாம் பண்டைய காலத் தமிழர்களின் வீரங்களையும் பெருமைகளையும் கொண்டாடி மீட்புவாதம் பேசுகிறார்கள். பண்டையத் தமிழர்களின் வாழ்வு என்பது தாழ்த்தப்பட்ட சாதிகளை மிதித்தெழுந்த வரலாறு தான். பண்டையத் தமிழர் மாண்பென்பது சாதிய மாண்புதான். தமிழரின் வரலாறு என்பதே சாதியத்தின் கறைபடிந்த வரலாறு தான் என்பது போன்ற உண்மைகள் புலிகளுக்கு உறைப்பதே யில்லை.**

*(வேலைக்காரியின் புத்தகம், ஷோபாசக்தி பக். 37–38)*

மேற்கண்ட செய்திகள் மூலம் தமிழ் ஈழத்தில் ‘தமிழ்த்தேசம்’ என்ற பெயரில் வெள்ளாளத் தேசமே இருப்பதை உணரலாம். இதனால்தான் தி.ஸ்டாலின் தனது கட்டுரை ஒன்றில் இப்படி கூறுகிறார்:

> **‘‘தமிழ்த் தேசியவாதிகள் தேசியவாதத்திற்குப் புகலிடமாக தலித் இயக்கங்களை (தலித்துகளை)க் கருதுகின்றனர். இதன் மூலம் வளர்ந்துவிடும் தலித்தியத் தாக்கத்தை முறியடிக்க முயல் கின்றனர். தமிழ்த்தேசியத்தில் தலித்துகளுக்கு அதிகாரம் வழங்கப்படுவதாக நாடகமாடுகிறார்கள்.’’**

*(புதிய கோடாங்கி, ஜனவரி 2005, பக். 26.)*

இங்கிருக்கும் தமிழ்த்தேசியர்களை நோக்கி அவர் வைக்கும் கேள்வி மிக முக்கியமானது.

> **‘‘கள்ளத் தோணியில் கடல் கடந்து சென்று ஈழத்துப் போராளி களுக்கு உதவும் தமிழ்த்தேசியவாதிகள் தமிழ்நாட்டில் சாதி வெறியால் சாம்பலான சேரிகளுக்குச் சென்று பார்த்திருப்ப தாக எந்தப் பதிவும் இல்லை.**
>
> **கண்ணகி சிலை அகற்றப்பட்டதற்கு வானுக்கும் மண்ணுக்கும் குதித்த இவர்களுக்கு சாதி வெறியால் சீரழிந்து பலியாக்கப் பட்ட கோ.ஆதனூர் பொன்னருவியெல்லாம் கண்களுக்குத் தெரிவதில்லை.**
>
> **தமிழனைத் தமிழனே ஆள வேண்டும் என்ற கொள்கை யுடைய தமிழ்த்தேசியங்கள் ‘மேலவளவு’ படுகொலைக்கெதி ராக எதையும் செய்யமாட்டார்கள். அவர்களின் இலக்கு தமிழ்த் தேசியம்தான். தமிழ்த் தேசியத்திற்காக அவர்கள் எதையும் செய் வார்கள். சூழ்ச்சியும் செய்வார்கள். இப்போது அவர்கள் இறங்கி யிருக்கும் பணி தலித்துகளைத் தன்வயப் படுத்துதல்தான்.**

*(புதிய கோடாங்கி, ஜனவரி 2005, பக். 28.)*

இப்போது மீண்டும் தொடங்கிய இடத்துக்கே வருவோம். பெரியாரின் உள்ளீடாகக் கொண்ட தமிழியம் தலித்துக்களுக்குப் பொருத்தமுடையது அன்று. ஏனெனில் அதன் காரம் பார்ப்பன எதிர்ப்பு மட்டுமே. இன்றைக்கு தலித் விடுதலைக்கு பார்ப்பன எதிர்ப்பையும் ஆதிக்க/உயர்சாதி/வேளாள எதிர்ப்பையும் மேற் கொண்டு போராட வேண்டியிருக்கிறது. இந்த நிலையில் பெரியாரியம் ஒருமுனையைக் காக்கும் (சூத்திரக் கேடயம்). ஒரு முனையைத் தாக்கும். இந்த ஆயுதத்தால் தலித்துகளுக்குப் பயனைவிட ஆபத்தே அதிகம்.

தணிகையின் தலித்திய ஆதரவு வெறும் உதட்டளவிலானது அன்று. அது உளப்பூர்வமானது என்பதை 1975லிருந்து அவருடைய கவிதைகளைப் படித்து வருபவர்கள் அறிவார்கள். கிடைத்த ஓய்வை எதற்கும் உதவாத தேர்தல் அறிக்கைகளைப் படித்து ஆய்வு செய்வதையும், கட்சி உறுப்பினர்களே பார்க்காத கட்சி அறிக்கைகளில் கண்களையும் மூளையையும் விட்டுத் துழாவுவ தையும் விட்டுவிட்டு, சமூக சேவகியைச் சேரிக்கு அனுப்பி யதைப்போல சிந்தனைகளை ஆதிக்க வெறி பிடித்த வெள்ளாளச் சாதி மக்களிடத்தில் செலுத்தி, அவர்களின் வெறியைத் தடுக்க உருப்படியான யோசனைகளை முன்வைப்பதே சரியானது, தேவையானது, உதவியானது.

*(காஞ்சி இலக்கிய வட்டம் நடத்திய ‘மார்க்சியமும் தேசியமும்’ நூல் விமர்சனக் கூட்டத்தில் பேசப்பட்ட உரை, 06–05–2008.)*

●

**தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் நடத்தும்**

## கந்தர்வன் நினைவு சிறுகதைப் போட்டி–2008

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் கடந்த ஆண்டு நடத்தியது போலவே இந்த ஆண்டும் கந்தர்வன் நினைவுச் சிறுகதைப் போட்டியை நடத்திடத் திட்டமிட்டுள்ளது.

**முதல் பரிசு: ரூ.5,000**

**இரண்டாம் பரிசு: ரூ.3,000**

**மூன்றாம் பரிசு: ரூ.2,000**

மற்றும் தேர்வுபெறும் சிறந்த சிறுகதை ஒவ்வொன்றிற்கும் **ரூ.250** பரிசளிக்கப்படுவதோடு, கதைகள் சிறந்த இலக்கிய இதழ்களில் வெளியிடப்படும். இந்த ஆண்டு பரிசுத் தொகையை பிரபல திரைக்கவிஞர் **நா.முத்துக்குமார்** வழங்குகிறார்.

**விதிமுறைகள்:**

ஒருவரே எத்தனை கதைகளை வேண்டுமானாலும் அனுப்பலாம். கதை எழுதியவர், அது தனது சொந்தக் கற்பனையே என்றும் வெளியிடப்படாதது என்றும் உறுதி தந்து, பெயரைத் தனித்தாளில் முகவரி, தொலைபேசி எண்ணுடன் தரவேண்டும். (கதைப்பக்கங்களில் எழுதியவர் பெயர், முகவரி இருக்கக் கூடாது.) வெளிநாடுகளில் இருப்போர் மின்னஞ்சலில் தொடர்பு கொண்டு கதைகளை அனுப்பலாம்.

**சிறுகதைகள் வந்துசேரவேண்டிய கடைசி நாள்: 11.9.2008**

சிறுகதைகளை அனுப்ப வேண்டிய முகவரி:

**நா.முத்துநிலவன்,**
(துணைப் பொதுச்செயலர், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்)
96, சீனிவாச நகர் 3ஆம் தெரு, புதுக்கோட்டை - 622 004.
செல்பேசி:94431 93293,
மின்னஞ்சல்: **naamuthunilavan@yahoo.co.in**



### நூல்வெளியீட்டுவிழா

திரு. எ.எம்.சாலனின் ‘ஒதுக்கப்பட்டவர்கள்’ என்ற (என்.சி.பி.எச். வெளியீடான) சிறுகதைத் தொகுதி யின் நூல்வெளியீட்டு விழாவை, தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்ற, குமரிமாவட்டக் குழு, கன்னியாகுமரியில் நடைபெற்ற பேராசிரியர் நா.வானமாமலை – கலை – இலக்கியப் பண்பாட்டு நினைவு முகாமில் வைத்து நடத்தியது. நூலை, நாவலாசிரியர் பொன்னீலன் வெளியிட, அதன் முதல் பிரதியை பிரபல நாவலாசிரியர் திரு. நீலபத்மநாபன் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். இவ்வருட சாகித்ய விருது பெற்றமைக்காக வேண்டி திரு. நீல.பத்மநாபன் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து, திரு. பொன்னீலன் அவர்கள் பாராட்டுரை வழங்கினார்.

தமிழில்: இறையடியான்



# கவியரங்கம்

**தாமோதர் மோர்**

கவியரங்கில் பங்கெடுத்தவர்கள்
கேட்டுக் கொண்டிருக்க
கவிதையை வாசித்தேன்
வாசிப்பின் போது
அவர்களின் உணர்வுகளைப்
படித்துக் கொண்டிருந்தேன்!

கணநேரம்
முகம் சுளித்தனர் சிலர்
புரியாத புதிராக இருந்தது அவர்கள் செயல்!
"காரணம் யாது?" என
என்னுள் இருந்த கவிஞனைக் கேட்டேன்.
"எதிர்பார்த்ததுதான் நடந்துள்ளது
தேங்கிய குட்டையைக் கலக்கினால்
தெளிந்த நீரினைப் பார்க்கவா முடியும்?"

(கவியரங்கில்)

தொடர்ந்து வாசித்தேன்
எழுந்து சிலர் வெளியேறினர்
இருந்த சிலரின் இமைகளிலிருந்து
மழை காத்திருந்தது கொட்டுவதற்கு.
உள்ளுக்குள் உறைந்திருக்கும் கவிஞனைக் கேட்டேன்.
"இது இயற்கைதானே
சிறைப்பட்டிருந்த மேகம்
சீறிப் பாயத் துடிக்கிறது."

(கவியரங்கில்)

கவிதை தொடர்ந்தது...
அடுத்த கணங்களில்
பங்கெடுத்தோர் பார்வையில்
நெருப்பு கனன்றுகொண்டிருந்தது.
"என்னதான் இங்கு நடக்கிறது?"
கலவரத்துடன் கேட்டேன் என்னுள் இருந்த கவிஞனிடம்.
"இதற்கல்லவா காத்திருந்தேன் இதுவரையில்
எரிந்து பொசுங்கிய வெடி மருந்தின் திரி
வெடித்துச் சிதற முயற்சி செய்கிறது"-என்றான்.

(கவியரங்கில்)

வாசிப்பு தொடர-
காண்போரை மருள வைக்கும்
ஒளியைப் பாய்ச்சின அவர்களின் கண்கள்.
ஆவலோடு கேட்டேன் ஆழ்மனத்தின் கவிஞனை.
"இது தவிர்க்க முடியாத செயல்
கடுமையான இருட்டிலிருந்து
களம் நோக்கியே வீரநடை போடுகின்றார்"-என
பதில் வந்தது.

# எச்சரிக்கை

**திரியம்பக் சப்கலே**

படங்கள் அடங்கிய
புத்தகத்தைப் புரட்டினேன்
இளைய மகன் இளம்பரிதி
என்னோடு சேர்ந்து கொண்டான்!
ஒரு படத்தில் -
ஏழையை அடித்துக் கொண்டிருந்தான் ஒருவன்
"ஒருவனை மற்றொருவன் ஏன் அடிக்கிறான்?" - இளம்பரிதி
கேட்டான்.
"ஏனெனில் அடிக்கிறவன் பணக்காரன்"
எனச் சொல்லிப் பக்கத்தைப் புரட்டினேன்.
ஏழையைக் கொல்வதற்கு
செல்வந்தனின் வலது கரத்தில்
ஓர் ஆயுதம் இருப்பதைப் பார்த்த மகன்
"அப்பா! ஒரு நிமிடம்" எனச் சொல்லி
பிளேடுடன் திரும்பி வந்து
ஆயுதம் தாங்கிய கையை வெட்டிவிட்டு
வெற்றிக் களிப்பில் என்னைப் பார்த்தான்!
"அவனுக்கு உதவி செய்ய அடியாட்கள் உண்டு" - என்றேன்
"துண்டிக்கப்பட்ட அவன் தோற்றம்
பிறர் நினைவில் இருக்கும். எனவே
யாரும் அவனைத் தாங்கமாட்டார்கள்" - என்றான்.

# பாடல்

**பீம்சென் டிதே**

தலையில் சுமந்த கல்லுடன்
தந்தை தள்ளாடிச் சென்றார்.
மீசையை முறுக்கிய எசமானன்
"ஏய் கிழவா!
சுகமான லாவணி ஒன்றைப் பாடு"-என
வழக்கம் போல் ஆணையிட்டார்.
ஊசிகளால் குத்திக் குத்தி
பொத்தலாகிப் போயிருந்த குரல்வளையில்
காற்றும் வலியும் போட்டியிட
தந்தை பாடினார்:
'வானம் நிலவு சூரியன்
விரிந்த மலர்கள்
பரந்த கடல் அலைகள்
காதலைப் பருகி
நெஞ்சைக் கிள்ளிய
அழகிய மங்கையென'
வலம் வந்தன பாடல் வரிகள்.

தந்தையைச் சூழ்ந்தன புகழுரைகள்
வியர்வையால் நனைந்த கரங்கள்
பெருமையோடு அதிர்ந்தன கரவொலியில்
மெய்ம் மறந்து போன தந்தையின் கண்களில்
நன்றி பெருக்கெடுத்தோடியது!

முதுமையின் தள்ளாத வயது அவருக்கு
வீட்டை அடைந்ததும்
தன் நினைவலைகளில் நீந்திய படியே
வழக்கமாகத் தான் பாடுகின்ற
உணவுக்கான பாடலைத் தேடினார்.
அப்பாடலை அவரால் மீட்டெடுக்கவும் முடியவில்லை
இராகத்தோடு இசைக்கவும் முடியவில்லை
இறுதிவரையில்!

# பசிகோவிந்தம்

## விந்தன்

### இதழ்க் குறிப்பு:

எழுத்தாளர்களிலேயே தீவிர சுயமரியாதையோடு வெளிப்பட்டவர் விந்தன் அவர்கள். ஆதிசங்கரர் எழுதிய 'மோக முத்கரம்' என்பதை பஜகோவிந்தம் என்னும் பெயரில் தமிழில் பெயர்த்தளித்தவர் ராஜாஜி. அந்த நூலையும் அதன் அபத்தக் கருத்துகளையும் அறிவு ரீதியாகப் பகடி செய்து விந்தனால் எழுதப்பட்ட புடைநூல்தான் 'பசி கோவிந்தம்.' ராஜாஜி காலத்திலேயே எழுதப்பட்ட நூல். பக்தியின் பேரால் பரப்பப்படும் அபத்தங்களை பகுத்தறிவைக் கொண்டல்ல, வெறும் எதார்த்த அறிவைக் கொண்டே இதைவிடச் சிறப்பாகத் தோலுரித்துக் காட்டிவிடமுடியாது. விந்தன் கல்கியின் அன்புக்குரியவர். கல்கியால் எழுத்தாளராக அறிமுகப்படுத்தப்பட்டவர். கல்கி, ராஜாஜியின் அருமந்த சீடர். அந்த ராஜாஜியியைத் தான் விந்தன் வரிக்குவரி பகடி செய்கிறார். அதற்கொரு துணிச்சல் வேண்டும். அந்தத் துணிச்சலுக்குப் பெயர்தான் விந்தன் என்னும் சுயமரியாதையின் சின்னம். அவரது 'பசிகோவிந்தம்' இங்கு வெளியிடப்படுகிறது.




1956இல் முதலில் வெளிவந்தபோது தாங்கிவந்த பசிகோவிந்தம் நூலின் அட்டைப்படம்தான் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

**1**

*ஏ, மதி கெட்ட மனமே! மட மதியே! 'படிக்க வேண்டும், பண்டிதனாக வேண்டும்' என்று ஏன் சதா துடித்துக்கொண்டே இருக்கிறாய்? 'படிப்பவர்கள் படிக்கட்டும், பண்டிதர்களாயிருப்பவர்கள் இருக்கட்டும்' என்று நீ சும்மா இருக்கக்கூடாதா? – கோவிந்தனும் அவன் குழைத்துப் போடும் நாமமும் இருக்கும் வரை உனக்கு என்ன குறை? – பாடு, பாடிக்கொண்டே ஆடு!*

***பசிகோவிந்தம் பசிகோவிந்தம்***
***பசிகோவிந்தம் பாடு,***
***பரலோகத்தில் இடந்தேடலாம்***
***பசிகோவிந்தம் பாடு!***
***படிக்காதிரு, படிக்காதிரு,***
***படிக்காதிரு, பயலே!***
***படித்தால்எமன் வரும்போதுனைப்***
***பகவான் கைவிடுவார்!***

*ஆமாம், சொல்லிவிட்டேன் – இந்தக் காலத்துக் குடியாட்சியில் இதற்குமேல் சொல்வதற்கில்லை. அந்தக் காலத்து முடியாட்சியிருந்தால் அது வேறு விஷயம். மன்னனை வசப்படுத்திக்கொண்டு, வருணாசிரம 'கர்ம'த்தைத் 'தர்மம்' என்று சொல்லிக்கொண்டு, 'படித்தால் நாக்கை அறுத்து விடுவேன், மூக்கை நறுக்கி விடுவேன்!' என்று உன்னைப் பயமுறுத்தலாம். இப்போது அப்படிப் பயமுறுத்த முடியாது. அதனால்தான் சொல்வதைக் கொஞ்சம் நாசூக்காகச் சொல்லியிருக் கிறார் ஆசான். அவருடைய பல்லக்கைச் சுமக்கும் உனக்கு ஏன் படிப்பு? – அட மூடா! படிக்காதே; படித்தால் அவருடைய பல்லக்கைச் சுமக்க நீ மறுத்து விடுவாய்! எதையும் பகுத்தறிந்து பேச ஆரம்பித்து விடுவாய்! – உனக்காகச் 'சாக' வழிகாட்டும் ஆசான் – இல்லை, 'சொர்க்கத்'துக்குச் செல்ல வழி காட்டும் ஆசான் நடக்க முடியுமா? 'என்னை ஆக்கும் பகவான், என்னை அழிக்கும் பகவான், உங்களைக் காப்பதுபோல் என்னையும் ஏன் காக்கவில்லை?' என்று நீ கேட்டால் அதற்கு அவரால் பதில் சொல்ல முடியுமா? – பரந்தாமனையும் பரலோகத்தையும், பாவத்தையும், புண்ணியத்தையும் நம்பி நீ படிக்காமல், பாண்டித்தியமடையாமல் இருந்தால்தானே அவரைப் போன்றவர்கள் வம்பில்லாமல் வாழ முடியும்? கையசைக்காமல், காலசைக்காமல், நாவொன்றை அசைத்தே நவநிதியும் தேட முடியும்? – படிக்காதிரு, பயலே! படித்தால் எங்களை எதிர்க்க உனக்குத் தைரியம் வந்துவிடும். அந்தத் தைரியத்துக்கு எங்கள் 'தனித் தமிழ் அகராதி'யில் என்ன அர்த்தம், தெரியுமா, கர்வமடா, கர்வம்! அந்தக் கர்வத்துக்கு நீ உள்ளானால் கடவுள் கோபித்துக் கொள்வார் – என்ன சொன்னேன், 'கடவுள் கோபித்துக் கொள்வார்' என்றா சொன்னேன்?– ஆமாம், 'கடவுள் கருணாமூர்த்தி; அவருக்குக் கோபமே வராது' என்று நாங்கள் சில சமயம் சொல்வதுண்டு. அதை இப்போது நினைவுபடுத்திக் கொள்ளாதே! – சொல்வதைக் கேள்; படிக்காதிரு! படித்தால் எமன் வரும்போது பகவான் உன்னைக் கைவிட்டுவிடுவார் – ஜாக்கிரதை!*

*'அது சரி, அடியானே! பகவானால் எமனிடமிருந்து மீட்கப்பட்ட பக்தர்கள் இதுவரை யாரும் இருந்ததாக, இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே?' என்கிறாயா – அவர்களெல்லாம் சொர்க்கத்துக்குப் போய்விட்டார்கள் என்று நாங்கள்தான் அப்போதே சொல்லிவிட்டோமே, அதில் இன்னுமா உனக்குச் சந்தேகம்? – இதற்குத் தான் உன்னை நாங்கள் படிக்க வேண்டாம் என்று சொல்கிறோம் – படிக்காதே! பஜகோவிந்தம் பாடு; பகவானின் பாதார விந்தங்களை நாடு; பட்டை நாமம் போடு; எமன் உன்னைக் கண்டதும் எடுப்பான், ஓட்டம்!*

**2**

*படிக்காமலிருப்பது எவ்வளவு தூரம் நல்லது என்பதை முதல் பாட்டில் பார்த்தோம். பணத்துக்கு ஆசைப்படாமலிருப்பது எவ்வளவு தூரம் நல்லது என்பதை அடுத்த*

பாட்டில் பார்ப்போம்;

**பணமேனடா பணமேனடா**
**பணமேனடா, பயலே?**
**பணத்தாலாசை வளர்ந்தாலது**
**பணக்காரர்மேல் பாயும்!**
**படுவாய்தினம் பாடுவாய்தினம்**
**படுவாய், பாடுபடுவாய்!**
**பசித்தாலது பகவான்செயல்,**
**பஜகோவிந்தம் பாடு!**

'துன்பம், துன்பம்' என்கிறாயே, அந்தத் துன்பத்துக்குக் காரணம் என்ன? – பணந்தான்.

'அதற்கும் எனக்கும் ரொம்ப தூரமாச்சே?' என்று நீ சொல்லலாம். அதனாலென்ன, 'அந்தப் பணத்தின் வாடையாவது நம் பக்கம் வீசாதா!' என்று நீ நினைக்கிறாயல்லவா? அதுதான் உன்னுடைய துன்பத்துக்கெல்லாம் காரணம்!

இந்த உபதேசத்தை ஆசான் பணக்காரர்களுக்கு மட்டும் செய்யவில்லை; அப்படிச் செய்தால் பகவான் கை விடுவதற்கு முன்னால் பணக்காரர்கள் அவரைக் கைவிட்டு விடுவார்கள்! அதனால் பாடுபடுபவர்களுக்குச் செய்கிறார். அதாவது, **'பணக்காரர்களைச்** சத்துருவாகக் கருதாதே; **பணத்தைச்** சத்துருவாகக் கருது!' என்கிறார்.

அவ்வாறு கருத வழி என்ன? – எங்கள் ஆசான் சொல்வதைக் கேட்காவிட்டாலும் உங்கள் அன்புக்குகந்த வள்ளுவர் சொல்வதைக் கேளுங்கள்:

**"இறல்ஈனும் எண்ணாது வெஃகின்-விறல்ஈனும்**
**வேண்டாமை என்னும் செருக்கு!"**

அதாகப்பட்டது, 'இருப்பவனைக் கண்டு இல்லாதவன் செருக்கடைய வேண்டும்' என்கிறார் – ஆமாம், படித்துச் செருக்கடைவதைவிட, பணக்காரனைப் பார்த்துச் செருக்கடைவது மேல் என்பது இங்கே உட்பொருள் – 'அடி வயிறு கிள்ளும்போது அடியேன் எப்படிச் செருக்கடைவது?' என்று அதிகப்பிரசங்கித்தனமாகக் கேட்டு விடாதீர்கள்! – சொன்னதைச் செய்யுங்கள். அதுவே சொர்க்கத்துக்கு வழி; அதுவே துன்பத்தைப் போக்கும், இன்பத்துக்கும் வழி!

அந்த வழியை அவர் சாதாரணமாகவா சொல்கிறார்? – இல்லை; 'வேண்டாமை என்னும் செருக்கு' என்று உறுதியாகச் சொல்கிறார்.

ஆஹா, எவ்வளவு பெரிய உண்மை! – 'அவனிடம் பணம் இருக்கிறது; அதனால் அவனுக்குத் துன்பம். என்னிடம் பணம் இல்லை; அதனால் எனக்கு இன்பம்' – ஆஹாஹா, எவ்வளவு பெரிய உண்மையை எவ்வளவு லேசாகச் சொல்லிவிட்டார்!

இனி ஏன் உங்களுக்கு ஏக்கம்? ஊக்கம் கொள்ளுங்கள்; உழைத்தாலும் உழைப்புக்குத் தக்கபடி ஊதியம் கிடைக்காவிட்டாலும் ஊக்கம் கொள்ளுங்கள். அந்த ஊக்கம் கடைசியாக உங்களைத் தூக்குக் கயிற்றில் தொங்கவிட்டாலும் சரி, ஊக்கம் கொள்ளுங்கள்!

அதுவே உபாயம்; மற்றவை அபாயம் – 'யாருக்கு?' என்று கேட்க வேண்டாம்; அது பிரம்ம ரகசியம்!

## 3

ஆயிரமாயிரம் வருடங்களாக, 'எல்லாம் அநித்தியம், எல்லாம் அநித்தியம்' என்று தாங்களும் அநித்தியம் என்பதை உணராமல் அடியான்களும் ஆசான்களும் அலறி வந்தும், வாழ்க்கையில் பிடிப்பும் உலகத்தில் பற்றும் இன்றுவரை நிலைத்து நிற்பதற்குக் காரணம் பெண். எனவே, முதலில் படிப்புக்கும் இரண்டாவதாகப் பணத்துக்கும் வேட்டு வைத்த ஆசான், மூன்றாவதாகப் பெண்ணுக்கு வேட்டு வைக்கிறார்:

**தொட்டால் துயர் தொட்டால் துயர்**
**தொட்டால் துயர், பெண்ணை!**
**சிட்டாய்ப் பற சிட்டாய்ப் பற**
**சிட்டாய்ப் பற, பயலே!**
**எட்டா இன்பம், கிட்டா இன்பம்**
**எதுவோ அது இன்பம்!**
**எட்டும் இன்பம், கிட்டும் இன்பம்**
**எதுவோ அது துன்பம்!**

ஆம், தாகத்துக்குத் தண்ணீர் தேடுவது துன்பம்; தேடாமலிருப்பது இன்பம் – 'இதென்ன வேடிக்கை!' என்கிறீர்களா? – இதுதான் தத்துவமடா, தத்துவம்!

சொல்வதைக் கேள்– தொடாதே, பெண்ணை! தொட்டால் 'இன்பம் எது?' என்பதை நீ உடனே கண்டுகொண்டு விடுவாய்; 'இதுவே எட்டும் இன்பம், இதுவே கிட்டும் இன்பம்' என்று நாங்கள் காட்டும் எட்டாத இன்பத்தை, கிட்டாத இன்பத்தை ஏறெடுத்துக்கூடப் பார்க்காமல் இருந்து விடுவாய்; எங்கள்

அந்த நூல் 1884இல் இரண்டாம் பதிப்புச் செய்யப்பட்டு என்.சி.பி.எச். (பி) லிட். விற்பனை உரிமையில் வெளிவந்தபோது அதன் அட்டை கீழ்க்கண்டவாறு மாற்றப்பட்டுள்ளது.




அதாவது ஒரு புரட்சியின் எரிதழல் வெறும் புத்தகப் பிரதியாக அமுக்கப்பட்டுவிட்டது. எதிர்நீச்சல் போடும் மீன் பதப்படுத்தப்பட்ட கருவாடாக மாற்றப்பட்டு விட்டது. அதை இந்த அட்டைப் பட மாற்றமே சான்றாகிச் சுட்டுகிறது. எழுத்தை வெறும் வணிகப் பொருளாகவே மாற்றிவிடுவதில் நேரும் அவலம் இது. பதிப்பாளர் ஏன் இப்படியொரு தலைகீழ் மாற்றத்தைச் செய்தார் என்பது புரியவில்லை. ராஜாஜி உயிரோடிருந்த காலத்தில் விந்தனுக்கு வராத நெருக்கடி 28 ஆண்டுகளுக்குப்பின் ஏற்பட்டது என்பதை நம்ப முடியவில்லை. வணிகப் பிரதிகளை உருவாக்கிக் காசு பார்ப்பதையே குறிக்கோளாகக் கொண்ட பதிப்பாளர்கள் எவ்வளவு மரத்துப்போனவர்கள் என்பதற்கு இது நல்ல சாட்சி. இந்தப் படத்தை வரைந்தவர் இலக்கியத்தில் நல்ல பரிச்சயம் உள்ளவரும் 'கண்ணதாசன்' புகழ் ஓவியக் கவிஞருமான அமுதோன் என்பது அதைவிட அதிர்ச்சியளிக்கக்கூடியது.

"பசி கோவிந்தம் ஒரு புரட்சி நூலாக அறியப்பட வேண்டிய அவசியமில்லை. ஓய்வு நேரத்தில் படித்துச் சிரித்துவிட்டு பூஜை அறையில் அதன் அட்டையை வைத்துப் பூசித்துக் கழுவாய் தேடிக்கொள்ளலாம்" என்கிறாற்போல ஒரு அறிவுத்திரட்டு வெறும் அச்சுத்தாள் திரட்டாக மாற்றப்பட்டுள்ளது.

இதே நிலைதான் தற்போது தலித்தியத்திற்கும் நேர்ந்து கொண்டிருக்கிறது.

ஒரு பத்துப் பன்னிரண்டாண்டுகள்
பற்றி எரிந்து பரவி வந்த தலித் எழுச்சி
இப்போது படிக்க சுவாரசியமிக்க பிரதிகளாக
மாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறது.
என்ன நடக்கிறது, யாரால் நடத்தி
முடிக்கப்படுகிறது என்று உணரப்படாமலேயே
தலித்தியவாதிகள் தங்கள் இலக்கியப்
பிரதிகளோடு அமைதியடைந்து
கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது.
தலித் மக்கள், எழுச்சி பெறும் ஒவ்வொரு
காலகட்டத்திலும் சூத்திரர்களும்
பார்ப்பனர்களும் ஏதேனும் ஒரு வகையில்
அவர்களை உள்ளிழுத்துக் கொள்வதிலும்
கூர்முளைக்கும் கொம்புகளைத் தீய்த்துப்
பொசுக்குவதிலும் வெற்றி பெற்றுவிடுகிறார்கள்.
தலித்துகள் அப்போதைக்குக் கிடைக்கும்
பாராட்டுக்கும் பணப் பயனுக்கும் புகழுக்கும்
இரையாகி தலித்துகளாகவே தங்களைத்
தக்கவைத்துக் கொள்கிறார்கள்.

தலித் எழுச்சியானது சென்ற நூற்றாண்டின்
தொடக்கத்தில் தன் மூர்க்கமான
முன்னுரையை எழுதத் தொடங்கி
இந்த நூற்றாண்டின் முதல்
பத்தாண்டுகளுக்குள் இரண்டாம் பட்ட
விளைச்சலாகத் தன் முழுமையற்ற
முடிவுரையை எழுதிக்
கொண்டிருப்பதாகப்படுகிறது.
முன்னுரை எழுதித் தொடங்கி வைத்தவர்
அயோத்திதாசர். அவரைத் தொடர்ந்து
அகில இந்தியப் புகழ்பெற்ற இரட்டைமலை
சீனிவாசன், எம்.சி. ராஜா, மீனாம்பாள் சிவராஜ்
போன்ற அரசியல் தலைவர்கள்
தோன்றுகிறார்கள்.
அதே காலகட்டத்தில் வடக்கே
அம்பேத்கர் தோன்றுகிறார்.
தெற்கே பிற்படுத்தப்பட்ட மக்களின்
மாபெரும் தலைவராகப் பெரியார் தோன்றுகிறார்.
அம்பேத்கரைத் தென்னகத்திற்கு
அறிமுகப்படுத்தியவராகவும் அவரது
கோட்பாடுகளையும் வழிமுறைகளையும்
கொண்டாடும் நண்பராகவும் பெரியார்
திகழ்கிறார். தலித் தலைவர்கள் தங்கள்
மக்களுக்கான தனித்த இயக்கங்களைக்
கண்டடையவில்லை. மாறாக, அப்போது
வலுவாயிருந்த அரசியல் நீரோட்டத்திலேயே
பங்கு பற்றிப் பயணிப்பவர்களாயிருந்தார்கள்.
தலித் மக்கள் பெரியாரை நம்பிச் செல்லலாம்
என்று அம்பேத்கரே பரிந்துரை செய்கிறார்.
இப்படியாக, தலித் தலைவர்களும் மக்களும்
பெரியாரால் உள்வாங்கப்படுகிறார்கள்.
பூனா ஒப்பந்தத்தைத் தொடர்ந்து தலைவர்கள்
காந்தியாலும் காங்கிரசாலும்
உள்வாங்கப்படுகிறார்கள்.
சுதந்திரத்திற்குப் பிந்தைய காலகட்டத்தில்
உத்வேகம் மிக்க தலித் தலைமையோ
வழிகாட்டலோ முன்கை எடுக்கத் தவறியபோது
அமைதியற்ற தலித் இளைஞர்களின்
கனவுக் கூடாரமாகத் திராவிட
முன்னேற்றக் கழகம் தென்படுகிறது.
அவர்கள் அந்தக் கட்சியின் அடியுரமாகப்
பயன்படுத்தப்படுகிறார்கள்.
சொல்லிக் கொள்ளும்படியான முன்னேற்றமோ,
குறைந்தபட்ச அடையாளப்படுத்தலோ இல்லாத

*காஷாயத்தைக் களைந்தெறிந்து, ஏமாந்தவர்களிடமிருந்து எங்களுக்குக் கிடைக்கும் காணிக்கையை எடுத்தெறிந்து, 'இதோ இன்பம். இதோ இன்பம்' என்று எங்களையும் கொண்டு போய்ப் பெண்களிடம் தள்ளி விடுவாய்!– நாங்களோ 'பகிரங்கமாகப் பெண்களுடன் தொடர்பு கொள்வது பாவம்' என்று நினைப்பவர்கள். அப்படியே கொண்டாலும் அவர்களுக்காக உங்களைப் போல் எங்களால் கஷ்டப்பட்டுக் காலம் தள்ள முடியாது. அதனால்தான் 'இதோ இன்பம், இதோ இன்பம்' என்று நீங்கள் காட்டும்போது, 'அதோ இன்பம், அதோ இன்பம்' என்று நாங்கள் காட்டு கிறோம்; பெற்றெடுக்கும் குழந்தையை நீங்கள் பேணி வளர்த்தால், நாங்கள் நாணிக் கொன்றுவிடுகிறோம் – இதுவே எங்கள் சாந்திக்கு வழி; இதுவே எங்கள் மகிழ்ச்சிக்கு வழி.*

*இத்தகைய சாந்தியை அனுபவிக்கும் நாங்கள், இத்தகைய மகிழ்ச்சியை அனுபவிக்கும் நாங்கள், உங்களுக்கு மட்டும் ஏன் 'ஒழுக்க'த்தைப் பற்றி உபதேசிக்கிறோமென்றால், நாங்கள் 'ஒழுக்கந் தவறி' நடப்பதற்காக!*

*புரிந்ததா? – புரியவில்லை யென்றால் சந்தோஷம், ரொம்ப சந்தோஷம்; ரொம்ப ரொம்ப சந்தோஷம்!*

## 4

*அடுத்தபடியாக, வாழ்க்கையின் பொதுத் தன்மையை அலசு அலசு என்று அலசிப் பிழிகிறார் ஆசான்:*

***இகலோகத்தில் இடமேனடா***
***இடமேனடா, பயலே?***
***பரலோகத்தில் இடந்தேடலாம்***
***பஜகோவிந்தம் பாடு!***
***வாழ்க்கைஎது வாழ்க்கைஎது***
***வாழ்க்கைஎது பயலே?***
***சாவேவாழ்க்கை சாவேவாழ்க்கை***
***சாவேவாழ்க்கை, அறிவாய்!***

*என்ன அறிந்து கொண்டாயா? – என்னமோ 'வாழ்க்கை வாழ்க்கை' என்றும், அதற்காகப் 'போராட்டம், போராட்டம்' என்றும் சதா கோஷமிட்டு எங்களையும், பாவத்தை விழுங்கப் புண்ணியம் இருக்கவே இருக்கிறது என்ற தைரியத்தில் உங்களை ஏமாற்றி எங்களுக்குக் கோதானம் பூதானம், வஸ்திரதானம் கன்னிகாதானமெல்லாம் செய்யும் தனவந்தர்கள், முதலாளிகள், எத்தர்களையும் எப்பொழுது பார்த்தாலும் மிரட்டிக் கொண்டிருக்கிறாயே, இப்பொழுதாவது அறிந்துகொள் – வாழ்க்கை என்பது நிலையான மடத்துச் சாப்பாடு அல்ல; நிலையற்ற குடிசையின் கஞ்சி! – ஆம், உண்மையை மறைக்க எங்களுக்கு உவமை உதவுவது போல உங்களுக்கு உலகம் உதவாது தம்பி, உலகம் உதவாது. அதில் நீ அடையும் ஒவ்வொரு பொருளும் உனக்குத் துக்கத்தைக் கொடுக்கும்; அடைந்த பொருளை எப்படியாவது, என்ன செய்தாவது காக்க வேண்டுமே என்ற ஏக்கமும் பிறக்கும்.*

*'நான்தான் இதுவரை எந்தப் பொருளையும் அடைய வில்லையே!' என்கிறாயா? – அதனாலென்ன, அடைந்தவன் அனுபவத்தைச் சொன்னால் அடையாதவன் அதைக் கேட்டுவிட்டுச் சும்மா இருக்க வேண்டியதுதானே? – கேள், இன்னும் கேள்! வாழ்க்கையில் சஞ்சலத்தைத் தவிர வேறொன்றும் இல்லை; அதைத் தீர்த்துக்கொள்வதற்கு உனக்குள்ள ஒரே வழி சாவு!*

*பயப்படாதே! – பரலோகத்தில் உனக்கு நிச்சயம் இடம் உண்டு; இகலோகத்தை மட்டும் எங்களுக்கும் எங்கள் ஆதரவாளர்களுக்கும் விட்டுவிடு!*

## 5

*மகனே, திடுக்கிடாதே! – இதுவரை 'பயலே!' என்று அழைத்துவிட்டு இப்பொழுது 'மகனே!' என்று ஆசான் அழைக்கிறாரே என்று திடுக்கிடாதே! – அவருக்குத் தெரியும், உன்னை எப்பொழுது எப்படி அழைத்து விஷயத்தைச் சொல்ல வேண்டுமென்று – கேள், பயலே என்றாலும் பாவி என்றாலும், முட்டாள் என்றாலும் மூடா என்றாலும் பயபக்தியுடன் கேள்:*

***சொந்தம் பொய், பந்தம் பொய்,***
***எல்லாம் பொய், மகனே!***
***சோற்றுக்குத் தாளம் நீ போடு,***
***போட்டாலும் சொல்லாமல் ஓடு!***
***சொர்க்கம் மெய், சொர்க்கம் மெய்***
***சொர்க்கம் மெய், சொன்னேன்!***
***தர்க்கம் நீ செய்யாமல் தேடு,***
***ததிங்கிண தோமென்று ஆடு!***

*பொய்! – சொந்தம் சுற்றம், பந்தம் பரிவாரம் எல்லாம் பொய்; பொருளற்ற பொருள்கள். அவற்றின் மேல் பற்று கொண்டு, உன் குடும்பத்தில் நீ ஒற்றுமையை*

வளர்க்காதே! – அந்த ஒற்றுமையால் ஊர் ஒற்றுமைப்பட்டுவிடும்; உலகம் ஒற்றுமைப்பட்டு விடும்; அவ்வாறு ஒற்றுமைப்பட்டுவிட்டால் பதிதன் என்றும் புனிதன் என்றும், பாவி என்றும் புண்ணியவான் என்றும் எங்களால் பிரித்துப் பேச முடியாமற் போய்விடும் – மகனே! அவர்கள் யார், நீ யார்? – உதவாதே! ஒருவர்க்கொருவர் உதவுவது, அதன் மூலம் ஒற்றுமையை வளர்ப்பது என்பதெல்லாம் வேண்டாம்; பின்னால் நீ சோற்றுக்குத் தாளம்போட நேர்ந்தாலும் வேண்டாம் – ஓடு, சொல்லாமல் ஓடு! – நீ பற்றவேண்டிய பொருள் ஒன்றே; அதுதான் கோவிந்தன் திருவடி – 'இல்லாத திருவடியை எப்படி நான் பற்றுவேன்?' என்று ஏங்காதே! – தேடு, எங்கும் நிறைந்தானைத் தேடு! – 'இல்லாத இடமில்லானை ஏன் தேட வேண்டும்? தொட்ட இடமெல்லாம், கை பட்ட இடமெல்லாம் அவன் தானே இருக்கப் போகிறான்?' என்று கேட்காதே! – ஆடு, 'ததிங்கிணதோம்' என்று ஆடு! – சோறு கிடைக்காவிட்டாலும், சொர்க்கம் உனக்கு நிச்சயமாகக் கிடைக்கும்!

## 6

பேதாய், திகைக்காதே! –'பெண்ணைத்தானே பேதாய் என்று அழைப்பார்கள், ஆணை அப்படி அழைக்க மாட்டார்களே?' என்று திகைக்காதே!– ஆசானுக்கு ஆணும் ஒன்றே; பெண்ணும் ஒன்றே. உலகம் இருளில் மறையும் வரை மட்டுமே அவர் பிரம்மச்சாரிய விரதத்தைக் கடைப்பிடிப்பவராதலால் பெண் என்றும் ஆண் என்றும் பேதம் பாராட்டுவதில்லை– கேள் பேதாய், கேள்:

***மனைவியர் அன்பெல்லாம்***
***மாயை, நம்பாதே!***
***மடாதி பதிதொந்தி***
***வாட விடாதே!***
***வினையென்றும் விதியென்றும்***
***நம்புடா நம்பு!***
***வீணர்கள் வாழ்வதே***
***தெம்புடா, தெம்பு!***

அதோ, உன் மனைவி இருக்கிறாளே– அவள் உன்பால் காட்டும் அன்பு மெய்யா? அவள் பொருளுள்ள பொருளா?அவளும் நீயும் ஈருடல் ஓருயிரா, ஓருடல் ஈருயிரா?– அட பேதாய், அவள் உன்னைக் கட்டியணைத்தால் என்ன, கன்னங்கனிய உள்ளங்குளிர முத்தங் கொடுத்தால் என்ன?– நீ மரணம் அடைந்துவிட்டாய் என்று தெரிந்ததும் ஓடிவிடுவாளே!– அவளை நம்பலாமா? நம்பி மோசம் போகலாமா?

மடாதிபதியை நம்பு; தன்னையும் தன் 'சாக்குருவி வேதாந்தத்'தையும் தவிர மற்றவையெல்லாம் மாயை என்று அவர் சொல்வதை நம்பு!

படிப்பு வேண்டாம்; பணம் வேண்டாம். வீடு வேண்டாம்; வாசல் வேண்டாம். சொந்தம் சுற்றம், பந்தம் பரிவாரம் ஒன்றுமே வேண்டாம்– 'ஐயோ, மரணம் வந்துவிடுமே !' என்று சதா பயந்துகொண்டே இரு; யாரையும் நம்பாமல், 'ஐயோ, அவர்கள் ஓடிவிடுவார்களே ! ஐயோ, அவர்கள் ஓடிவிடுவார்களே!' என்று சதா அலறிக்கொண்டே இரு!– அதுவே விவேகம்; அந்த விவேகமே என்னை வாழ வைக்கும்– என்ன, 'என்னை வாழ வைக்கும்' என்றா சொன்னேன்?– இல்லை, உன்னையும் வாழ வைக்கும். அதற்குத்தான் நீ செத்த பிறகுகூட டாக்டர் உன்னைக் கை விட்டாலும் நான் உன்னைக் கைவிடுவதில்லை!– வருஷா வருஷம் சிரார்த்தம் செய்யச் சொல்கிறேன்; உனக்கு வேண்டிய அரிசி, பருப்பு ஆகியவற்றையெல்லாம் உன் வீட்டாரிடமிருந்து வாங்கி, என் வீட்டுக்கு அவற்றைக் கொண்டுபோய் விடுகிறேன்– வானுலகிலிருக்கும் உனக்கு என் வயிற்றின் மூலமாக அனுப்பி வைக்கத்தான்!

## 7

என்ன அநியாயம்!– இயற்கை செய்யும் அநியாயத்தைத்தான் சொல்கிறேன்– குழந்தைப் பருவம் விளையாட்டில் கழிந்து விடுகிறது; யௌவனம் வந்ததும் சிந்தனை முழுவதும் பெண்களின் மேல் சென்றுவிடுகிறது; விருத்தாப்பியத்திலோ மனைவி மக்களைப்பற்றிய கவலை வந்துவிடுகிறது– இப்படியே போய்க் கொண்டிருந்தால் கடவுளின் கதி என்ன? அவரை நம்பியிருக்கும் காவி வேட்டிக்காரரின் கதிதான் என்ன?

**கைவிடாதே கைவிடாதே**
**கைவிடாதே, கடவுளை!**
**கடவுளைக் கைவிட்ட நீ**
**கஷ்டப்பட்டு வாழலாம்!**
**காவிவேட்டிக்காரருன்போல்**
**கஷ்டப்பட முடியுமா?**
**கடவுளைக் கைவிட்டபின்**
**காலந்தள்ள முடியுமா?**

ஓர் அனுசரணையற்ற கால கட்டத்தில்
அம்பேத்கர் நூற்றாண்டும் அவரது எழுத்துத்
தொகுதிகளும் ஒரு புதுவெள்ளம் போல்
தலித் ஆர்வலர்களையும் அறிவு ஜீவிகளையும்
பற்றி எழுப்புகின்றன. ஒரு தலைமுறைக்கும்
மேலான தாமதத்துடன் எழுச்சி மிக்க
தலித் இயக்கங்களும் தோன்றுகின்றன.
தவிர்க்க முடியாதபடி தலித்தியம் அதன்
பன்முகப் பாய்ச்சல்களோடு
கொண்டாட்டப் பொருளாகிறது.
அடுத்த பத்தாண்டுகளுக்குள்
சாலைகள் சரளைகளாகின்றன.
தலித் இயக்கங்கள் ஒருமுகமாய்த்
தலித் பிரச்சனைகளில் குவிமையம்
கொள்வதிலிருந்து கட்சி அரசியலுக்குள்
கால் பதிக்கின்றன.
அறிவுஜீவிகள் தங்கள் அனுபவங்களையும்
கலகச் சிந்தனைகளையும் எழுத்துப்
பிரதிகளாகப் பதப்படுத்துகின்றனர்.
பெரியாருக்கெதிரான கலகக் குரலில்
தொடங்கி, பார்ப்பனப் பதிப்பரங்கில்
குவியம் பெற்று, ஒருவழியாக தலித்
கலகக் குரல் இலக்கிய வடிகாலாகப்
பாய்ந்துகொண்டிருக்கிறது.
எண்ணிக்கையில் தலித் கலக அரங்குகள்
மட்டுப்பட்டு அவற்றுக்கீடாக
இலக்கியப் பிரதிகள் தரும் கலகத்தின்
காட்சிப் படிமங்களைச் சிற்றரங்குகள்
பேசித் தீர்க்கின்றன.
தலித் அரசியல் அமைப்புகள்
பாராளுமன்ற ஜனநாயகப் பணிகளில்
தங்கள் வலுவுக்கேற்றபடி பிறரை நம்பியும்
தனித்துத் தவித்தும் வியூகம்
வகுத்துக்கொண்டிருக்கின்றன.
உத்த புரத்துச் சாதிச்சுவர்
பல ஆண்டுகளாகத் தலித்துகளுக்கெதிராக
வல்லாதிக்கம் செலுத்திவந்ததை
தலித் அமைப்புகளே அறிந்திருக்கவில்லை
என்பது மட்டுமன்றி,
அறிய வந்த பிறகும் அவை
ஆர்வங்காட்டவில்லை என்பது
இன்றைய தலித் கட்சி அமைப்புகளின்
நடைமுறை இயங்கு தளத்தைத்
தெள்ளெனப் புரியவைக்கிறது.
ஆக, 'பசிகோவிந்தம்' 28 ஆண்டுகளில்
பெற்ற பதிப்புலக அடக்கத்தை
தலித்தியம் ஒரு பதினைந்து ஆண்டுகளிலேயே
வென்றெடுக்க முயல்கிறதோ
என்னும் அச்சம் பிறக்கிறது.



ஐயோ, நினைக்க நினைக்க வருத்தமாயிருக்கிறதே!– என்ன செய்வேன்? எப்படிப் புலம்புவேன்? இயற்கைகூட எங்களுக்கு எதிரியாயிருக்கிறதே!– அதற்காக நீ கடவுளை நினைக்காமல் இருந்துவிடாதே! 'வாழ்க்கை வசதிமிக்க வெள்ளைக்காரனே வாரத்துக்கு ஒரு நாள் கடவுளை நினைத்துவிட்டு, மற்ற நாட்களில் தனக்கும் அவருக்கும் சம்பந்தமில்லாதவன்போல் நடந்து கொள்ளும்போது, வாழ்க்கை வசதியற்ற நான் ஏன் காலை மாலை இருவேளையும் ஒருநாள் விடாமல் கடவுளைத் தொழ வேண்டும், காலம் முழுவதும் அவரை ஏன் கட்டிக்கொண்டு அழ வேண்டும்?' என்றெல்லாம் கேட்டு எங்கள் வாயில் மண்ணைப் போட்டு விடாதே! ஏற்கெனவே அறுபத்து மூன்று நாயன்மார்கள் என்றும், எப்பொழுதும், எந்தக் காலத்திலும் அறுபத்து மூன்று நாயன்மார் களாக இருந்துகொண்டிருப்பதே எங்களுக்கு என்னவோ போலிருக்கிறது; அவர்களுக்குப் பின்னால் ஒரு நாயனாராவது வந்து சேர்ந்து, அந்த அறுபத்து மூன்றை அறுபத்து நான்காகக்கூட ஆக்காமலிருப்பதே எங்களை என்னவோ செய்கிறது– கடவுளுக்கே இந்தக் கதி என்றால் எங்கள் கதி என்ன?– கைவிடாதே, கடவுளைக் கைவிட்டாலும் எங்களைக் கைவிடாதே!– ஊஹூம்; கடவுளைக் கைவிடாமல் இருந்தால்தான் எங்களையும் நீ கைவிடாமல் இருக்க முடியும்– முயற்சி செய்; குழந்தையாய் இருக்கும்போது கடவுளை நினைக்க முடியாவிட்டால் யௌவனத் திலாவது நினைக்க முயற்சி செய்! யௌவனத்தில் நினைக்க முடியா விட்டால் விருத்தாப்பியத்திலாவது நினைக்க முயற்சி செய்!

அப்பொழுதுதான் கோயிலுக்கும் குருக்களுக்கும், தர்ப்பைக்கும் தட்சணைக்கும், தேருக்கும் திருவிழாவுக்கும் வேலை இருக்கும். இல்லையென்றால் நாங்கள் காட்டும் மோட்சத்தை நீங்கள் அடைவதற்கு முன்னால் நாங்களே அடைந்துவிட வேண்டியதுதான்!

## 8

அப்பனே!– எனக்குத் தெரியும், 'மகனே!' என்று அழைக்கும்போது, 'நீ யாரடா எனக்கு அப்பனாயிருக்க?'– என்று நீ கேட்பாய் என்று எனக்குத் தெரியும்– அதனால்தான் எட்டாவது பாட்டுக் குரிய வியாகரணத்தை 'அப்பனே!' என்று ஆரம்பித்திருக்கிறேன்– பிழை பொருத்தருள்க!

***அன்பு ஏது ஆசை ஏது?***
***அப்பனே என் அப்பனே!***
***இன்பம் ஏது துன்பம் ஏது***
***அப்பனே என் அப்பனே!***
***ஒன்றுமில்லை இவ் வுலகில்***
***அப்பனே என் அப்பனே!***
***எல்லாமுண்டு அவ்வுலகில்***
***அப்பனே என் அப்பனே!***

'அன்பே ஆண்டவன்' என்று சில அப்பாவிகள் சொல்வார்கள். அதை நம்பி நீ அந்த உலகத்தைப் பற்றிய கவலையே இல்லாமல் இருந்துவிடாதே!– அன்புக்கும் ஆண்டவனுக்கும் ரொம்ப ரொம்ப தூரமென்று இந்த அழகான உலகத்தைப் பார்க்கும்போதே உனக்குத் தெரியவில்லையா? கவலைப்படு அப்பனே, கவலைப் படு!– ஆனால் யாரைப்பற்றி, எதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டும்?– அன்பு மனைவியைப் பற்றியா? ஆசைக் குழந்தை யைப் பற்றியா? அடுத்த வேளை சாப்பாட்டைப் பற்றியா? அதற்கு வேண்டிய காசைப் பற்றியா? அட, பாவிப் பயலே! அந்தக் கவலை ஆசானுக்கும் அடியானுக்கும் இல்லாத போது உனக்கு மட்டும் ஏன் இருக்க வேண்டும்?– அப்படியே இருந்தாலும் அதைப்பற்றி நீ கவலைப்படலாமா?– அதனால் உனக்கு என்ன பிரயோசனம்?– சோறு கிடைக்கும்; சொர்க்கம் கிடைக்குமா?– விடு அந்தக் கவலையை! எடு, இந்தக் கவலையை!

***நீ எங்கிருந்து வந்தாய்?– அம்மாவைக் கேட்காதே!***
***நீயாகவே உண்டானாயா?– அப்பாவைக் கேட்காதே!***

கேட்டால் கவலை தீர்ந்துவிடும் அப்பனே, கவலை தீர்ந்துவிடும்– கேட்காமல் கவலைப்படு!– அப்பொழுதுதான் அன்பு மனைவி யையும் ஆசைக் குழந்தையையும் உன்னால் துறக்க முடியும்; அடுத்த வேளைச் சாப்பாட்டையும் அதற்கு வேண்டிய காசையும் உன்னால் மறக்க முடியும்.

என்ன யோசிக்கிறாய், ஏன் திரும்பிப் பார்க்கிறாய்?– அழகும் அற்புதமும் நிறைந்ததுதான் இந்த உலகம்; இல்லையென்று நாங்கள் சொல்லவில்லை. ஆனால் அதற்கும் உனக்கும் சம்பந்தம் கிடையாது; அந்தச் சம்பந்தம் எனக்கும் என் ஆசானுக்கும் மட்டுமே உண்டு– இது உலக மகா ரகசியம்!–இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யாமல் சதா அந்த உலகத்தைப் பற்றியே நீ கவலைப்பட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும்?– மறுபடியும் சொல்கிறேன்:

***நீ எங்கிருந்து வந்தாய்?– அம்மாவைக் கேட்காதே!***
***நீயாகவே உண்டானாயா?– அப்பாவைக் கேட்காதே!***

கேட்டால் கவலை தீர்ந்துவிடும். கேட்காமல் கவலைப்படு, கவலைப்படு, கவலைப்பட்டுக்கொண்டே இரு!

## 9

எடுக்கும்போதே 'வாழ வழி காட்டும் நாஸ்திகர்கள் கெட்டவர்கள்; சாக வழி காட்டும் ஆஸ்திகர்கள் நல்லவர்கள்' என்று சொல்லிவிட்டால் அது உண்மையாகுமே தவிர, தத்துவ'மாகாது. எனவே ஆசான் இப்படி ஆரம்பித்தாலும் அடியான் அதற்குக் கொஞ்சம் விரோதமாக வியாகரணம் செய்ய வேண்டியிருக்கிறது:

***நல்லது, நல்லது, நல்லது***
***நல்லவர் நேசம் நல்லது!***
***கெட்டது, கெட்டது, கெட்டது***
***கெட்டவர் நேசம் கெட்டது!***
***நல்லது, நல்லது, நல்லது***
***ஆத்திகர் நேசம் நல்லது!***
***கெட்டது, கெட்டது, கெட்டது***
***நாத்திகர் நேசம் கெட்டது!***

ஆனால் 'நல்லவர்கள் யார், கெட்டவர்கள் யார்?' என்பதைக் கண்டுபிடிப்பது எப்படி?– திருடனுக்குப் போலீஸ்காரன் கெட்டவனாகத் தோன்றுகிறான்; விபசாரிக்குப் பத்தினி கெட்டவளாகத் தோன்றுகிறாள்– அதேமாதிரி ஆஸ்திகனுக்கு நாஸ்திகனும், நாஸ்திகனுக்கு ஆஸ்திகனும் தோன்றலாமல்லவா?

அதனால்தான் அந்த வம்பும் நமக்கு வேண்டாம் என்று அடியான் எடுத்துக்காட்ட வேண்டியிருக்கிறது. அதாவது, ஆஸ்திகரை விரும்ப வேண்டும் என்பதற்காக நாஸ்திகரை வெறுக்க வேண்டியதில்லை; ஏனெனில் நடக்கிறபடி நடந்துகொண்டால் நாஸ்திகரே ஆஸ்திகரை வெறுத்துவிடுவார்கள்!

ஆயினும், அவர்களுடைய கூட்டம் பெருகிவிடக் கூடாது– அதற்கு வழி என்ன?– அவர்களுடைய அறியாமைக்காக நாம் அனுதாபப் படுவதுபோல் அடிக்கடி பாசாங்கு செய்ய வேண்டும்; அப்படிச் செய்தால் ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை அடித்து வீழ்த்திய வெற்றி நமக்குக் கிடைக்கும். அதுவே மூச்சை அடக்கும் முக்தி என்னும் லாபத்தை மக்களுக்குக் காட்டி, அவர்களுடைய பேச்சை அடக்கும் பக்தி என்னும் வியாபாரத்தை நாம் தொடர்ந்து நடத்தச் சிறந்த மார்க்கம்.

பாசமும் பற்றும், ஆசையும் நேசமும், அன்பும் அறமும் மனித வாழ்க்கையில் பூவும் காயும் போல ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுபவை. அவற்றை ஒரேயடியாகத் தீர்த்துக் கட்ட முடியாது; ஒவ்வொன்றாகத்தான் தீர்த்துக் கட்ட வேண்டும். முதலில் பக்தியால் சட்டையைக் கழற்றி எறியலாம்; இரண்டாவதாக ஞானத்தால் வேட்டியை அவிழ்த்து எறியலாம்; மூன்றாவதாக இருப்பது முக்தி ஒன்றே. அதற்குத் தடையாயுள்ள கோவணத் தையும் பிடுங்கி எறிந்துவிட்டால், அப்புறம் சிதையில் தள்ளித் தீ வைக்க வேண்டியதுதான் பாக்கி!

இவ்வளவு சுலபமாக நீங்கள் வீடு பெற வேண்டின் ஆஸ்திகர்களுடன் சகவாசம் செய்யுங்கள்; நாஸ்திகர்களுடன் சகவாசம் செய்ய வேண்டாம்.

இது மூளையுள்ள சிலருக்கு முரண்பாடாகத் தோன்றலாம்– அவர்களுக்கு ஒரு வார்த்தை– முரண்பாடே தத்துவம்; தத்துவமே முரண்பாடு!

## 10

இதுவரை உங்களில் யாருக்காவது எதிலாவது சந்தேகம் உண்டா?– இல்லையென்றாலும் சரி, உண்டு என்றாலும் சரி– ஆசானைப் பொறுத்தவரை அவருக்கு எதிலுமே சந்தேகம் இல்லை. அவருக்கு இல்லாத சந்தேகம் அடியானுக்கு மட்டும் எப்படி இருக்க முடியும்?– மேலே சொல்கிறார்:

**காணாத உண்மையைக்**
**கண்டேனடா!**
**கண்டதை உன்னிடம்**
**சொல்வேனடா!**
**வயோதிகம் வந்ததும்**
**வாலிபம் போம்!**
**வாலிபம் போனதும்**
**வயோதிகங் காண்!**

பார்த்தீர்களா, எப்பேர்ப்பட்ட உண்மையை எவ்வளவு சுலபமாகக் கண்டுபிடித்துவிட்டார் எங்கள் ஆசான்!– உங்களில் யாருக்காவது வற்றிப்போன குளங்குட்டைகளில் தண்ணீர் இருக்காதென்று தெரியுமா?– அது எங்கள் ஆசானுக்குத்தான் தெரியும். உங்களில் யாருக்காவது வயோதிகம் வந்ததும் வாலிபம் போய்விடும் என்று தெரியுமா?– அது எங்கள் ஆசானுக்குத்தான் தெரியும். உங்களில் யாருக்காவது வாலிபம் போனதும் வயோதிகம் வந்துவிடும் என்று தெரியுமா?– அதுவும் எங்கள் ஆசானுக்குத்தான் தெரியும்!

'இந்த அபத்தத்தைச் சொல்ல ஆசான் போதாதா? அதை விளக்க அடியான் வேறு வேண்டுமா?' என்று யாரும் கேட்டுவிடாதீர்கள்– அடியான் இல்லையென்றால் அவர் சொல்லாததையெல்லாம் சொன்னதாகத் திரித்துச் சொல்ல முடியாது; அப்படிச் சொல்லா விட்டால் ஆசானுக்கு அசட்டுப் பட்டத்தைத் தவிர வேறொன்றும் மிஞ்சாது.

அதனால்தான் இம்மாதிரி விஷயங்களைப் படிக்கும்போதே பக்தி யுடன் படிக்க வேண்டுமென்று சொல்கிறோம்– கேட்டால் தானே?

## 11

சரி இதையாவது கேளுங்கள்; உத்தமமான காரியமொன்றை உடனே செய்யுமாறு இங்கே ஆசான் சொல்லாமல் சொல்கிறார்– அதிலும் யாருக்குச் சொல்கிறார்?– செல்வமும் செல்வாக்கும், அழகும் ஆரோக்கியமும் படைத்த சீமான்களுக்குச் சொல்கிறார்– எப்படிச் சொல்கிறார்?– அடித்துச் சொல்கிறார்:

**உத்தமம், உத்தமம், உத்தமம்**
**உறவை மறப்பதே உத்தமம்!**
**உத்தமம், உத்தமம், உத்தமம்**
**துறவியாவதே உத்தமம்!**
**உத்தமம், உத்தமம், உத்தமம்**
**உள்ளதைக் கொடுப்பதே உத்தமம்!**
**உத்தமம், உத்தமம், உத்தமம்**
**எத்தரைக் காப்பதே உத்தமம்!**

ஏ, சீமான்களே! 'நம்மிடம் பணம் இருக்கிறது, பாக்கியம் இருக்கிறது, நமக்கென்ன குறை?' என்று கர்வம் அடைய வேண்டாம். அப்படி அடைந்தால் 'வேதாந்தத்தைக் கைவிட்டுவிட்டு, துரதிர்ஷ்டத்தைக் காட்டி அடியான் உங்களைப் பயமுறுத்த நேரும்– ஜாக்கிரதை !அதிர்ஷ்டம் துரதிர்ஷ்டமாகும்போது அத்தனையையும் ஒரே நிமிஷத்தில் இழந்து விடுவீர்கள்!– ஆமாம், சொல்லிவிட்டேன்– அப்படி இழக்காமலிருக்க நீங்கள் என்ன செய்ய வேண்டும்?– அடைய முடியாத பேரின்பத்துக்காக அடையக்கூடிய சிற்றின் பத்தைக் கை விட வேண்டும்; பணத்தையும் பாக்கியத்தையும் துச்சமாகக் கருதும் பக்குவ நிலையை அடைய வேண்டும்.

ஆஹா! அந்தப் பக்குவ நிலையை அடைந்துவிட்டால் எங்களுக்கு என்ன குறை? எங்கள் மடத்துக்குத்தான் என்ன குறை?– பணத்தைத் துறந்தாலும், பசியைத் துறக்க முடியாத நாங்கள் பக்குவமாகக் காலத்தைக் கடத்தி விடுவோமே!

அந்தோ, சொப்பனாவஸ்தையிலுள்ள சுகம் உங்களுக்குத் தெரிய வில்லையே, என்ன செய்வோம்? எப்படி உங்களை ஏய்ப்போம்?

## 12

போகட்டும்– வாழ்வுக்குத்தான் வேதாந்தம் வேண்டாம்; சாவுக்குமா வேதாந்தம் வேண்டாம்? உங்களுக்குத்தான் அதற்கு நேரமில்லை; எங்களுக்குமா நேரமில்லை?– அட, பாவிப் பயல்களா! காலை மாலையானாலும் மாலை காலையானாலும், பகல் இரவானாலும் இரவு பகலானாலும், கோடை குளிரானாலும் குளிர் கோடை யானாலும், முன்பனி பின்பனியானாலும் பின்பனி முன்பனி யானாலும் எந்தவிதமான கவலையுமின்றி நீங்கள் பேசாமல் உங்கள் காரியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்களே!– 'நாள் உயிரை அறுக்கும் வாள்' என்று உங்கள் வள்ளுவன் சொல்வதைக் கேட்டாவது நீங்கள் ஏன் ஒருநாளைப்போல ஒப்பாரி வைக்கக் கூடாது?

**'இன்று துன்பம்; நாளை இன்பம்'**
**என்று நினைப்பதேனடா?**
**சென்ற நாட்கள் சென்றதென்று**
**இன்று மகிழ்வ தேனடா?**
**கொன் றழிக்கும் கவலைக் குழியில்**
**குமைந்து நித்தம் வாடடா!**
**'என்றும் துன்பம்; என்றும் துன்பம்'**
**என்று எமனை நாடடா!**

இங்கேயும் ஆசானை அடியான் கொஞ்சம் மிஞ்ச வேண்டி யிருக்கிறது – அதாவது, அவர் சொல்லிவிட்டார் என்பதற்காக நீங்கள் உடனே எமனை நாடிவிட வேண்டாம். அவ்வாறு நாடுவது உங்களுக்கு நன்மை பயக்குமோ என்னவோ, எங்களுக்கு நன்மை பயப்பதாகா. எனவே உடம்பில் தெம்புள்ள வரை எலும்பொடியப் பாடுபடு, அவ்வாறே மற்றவனும் பாடுபட வேண்டும் என்று எதிர்பார்க்காமல் வாழ்ந்து, போதுமான உணவற்று உடையற்று, வீடற்று வாசலற்றுப் பொருள் தேடி, மனைவி மக்கள்மேல் பற்றற்றிருந்து, அவர்கள் செத்தால் வேதாந்தம் பேசி, உள்ள பொருளை எடுத்துக்கொண்டு வந்து ஊர் மடத்து எத்தர்களுக்குக் கொடுத்துவிட்டு, உடனே நீ எமனை நாடுவாயாக!

## 13

அட மடையா! உனக்குப் புத்தி சொல்வார் இல்லையே?– கோபம் வேண்டாம்; என்னைப் 'புத்திசாலி' என்று நீ நினைக்க வேண்டுமானால், உன்னை நான் 'மடையா' என்று அன்புடன் அழைக்க வேண்டாமா?– கேள்; வாழும்போதுதான் 'மனைவி மக்கள், மனைவி மக்கள்' என்ற பந்தத்துடன் நீ வாழ்கிறாய்; சாகும்போதாவது 'மனைவி மக்கள், மனைவி மக்கள்' என்ற பந்தத்தை விட்டுவிட்டுச் சாகக் கூடாதா?– ஏன் இந்தக் கஷ்டம், இதனால் எங்களுக்கு எவ்வளவு நஷ்டம்?

**'ஏழுஜன்மம்' என்று நாங்கள்**
**எண்ணிப் பார்த்துச் சொல்லியும்**
**ஏனிந்தக் கஷ்ட மெல்லாம்?'**
**என்று விண்ணைக் காட்டியும்**
**வாழும்போதும் 'மனைவி மக்கள்'**
**என்று நீங்கள் வாழ்வதா?**
**சாகும்போதும் 'மனைவி மக்கள்'**
**என்று நீங்கள் சாவதா?**

'ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணி, மொத்தம் ஏழு ஜன்மங்கள்; ஏன் இந்தக் கஷ்டம்?' என்று சொல்லிப் பார்த்தோம்– நீங்கள் கேட்கவில்லை; 'எண்ணத் தொலையாத ஜன்மங்கள்' என்று எண்ணாமலே சொல்லிப் பார்த்தோம்– அப்பொழுதும் நீங்கள் கேட்கவில்லை. ஜன்மத்துக்கு ஜன்மம் வாழும்போதும் 'மனைவி மக்கள்' என்கிறீர்கள்!– இப்படியே போய்க் கொண்டிருந் தால் எங்கள் மடத்தில் காஷாயதாரிகளுக்குப் பதிலாகக் கழுதைகளல்லவா வந்து குடியேறும்? விதவைகள் தரும் சுகத்துக்குப் பதிலாக வேதனையல்லவா மிஞ்சும்?

## 14

இந்த இலட்சணத்தில் எங்களுக்குள் போட்டி வேறு– 'என்ன போட்டி?' என்கிறீர்களா?– உங்களைப்போன்ற பாபாத்மாக் களுக்குப் புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொடுப்பதில் நாங்கள் போட்டுக்கொள்ளும் போட்டிதான்!

*போட்டி போட்டி போட்டிடா,*
*போட்டி நித்தம் போட்டிடா!*
*இருட்டுச் சாமி இடத்தைப் பிடுங்க*
*திருட்டுச் சாமி போட்டிடா!*
*திருட்டுச் சாமி இடத்தைப் பிடுங்க*
*இருட்டுச் சாமி போட்டிடா!*
*போட்டி போட்டி போட்டிடா,*
*போட்டி நித்தம் போட்டிடா!*

சாமிகளில்– அதாவது சந்நியாசம் வாங்கிக்கொண்ட சாமிகளில் இரண்டு விதம் உண்டு. ஒன்று இருட்டுச் சாமி; இன்னொன்று திருட்டுச் சாமி. இதையே பரம்பரை சாமி, பஞ்சத்துச் சாமி என்றும் சொல்லலாம். இந்த இரண்டு சாமிகளுக்கும் வேஷம் ஒன்றாயிருந்தாலும் வயிறு பிழைக்கக் கையாளும் முறைகள் வெவ்வேறாயிருக்கும். அது எப்படியென்றால் பிச்சை எடுப்பதும் தானம் பெறுவதும் ஒன்றாயிருந்தாலும், சிலரால் வெவ்வேறாகக் கருதப்படுவது போல!

மேலும், இருட்டுச் சாமியாகப்பட்டது வீட்டுக்கு வீடு தேடி வராது. கால்களுக்குக்கூட வேலை கொடுக்காமல் உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்தபடி, தனக்கு வேண்டியதைத் தானமாகப் பெற்றுக்கொள்ளும்; பகலில் பரலோகப் பிராப்தியை அடைய முயற்சி செய்து, இரவில் இகலோகப் பிராப்தியை அடையும். திருட்டுச் சாமி அப்படியல்ல; அது வீட்டுக்கு வீடு தேடி வந்து பிச்சை கேட்கும்– யாரும் இல்லாத சமயத்தில் கால்களுக்கு வேலை கொடுப்பதுபோல் கைகளுக்கும் வேலை கொடுக்கும். போலீசாரிடம் சிக்கிக்கொண்டால், 'அடியேன் திருமங்கை யாழ்வார் (திருடித் திருப்பணி செய்த பக்தர்களில் ஒருவர்) பிறந்த திருநட்சத்திரத்தில் திருஅவதாரம் எடுத்தவன்; தயவுசெய்து விட்டுவிடுங்கள் என்னை!' என்று விஞ்ஞாபிக்கும். விடாவிட்டால், 'உயிரே உடலென்னும் சிறைக்குள் இருக்கும்போது நாம் உலகென்னும் சிறைக்குள் இல்லாவிட்டால் என்ன?' என்று தன்னைத்தானே தேற்றிக்கொண்டு, மூன்று மாத காலமோ ஆறு மாத காலமோ இருட்டறைக்குச் சென்று வரும்– அதாகப்பட்டது, ஒரு துளி வியர்வையைக்கூட வீணாக்காமல் இகலோகப் பிராப்தியை அடையத்தான் அதற்குத் தெரியுமே தவிர, பரலோகப் பிராப்திக்கு முயற்சி செய்வதுபோல் அவ்வளவு பக்குவமாக நடிக்கத் தெரியாது. இதனால் அந்தச் சாமியை இந்தச் சாமி தூற்ற, இந்தச் சாமியை அந்தச் சாமி தூற்ற, போட்டியும் பொறாமையும் வளர்ந்துவிடுகிறது; விதவைகளாலும் விருத்தர் களாலும் கொடுக்கப்படும் கௌரவம் வீணாகிவிடுகிறது– இதுவே நம் மதிப்புக்குகந்த ஆசானின் கட்சி.

'முற்றுந் துறந்தார்க்குக் கௌரவம் எற்றுக்கு?' என வினவற்க; அஃது மயிரினும் ஓம்பப்பெறும் – அதாவது, மொட்டையடித்துக் கொள்ளும்போது ஆசான் மயிரைப் பொருட்படுத்தாமல் இருப்பது போலக் கௌரவத்தைப் பொருட்படுத்தாமல் இருக்க முடியாது எனப் பொருள் கொள்க – எற்றுக்கெனின், காணிக்கை கௌரவத்தில் தொக்கி நிற்றலால்!

## 15

அன்று தானதருமம் செய்த தனவானின் மனைவி இன்று தரித்திரத்தில் உழன்றாலென்ன? அவளுடைய மக்கள் வறுமையால் வாட்டப்பட்டாலென்ன? வரகரிசிச் சோற்றுக்கும் வாய்க்காலில் ஓடும் தண்ணீருக்குங்கூட வழியின்றி அவர்கள் தெருத்தெருவாய், வீடுவீடாய் அலைந்தால்தான் என்ன, என்ன?– அந்ததம் தனவான் அந்த லோகத் தில் ஆனந்தமாக இருப்பாரே, அது போதாதா? இந்த லோகக் கவலை இவர்களுக்கு ஏன்?– இருந்தால் துன்பம் செத்தால் இன்பம்– இவ்வளவு தானே விஷயம்–? ஐயோ! இது தெரியவில்லையே உங்களுக்கு?

**நரம்பு நைந்தும் நரை விழுந்தும்**
**ஐயோ, ஐயோ!**
**நாரியர் மேல் ஆசை ஏனோ**
**ஐயோ, ஐயோ!**
**பல்விழுந்தும் பவிசி ழந்தும்**
**ஐயோ, ஐயோ!**
**பாசம் ஏண்டா பாவிப் பயலே!**
**ஐயோ, ஐயோ!**

எனக்கு நம்பிக்கையில்லை– ஊஹூம், எனக்கு நம்பிக்கை இல்லவே இல்லை. காலம் போகிற போக்கைப் பார்த்தால் ஒரு பக்கம் 'ஐயோ, ஐயோ!' என்று அடிவயிற்றில் அடித்துக்கொள்ள வேண்டும் போலிருக்கிறது; இன்னொரு பக்கம் ஆத்திரம் ஆத்திரமாகப் பற்றிக்கொண்டு வருகிறது– ஏண்டா பாவிப் பயலே! உனக்குப் பின்னால் உன் மனைவி மக்கள் சோற்றுக்குத் தாளம் போடக் கூடாது என்று நினைக்க நீ யார்?– நான் அப்படி நினைக்கிறேன் என்றால் நீயுமா அப்படி நினைக்க வேண்டும்?– சுத்த அஞ்ஞானியாயிருக்கிறாயே. அவர் மனைவி மக்களுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? எந்த ஜன்மத்தில் சேர்ந்தீர்கள், இந்த ஜன்மத்தில் நீங்கள் சேர்ந்திருக்க–? 'அதுதான் உனக்கும் தெரியாது! எனக்கும் தெரியாதே!' என்று அதிகப்பிரசங்கித் தனமாகச் சொல்லாதே; 'சுவாமி! அது எனக்குத் தெரியாது; முக்காலும் உணர்ந்த முனி புங்கவரான தங்களுக்குத்தான் தெரியும்' என்று அடக்க ஒடுக்கத் துடன் பதில் சொல்! –ம், எந்த ஜன்மத்தில் சேர்ந்தீர்கள், இந்த ஜன்மத்தில் நீங்கள் சேர்ந்திருக்க?– சொல்லடா, இன்னுமா உன் மூளை குழம்பவில்லை?– அப்படியானால் கேள்: உன்னுடைய ஆன்மாவுக்கும் உன் மனைவியின் ஆன்மாவுக்கும் என்ன சம்பந்தம்? ஒன்று, மற்றொன்றை ஏன் ஒட்டி நிற்க வேண்டும்? இந்த ஜன்மத்தில் மனைவி என்று கருதும் உனக்கும் உன் உயிருக்கும் மற்றொரு ஜன்மத்தில், முன் அல்லது பின் ஜன்மத்தில் என்ன சம்பந்தம்? ஆன்மாக்களுக்குப் பந்துத்வம் ஏது, பாசந்தான் ஏது? ஒரு ஜன்மத் தில் ஏற்பட்ட ஒரு சம்பந்தத்தைப் பற்றி ஏன் விசாரம்? முடிவில்லாத கால அளவில் ஓர் உயிரின் காலம் எம்மாத்திரம்? கணமே போன்ற ஓர் அற்பம் அல்லவா? உன்னுடைய காலம் முடிந்ததும் உனக்கும் உன் மனைவிக்கும் என்ன சம்பந்தம்? அதைப் பற்றி ஏன் சிந்தனை?– எங்களுக்குப் பயன் தராத – இல்லையில்லை, உங்களுக்குப் பயன் தராத அந்தச் சிந்தனைகளை நீங்கள் விலக்க வேண்டுமல்லவா?

மனைவியின் விஷயமே இப்படியென்றால் பணத்தைப் பற்றி என்ன கேள்வி–? அது ஓர் உயிரற்ற பொருள்தானே?– அதற்காக நீ உயிரைக் கொடுத்தது ஒரு பக்கம் இருக்கட்டும்; அதை இப்போது நினைத்துக் கொள்ளாதே! அது ஓர் உயிரற்ற பொருள்தானே?–'ஆமாம்' என்று சொல்; அப்பொழுதுதான் வியாகரணத்தைத் தொடர்ந்து செய்ய முடியும்– சரி,சொல்லியாயிற்றா?– உடலை விட்டு வெளியேறின உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதைப்பற்றி என்ன கவலை உனக்கு?

என்ன,ஒன்றும் புரியவில்லையா? எல்லாம் ஒரே குழப்பமாயிருக்கிறதா? – ஆஹா! அதுவே வேதாந்த நிலை, அதுவே வேதாந்த நிலை!

இத்தகைய பரவச நிலையை நாம் அடைவதற்கு விரோத மாயிருப்பவர்கள் யார், தெரியுமா?– 'படிக்காத புத்திசாலிகள்'தான். 'அட, சரித்தான் போய்யா– எவளாயிருந்தாலும் அவளைக் கை பிடிச்ச தோசத்துக்குக் கஞ்சி வார்க்க வேணாம்? இருக்கிற வரையிலே 'நீ என் பெண்டாட்டி, கண்ணாட்டி'ங்கிறது; போறப்போ 'நீ யாரு, நான் யாரு'ன்னு கேட்டுப் புள்ளை குட்டிகளையெல்லாம் நடுத்தெருவிலே விட்டுடுறதா?– நல்லாயிருக்கே, உன் ஞாயம்? போய்யா, போ!' என்று அவர்கள் நம்மை விரட்டிவிடுகிறார்கள்.

இவர்களுடைய மூளையை நாம் குழப்புவது எப்படி? இவர்களு டைய மடியிலே இவர்களுக்குத் தெரியாமல் நாம் கையை வைப்பது எப்படி?– ஐயோ, என் ஆசானே! நான் என்னடா செய்வேன்?

அஞ்சற்க; 'படித்த புத்திசாலிகள்' நமக்குப் பக்கத் துணையிருப் பார்கள் என்கிறாயா?– ஆமாம்– அவர்கள் நல்லவர்கள்; ரொம்ப நல்லவர்கள்– வயது இடங்கொடுக்கும் வரை அவர்கள் வாழ்க்கையை அனுபவித்துவிட்டு, வயது இடங்கொடுக்காதபோது வேதாந்த விசாரத்தில் இறங்கிவிடுவார்கள்; புதுப்புது ரகசியங்களை யெல்லாம் கண்டுபிடித்துப் புத்தகங்கள் வெளியிடுவார்கள். திண்ணைப் பிரச்சாரம் தொடர்ந்து நடக்கும். திருத்தொண்டர் குழாமும் சேரும். பரதேசிப் பயல்கள் பாரத நாடெங்கும் பல்கிப் பெருகுவார்கள். 'பசி கோவிந்த'ங்கள் 'பஜகோவிந்த'ங்களாகும். பண்பாடு பாவங்களின் உறைவிடமாகும்; பக்தியும் முக்தியும் அதற்குப் பட்டுத் திரைகளாகும்– பயமில்லை, பயமே இல்லை!

●

இன்னும் அடுத்த இதழில் வரும்

# போதி

(தமிழ்ப் படைப்பாளிகள் சந்திப்பு)

"ஊடகங்கள் நமது சிந்தனையை முனைமழுங்கச் செய்து கொண்டிருக்கின்றன. உலகமயமாகி வரும் சூழலில் அனைத்தும் வணிகமயமாகிக்கொண்டிருக்கின்றன. கலை இலக்கியங்களும் அதற்கு விதிவிலக்கல்ல. நம் மொழி குறித்தும், இனம் குறித்தும், அதன் விடுதலை குறித்தும், அறம் சார்ந்த வாழ்க்கை குறித்தும் நாம் தீவிரமாகச் சிந்திக்க வேண்டியுள்ளது. சமகாலச் சிந்தனைகளை அறிமுகப்படுத்தவும் விவாதிக்கவும் நமக்கொரு களம் தேவை. போதி அதைச் செம்மையுறச் செய்யும். தமிழின் முன்னணிப் படைப்பாளிகள், கலைஞர்கள், சிந்தனையாளர்கள், திறனாய்வாளர்கள் அனைவரையும் இது அறிமுகப்படுத்தும். இளம் படைப்பாளிகளைக் கூர்மைப்படுத்தும். சாதி, சமய, பொருளாதார, பாலின வேறுபாடுகளைக் களைந்து மனித நேயத்தைக் கட்டிக்காப்பதே போதியின் இலக்கு" எனத் தெளிவான வரையறையுடனும் கூர்மையான பார்வையுடனும் முன்னேறிச் செல்லும் ஒரு அமைப்பாக 'போதி' தமிழ்ப் படைப்பாளர் சந்திப்பை *14-06-2008* காரிக் கிழமை அந்திப்பொழுதில் பள்ளத்தூர், பாணர்குடிலில் இயற்கைச் சூழலின் அழகு தவழ, மொட்டை மாடியில் நிகழ்த்தியது.




எழுத்தாளர் குமரன்தாஸ், கவிஞர் தமிழினியன், முனைவர் த.சித்ரா ஆகியோர் ஒருங்கிணைக்க, கவிஞர்-பேராசிரியர்-முனைவர் அரசமுருகு பாண்டியன் தலைமை தாங்கி விரிவான உரை நிகழ்த்தினார். அம்பேத்கரியம், பெரியாரியம் இவற்றின் பங்களிப்பு மேலும் கூர்மையாகப் பயன்படுத்தப்பட வேண்டிய காலகட்டத்திலும், மதவாத, ஏகாதிபத்திய கள்ள உறவால் நிகழும் ஒடுக்குமுறை களிலிலிருந்து விழிப்பு பெற வேண்டிய நெருக்கடியிலும் சமூகம் பயணித்து வருவதை அடையாளம் காண வேண்டியிருக்கிறது. படைப்பாளிகள் 'வெற்று நவீனத்தின்' முகத்திரை போர்த்தி வாளாவிருக்கும் நிலை மாறி, ஆதிக்கத்தின் முகத்திரை கிழிக்கும் அரும்பணியைத் தமது இலக்கியப் பங்களிப்பின் மூலம் நிகழ்த்த வேண்டியிருப்பதை வலியுறுத்தினார். பேராசிரியர் கோச்சடை, 'கருத்துத் தளத்தில் மட்டுமல்லாது நிகழ்வுத்தளத்திலும் உண்மையான போர்க்குணத்துடன் செயலாற்றி வரும் பேராசிரியர் அரசமுருகுபாண்டியனின் இந்தப் 'போதி'யமைப்பு மென்மேலும் வளரத் துணை நிற்போம்' என்று வாழ்த்தினார். 'போதி', சமூக-இலக்கிய - அரசியல் தளங்களில் ஒரு குறிப்பிடத்தக்க பங்குப் பணியைச் செய்ய வேண்டும் என ஆலோசனைகளையும் வாழ்த்துதல்களையும் பரிமாறினார்கள் தோழர்கள் சிம்சன், குருசாமி மயில்வாகனன், மங்கை, பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர் முடியரசனின் புதல்வர் கவிஞர் பாரிமுடியரசன் ஆகியோர். குரூரமான யதார்த்தத்தை அப்படியே படம் பிடித்தார் எழுத்தாளர் பாலா அவரது உரையில். அம்பேத்கர் குறித்த மொழிபெயர்ப்புகளைச் செய்திருக்கக்கூடிய சிறந்த சிந்தனையாளர் எக்ஸ்ரே மாணிக்கம் போன்றவர்கள் 'போதி' அமைப்பு நகர வேண்டிய திசைவழி குறித்துச் சுட்டிக் காட்டினார்.

ஒரே நேரத்தில் பெயர்ச்சொல்லாகவும் வினைச்சொல்லாகவும் பரிமளிக்கக் கூடியதாயிருக்கிறது 'போதி'. எனவே, சொல்- செயல் இரண்டு களங்களையும் ஒருங்கிணைக்கும் பணியைச் செவ்வனே போதி நிகழ்த்த வேண்டும். மொழி குறித்த காத்திரமான பார்வையும் சமூகம் குறித்த தீவிரமான புரிதல்களும் இன்றைய படைப்பாளிகளுக்குப் 'போதி' கொண்டு சேர்க்க வேண்டிய தேவையை வலியுறுத்தி நம்பிக்கை வெளியிட்டார் கவிஞர் தெ.வெற்றிச்செல்வன்.

இறுதியாக, தமிழ்ப் பல்கலைக்கழகப் பேராசிரியரும் ஆய்வறிஞரும் தூய தமிழ்ச் சொல்லாக்க அகரமுதலிகள் துறைத் தலைவருமாகிய அருளியார் மிக விரிவான தமிழாய்வுரை நிகழ்த்தினார். சொல்லுக்குள்ளும் சொல்கடந்த நிலையிலும் தமிழ்க் குமுகாயம் மீது சுமத்தப்பட்ட அரசியலை அம்பலப்படுத்தினார்.

"மாந்த இனத்தின் அறிவுநிலை என்னென்ன கூறுகளிலெல்லாம் படிப்படியே வளர்ச்சியுற்றுள்ளது என்னும் தொல் பழங்கால வரலாற்றுப் படிவுகள் யாவற்றையும், நம் தமிழர்களால் இத்தமிழ்மொழியுள் உருவாக்கப்பெற்றுள்ள சொற்குவியல்கள் அழிக்கவே முடியாத ஆவணப் பதிவுகள் போலச் சுமந்துவைத்துக் கொண்டுள்ளன. சொற்களின் கருப்பகுதிகளில் அவை மிகத் துலக்கமாக விளங்குகின்றன. அறிவு ஆராய்ச்சிஇயலின் (*Epistemology*) ஒட்டுமொத்த பாடங்களும் தமிழ் மொழியுள் அமைந்துள்ள சொற்களின் அகப்பகுதிகளில் அடங்கிக் கிடக்கின்றன. மிகமிகப் பிந்தித் தோன்றிய மூவாயிரம் மொழிகளுள் ஓர் இருபத்தேழு மொழிகளினின்று சற்றேறக்குறைய ஓர் இருபத்திரண்டாயிரம் சொற்றொகுதிக் கணைகள், பல்வேறு அரசியல்-குமுகச் சூழல் அடிப்படைகளில் கடந்தியன்ற ஓர் ஈராயிரம் ஆண்டுக்கால அளவிடையில் இத்தமிழுடம்பில் தொடர்ந்து தைப்பெய்தின எனினும், அவற்றின் தாக்குரவுகளால் சாம்பாதும் கூம்பாதும் உயிர்த்தன்மையில் சற்றுஞ் சாறு குறையாதும் உள்ளது உள்ளபடியே உயிர்ப்புற்று நின்று, நிமிர்ந்து, நீடி, நிலவி வருவதற்கு இதன் இயற்கைத்தன்மையிலான உருவாக்கமும் கட்டமைப்புமே அடிப்படைக் காரணக் கருக்களாகுவன. தமிழ்ச் சொற்களின் அகப்பகுதிகளுள் ஓர் அறிவுமாந்தன் எப்படியெல்லாம் படிப்படியே தொடர் உழைப்பெடுத்துத் தன்னை நிறைவுபடுத்திக்கொண்டான் எனும் முழு வரலாறும் பதிவாகியுள்ளது," என மிக விரிவாக அமைந்தது அருளியின் உரை.

முதல் நிகழ்விலேயே 'போதி' பார்வையாளர்களை ஈர்த்து ஓர் அசைவை ஏற்படுத்தியிருப்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது. தொடரும் 'போதி'யின் பணிகள்.

**தெ.வெற்றிச்செல்வன்**




1. **பூதங்கள் பலவகைப்படும்**, கவிதைத் தொகுதி, நா.இராஜா ரகுநாதன், விலை ரூ.40/–, கதிர் வெளியீட்டகம், 14–ஆ, காவல்காரத் தெரு, உறையூர், திருச்சி 620 003.
2. **அணியமுத மாலை**, கவிதைகள், கவிஞர் வே.மணி, விலை ரூ.50/–, மீனா பதிப்பகம், 261/254, தாஸ் நகர், ஏழாவது தெரு, கன்னிகாபுரம், சென்னை 600 012.
3. **புதிய ஆரம்பங்கள்**, சிறுகதைத் தொகுதி, புதிய மாதவி, விலை ரூ.80/–,
4. **தனியறை**, ஒரே தலைப்பிலான சிறுகதைத் தொகுப்பு, புதிய மாதவி, விலை ரூ.50/–,

   இரு நூல்களும் வெளியீடு: மருதா, 6,அண்ணா சாலை, குலசேகரபுரம், சின்மயா நகர், சென்னை–600 092.
5. **வெல்தமிழ் வரலாறு**, உணர்ச்சிக் கவிஞர் சிங்காரவேலன், விலை ரூ.150/–, உணர்ச்சிக் கவிஞர் பதிப்பகம், 7, காவேரி சாலை, திருச்சி 620 002.
6. **வஞ்சிக்கப்படும் மலேசியத் தமிழ்க்கல்வி– போராடும் மக்கள்**, கட்டுரைத் தொகுதி, மு.வரதராசு, கலகம் வெளியீட்டகம், விலை ரூ.175, 1/ 7, அப்பாவு தெரு, எல்லிஸ் சாலை, சென்னை600 006.
7. **தேரி காதை**, பௌத்தப் பிக்குணிகளின் பாடல்கள், தமிழில்: மங்கை, விலை ரூ.100/–, சந்தியா பதிப்பகம், ஃப்ளாட் ஏ, நியூடெக் வைபவ், 57– 53ஆம் தெரு, அசோக் நகர், சென்னை 600 083.
8. **மனிதர்கள் இன்னமும் இருக்கிறார்கள்**, நாவல், பாரதிவசந்தன், விலை ரூ.70/–, அலமேலு பதிப்பகம், 50, எல்லைக்கல் தெரு, குறிஞ்சிப்பாடி 607 302.
10. **சுடும் நிலவு**, பெண் எழுத்தாளர் சிறுகதைகள், விலை ரூ.60/– தமிழ்நேயம், 24, வி.ஆர்.வி. நகர், ஞானாம்பிகை ஆலை (அஞ்சல்), கோவை 641 029.
11. **இன்றைய ஆட்சி ஏன் ஒழிய வேண்டும்?**, ப.திருமாவேலன், விலை ரூ.60/–
12. **காந்தி ராமசாமியும் பெரியார் ராமசாமியும்**, ப.திருமாவேலன், விலை ரூ.80/–
13. **காந்தியார் சாந்தியடைய**, ப.திருமாவேலன், விலை ரூ.100/ மூன்றும் முத்தான நூல்கள்– தடை செய்யப்பட்ட தமிழ் எழுத்தும் காலமும் என்னும் தலைப்பில் வந்த வரிசை, வெளியீடு: தென்திசை, கே.கே.புக்ஸ் லிட்., 19, சீனிவாச ரெட்டித் தெரு (முதல் தளம்), சென்னை 600 017.













14. **தலித் இலக்கியமும் அரசியலும்**, யாழினி முனுசாமி, விலை ரூ.70/–, இருவாட்சி, பெரம்பூர், சென்னை 600 011.
15. **பின்நவீனத்துவச் சூழலில் புலம்பெயர்ந்தோர் கவிதைகளும் பெண்ணியக் கவிதைகளும்**, யாழினி முனுசாமி, விலை ரூ.70,
16. **உதிரும் இலையும் உதிராத பதிவுகளும்**, தொகுப்பு: ஜெ.கங்காதரன், விலை ரூ.60/–,

    இரு நூல்களும் வெளியீடு: மித்ர ஆர்ட்ஸ் & கிரியேஷன்ஸ், 32/9, ஆற்காடு சாலை, சென்னை 600 024.
17. **மிதந்திடும் சுய பிரதிமைகள்**, சீனக் கவிதைகள், தமிழில்: ஜெயந்தி சங்கர், விலை ரூ.200/–, உயிர்மைப் பதிப்பகம்,11/29, சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை 600 018.
18. **மீசை**, சிறுகதைகள், ஸ்ரீதரகணேசன், விலை ரூ.100/–, பாலம், இ/ 7, பாரத் அடுக்ககம், ஆர்.வி.நகர் கிழக்கு, சென்னை 600 102.
19. **கனத்த மௌனத்தின் இடையில்...**, கவிதைகள், ரமேஷ்பாபு, விலை ரூ.20/–, பூங்குயில் பதிப்பகம், 100, கோட்டைத் தெரு, வந்தவாசி 604 408.
20. **பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கர்**, உ.சுப்பிரமணியன், விலை ரூ.100/–,
21. **பாபு ஜகஜீவன்ராம்**, உ.சுப்பிரமணியன், விலை ரூ.120/–,

    இரு நூல்களும் வெளியீடு: தமிழ்வேந்தன் பதிப்பகம், 9, முனுசாமி நகர், கிழக்குக் கந்தசாமிபுரம், உளுந்தூர்பேட்டை 606 107.
22. **உலகெலாம் உறவு**, ‘மனிதநேயம்’ பேராசிரியர் ஏ.எம்.ஜேம்ஸ், விலை குறிக்கப்படவில்லை, மனிதநேய மையம், 16, மெய்யப்பன் 2ஆம் தெரு, ஞானஒளிவுபுரம், மதுரை 625 016.
23. **படகுப் பயணமும் பட்டினிப் போராட்டமும்**, தி.அழகிரிசாமி, விலை ரூ.40/–,
24. **தமிழக ஆறுகளில் மணல்கொள்ளை**, முனைவர் பழ.கோமதி நாயகம், விலை ரூ.45/–,

    இவ்விரு நூல்களும் வெளியீடு: தமிழக்குலம், 33, நரசிம்மபுரம், மயிலை, சென்னை 600 004.
25. **சூதாட்டமாகும் கிரிக்கெட்**, சாவித்திரி கண்ணன், விலை ரூ.10, மாணிக்கசுந்தரம் வெளியீட்டகம், 522, 2ஆம் மேற்குத் தெரு, காமராஜர் நகர், சென்னை 600 041.
26. **சிறுவணிகத்தை விழுங்க வரும் ரிலையன்ஸ், வால்மார்ட்டே வெளியேறு!**, நன்கொடை ரூ.5, தொடர்புக்கு: இரா.சீனிவாசன், 4, 5ஆம் வது தெரு, செகந்நாதபுரம், சேத்துப்பட்டு, சென்னை31.
27. **இடிக்கப்பட வேண்டிய உத்தபுரம் சுவர்கள்**, டி.அருள் எழிலன், விலை ரூ.3/–,
27. **தமிழா! உன் பெயர் தமிழா?**, பி.இரெ. அரசெழிலன், விலை ரூ.4/–,
28. **ஏமாற்றும் சாமியார்கள்,** இளநம்பி, விலை ரூ.5/–,

    இம்மூன்று நூல்களும் வெளியீடு: அறிவுச் சுடர், 7–ஆ, எறும்பீசுவரர் நகர், மலைக்கோவில், திருவெறும்பூர், திருச்சி 620 013. ●

...முன் உள் அட்டை தொடர்ச்சி



நமது மண், மர, கல், சுதை சிற்பங்களுக்குள் இருந்த கோடுகளை ஆதிமூலம் கண்டுபிடித்தார். அதனை இன்றைய மொழியோடு இணைத்தார். இச்செயல் மிகமிக இயல்பாகவும் எவ்வகையான கூச்சல்களும் ஆர்ப்பாட்டங்களுமின்றி நிகழ்ந்தது என்பதையும் நாம் புரிந்துகொள்வது அவசியம். நமது சமூகம் சாதியச் சமூகம். அனைத்து வரலாறுகளையும் ஆதிக்கச்சாதியின் நுண்ணரசியலாகக் கட்டமைக்கப்பட்டிருப்பதை நாம் அறிவோம். அவைதிக மரபின் ஊடாக நமது வரலாற்றைக் கட்டமைக்காமல், அவைதிக மரபையும் வைதிக மரபாக மாற்றும் தந்திரம் ஆதிக்கச் சாதியின் தந்திரம். இவ்வகையான கலை மோசடிகளிலிருந்து தப்பித்தவர் ஆதிமூலம். இதனால்தான் இவரது ஆளுமை தனித்த ஆளுமையாக இருக்கிறது. தமிழ்ச் சமூகத்தின் பாரம்பரியக் கலைமரபின் இருபதாம் நூற்றாண்டினுடைய தொடர்ச்சியாகவும் அடையாளமாகவும் ஆதிமூலம் இருக்கிறார். முற்றக்கோலங்கள், மதுபனி, கலங்காரி ஆகிய பிற மரபுகளிலிருந்து நவீன ஓவிய உலகம் பெற்றுள்ள செழுமைகள் ஏராளம். இதனை ஆதிமூலத்தின் ஊடாகவும் நாம் புரிந்துகொள்ள முடியும். இவ்வகையான ஆளுமை தமிழ்ச் சமூகத்திற்கு வாய்த்தமைக்கு நாம் என்றும் கர்வம் கொள்ளலாம்.

கலைப்பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்கு மிக முக்கியமான பயிற்சி மெய்யுருக்களை உருவாக்குவது. இவ்வகைப் பயிற்சியின் ஊடாக, நமது சமூகத்தின் எதார்த்தமான மெய்யுருக்களை உருவாக்கும் தேடலுக்குக் கலைஞர்கள் செல்வர். ஆதிமூலம் அவர்களின் மெய்யுருக்கள் மூலமாக நாம் காணும் உடல்மொழி பிரமிக்கத் தக்கது. நமது மரபின் மதுரைவீரன், நாயக்கர் கால அரசர்கள் மற்றும் அவர்களைச் சுற்றி இருந்தவர்கள், காந்தி ஆகிய மெய்யுருக்களை உருவாக்கிய ஆதிமூலத்தின் கோடு, தனித்த மொழியை உள்வாங்கிய கோடுகளாகும். இம்மெய்யுருக்களின் கட்டுக்குடுமி, கொண்டை, முறுக்கு மீசை, வீர வாள், முரட்டுத் தசைகள், தசைகளுக்குள் இருக்கும் நரம்புகள் ஆகியவை உணர்த்தும் உடல்மொழி, பார்வையாளனின் புலன்களைக் கிறங்கச் செய்பவை. இவ்வகையான கிறங்கச் செய்யும் உடல்மொழியைக் காட்டிய இக்கலைஞன் பிற்காலங்களில் வெளிகள் (Landscape) மூலம் காட்டிய வண்ணத்திலும் கிறங்கச்செய்ததை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளலாம். நாட்டார் மரபில் உருவான வீரர்கள், நாயக்கர் கால அரசர்கள் ஆகியோரை நம்முன் காட்சியாக நடமாடச் செய்த ஆதிமூலத்தின் ஆளுமை புளகாங்கிதம் தரும் வல்லமையுடையது.

தமிழ் ஓவிய மரபில் பெண் தொடர்பான ஓவியங்கள் ரவிவர்மா தாக்கத்திலிருந்து விடுபட்டதாகக் கூற முடியாது. ஆனால் ஆதிமூலத்தின் கோடுகளில் உருவான பெண்கள் ரவிவர்மா மரபை உடைத்ததைக் காண்கிறோம். பெண் தொடர்பான ஓவிய மரபில் புதிய கோடுகளை உருவாக்கியதைப்போல் கூத்துக் கலைஞர்களின் அசைவை தம் கோடுகளில் கொண்டு வந்தவர் ஆதிமூலம். அசைவைக் கோடுகளில் கொண்டு வருவது சாதாரண விஷயமல்ல.

காந்தி நூற்றாண்டில், இளமைக் காலம் முதல் பாதித்த காந்தியின் உருவங்களைப் பல்வேறு கோணங்களில் உருவாக்கி மகிழ்ந்தார். ஓவியர்களின் கோடுகளுக்குள் வெளிப்படும் உணர்வுகள் அவ்வோவியரின் உணர்வுகளாக உறுப்பெற்று, பார்வையாளரின் புலன்களுக்குள் அவர்களது உணர்வுகளாகவும் உருப்பெறும். ஆதிமூலத்தின் காந்தியார் தொடர்பான மெய்யுருக்களின் கோடுகளுக்கு அவ்வகையான வலிமை இருப்பதாகக் கூறலாம். காந்தி தொடர்பான விமர்சனங்களையும் கோடுகளில் கொண்டு வந்திருக்கலாம். அது நிகழவில்லை. நாம் எதிர்பார்க்கவும் முடியாது. காந்தி என்ற ஆளுமை இருபதாம் நூற்றாண்டில் பல்வேறு கலைஞர்களையும் பாதித்த ஆளுமை. கோடுகளில் ஆதிமூலத்தைக் காந்தியார் சார்ந்த உயர்வுகள் பாதித்த அளவிற்கு வேறு கலை வடிவங்களில் காந்தியார் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளாரா என்ற கேள்வியை எழுப்பிக் கொள்ளலாம். ஆம். காந்தியார் ஆதிமூலம் உருவாக்கிய மெய்யுருக்களில், அதனுள் உணர்வாகப் பதிந்துள்ள கோடுகளில் இடம் பெற்ற அளவிற்கு வேறு கலை வடிவங்களில் இடம் பெறவில்லை என்று கூற முடியும். ஆதிமூலத்தின் காந்தி மெய்யுருக்கள் ஆச்சரியங்களாக அமைபவை. காந்தியை உயிரோடு காலங்காலத்திற்கு உலவச் செய்பவை. இக்கலைஞனின் சமூக இயங்குதளத்தைப் புரிந்துகொள்ள காந்தி மெய்யுருக்கள் அரிய சாட்சி. காந்தியாரின் வெறும் வாழ்க்கை நிகழ்வுகளாக மட்டும் அவை அமையாமல் அவரின் பல்வேறு உணர்வுகளை இவரது கோடுகள் காட்சிப்படுத்துவதை நாம் உணரலாம்.



ஆதிமூலத்தின் கோடுகள், வண்ணங்கள், வெளி ஆகியவை தொடர்பான பயணம் 1950களில் தொடங்கி 2000களில் நிறைவடைகிறது. கோடுகளில் தொடங்கியவர் பிற்காலங்களில் நீர்வண்ணம், எண்ணெய் வண்ணம் ஆகியவற்றைக்கொண்டு வெளிகளை உருவாக்கினார். இவ்வெளிகளின் வண்ணம் கோடுகளுக்குள் கிடைத்த உணர்வுத் தளத்தைச் சில கூறுகளில் மிஞ்சுவதாகவே கருத முடியும். உலக அளவில் இவரது வெளி சார்ந்த படைப்புகளுக்கு உரிய அங்கீகாரம் கிடைத்தது. உலகம் தழுவிய அளவில் நிகழ்த்தப்பெற்ற காட்சிகளில் ஆதிமூலத்தின் வெளி சார்ந்த வண்ண ஓவியங்கள் இடம் பெற்றன. இவ்வகையான அங்கீகாரம் கிடைக்கப்பெற்ற கலைஞர்கள் மிகமிகச் சிலருள் ஆதிமூலம் ஒருவர்.

பாரதியாக, புதுமைப்பித்தனாகத் தமது கோடுகள், வண்ணங்கள், வெளிகளில் வாழும் ஆதிமூலம் இருபதாம் நூற்றாண்டின் அரிய நிகழ்வே.

